# காட்டில் மலர்ந்த கதைகள்


மானிட இயல் அறிஞர்

பிலோ இருதயநாத்





வானதி பதிப்பகம்

13, தீனதயாளு தெரு

தி.நகர், சென்னை-17.

# பதிப்புரை

காட்டில் வாழும் ஆதிவாசிகள் தங்களுக்குள் வாய் மொழியாகவே சில கதைகளைச் சொல்லி வருகிறார்கள். அவைகள் எவ்வளவு சுவை நிரம்பியவை; எவ்வளவு அற்புதமானவை; எவ்வளவு அருமையானவை என்பதை இந்தப் புத்தகத்தைப் படித்தால் உணர்வீர்கள்.

ஆசிரியர் திரு. பிலோ இருதயநாத் காட்டில் அவர் சந்தித்த ஆதிவாசிகளிடம் சுவையான கதைகள் பல வற்றைக் கேட்டிருக்கிறார். காட்டில் கல்வெட்டுக்களிலும் மலைக் குகைகளிலும்கூட அற்புதமான கதைகளுக்கு ஆதாரங்கள் பல ஆசிரியர் திரு. பிலோ இருதயநாத் அவர்களுக்குக் கிடைத்துள்ளன.

இக்கதைகள் மானிட இயல் ஆராய்ச்சியாளர்களின் ஆய்வுகளுக்குப் பெரிதும் துணை நிற்கும் என்பதில் ஐயமில்லை. சில கதைகள் துப்பறிபவைகளாகவும் விறு விறுப்பாயும் மலைவாழ் மக்களின் சாகஸங்களை எடுத்து இயம்புவதாயும் அவர்களின் வாழ்க்கை முறைகளை எடுத்து இயம்புவதாகவும், சில நீதி புகட்டுவனவாயும் உள்ளன.

இது வாசகர்களுக்குக் கிடைத்த அரியதொரு கதைக் களஞ்சியம்.

இந்த அரிய நூலை வானதி பதிப்பகத்தில் மகிழ்ச்சி யோடு வெளியிடுகிறேன். வெளியிட அனுமதியளித்த ஆசிரியர் திரு. பிலோ இருதயநாத் அவர்களுக்கு நன்றி.

இந் நூலுக்கு வாசகர்களின் வரவேற்பும் தமிழக அரசின் பாராட்டும் நிச்சயம் கிடைக்கும் என்று நம்புகிறேன்.

அன்பன்

ஏ. திருநாவுக்கரசு

வானதி பதிப்பகம்

ARCHBISHOP'S HOUSE
Santhome, Madras - 4
23rd March, 1970

Mr. Philolruthayanath is one of those rare men who are prepared to do anything and undergo any difficulty or inconvenience to achieve the object proposed for realization. He took it upon himself to study the life and history of the many tribal people who are still found in India. For this he has had to travel to far, out of the way areas, live with the people for days together, experience many inconveniences and even dangers.

The many interesting facts he has gathered and brought out in attractive publications are real contribution to the history of our country. One may perhaps look down upon the tribal life as primitive, barbarous and uncivilized, but a perusal of these books will show that in their poverty and primitive life, these people have many traits of character and life which may, at times, but to shame the so-called modern civilization. His books certainly make very interesting reading and are bound to contribute towards a greater appreciation of our country. I wish therefore that these rather original publications find a place in all the libraries of our country and the Government may recognise his work and further promote his research capacity.

I wish God's blessing on the tireless work of Mr. Philolruthayanath.

(Sd) R. ARULAPPA
Archbishop of Madras & Mylapore,
South India

## "ஆதிவாசிகளின் இதயவாசி"
## காடர்களைக் கண்ட விதம்!

மனிதர் தோன்றி, வாழ்ந்து மறைந்தனர். அதைப் போல் பல செய்திகளும், சில நல்ல மருந்துகளும், பல சரித்திரங்களும் தோன்றி ஒருவரோடே மறைந்து விடுகின்றன. சில மன்னர்கள் பேராசையால், சரித்திரச் சான்றுகள் அடங்கிய இடங்களைப் பாழாக்கினர். இக் கொடுமையைக் கண்ட மக்கள், காடுகளுக்குச் சென்று, மறைந்து வாழ்ந்தனர். அம் மக்களிடம்தான் இன்று, பண்டைக்காலத்துச் சரித்திரங்கள் மறைந்து இருக்கின்றன. மனிதன் எப்பொழுது பேசத் தொடங்கினானோ, அன்றே கதைகளும் தோன்றின. எல்லாவற்றையும்விட நம் நாட்டுக் கல்வெட்டுக்கள் அதிக அளவில் செய்திகளை அளிக்கின்றன.

சில செய்திகள் சிற்சில இடங்களில் ஆராய்ச்சிக்குச் சான்றுகள் காட்டும்பொருட்டு மீண்டும் மீண்டும் கூற வேண்டுவது அவசியமாக உள்ளது. வரலாற்றைப் படிப்பதால் ஏற்படும் சலிப்பும், சிரமமும் இந்த நூலில் தோன்ற மாட்டா! உலகின் சரித்திரம் எந்த அளவுக்கு மூடுபனிபோல் மூடியிருக்கிறது என்று இந்த நூலைப் படிக்கும்போது தெரிந்துகொள்ளுவார்கள். கடந்த 52 ஆண்டுகளாக எந்தப் பலனையும் எதிர்பார்க்காமல் செய்த தொண்டுகள்— இன்று பலன்கள் தருகின்றன. எல்லாப் பத்திரிகைகளின் ஆசிரியர்கள் காட்டிய அன்பும், உதவியும் எனக்கு விடா முயற்சியை உண்டாக்கின.

சில நண்பர்கள், "காடுகளுக்கெல்லாம் நீர் எப்படிப் போகிறீர்?" என்று கேட்பார்கள். அவர்களை என் இல்லத்திற்கு வரச்சொல்லி, என்னிடமிருக்கும் பல சான்றுகளைக் காட்டுவேன்.

எந்தப் பற்றும் இல்லாதவனாய் உள்ளத்தை மாற்றிக் கொண்டால் எங்கும் பிரயாணம் செய்யலாம். கட்டுரைகள்

எழுதுவதற்கு பொருளாதாரக் கஷ்டம் ஒன்றும் பாதிக்காது. அமைதியும், நிம்மதியும் வேண்டும். இதை அடைய ஆண்டவன் வழிபாடு தினம்—தினம் செய்யவேண்டும். காட்டில் புத்திசாலித் தைரியம்தான் வேண்டும். முட்டாள் தைரியம் உயிருக்கே ஆபத்து. அளவுக்குமேல் பொறுமையும் வேண்டும். சுமார் 50 ஆண்டுகளுக்குமுன், இன்று இருப்பது போல் வண்டி வசதிகள் இல்லை. பல கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டே பிரயாணம் செய்தேன்.

ஒவ்வோர் இடத்திற்கும் நேரில் பயணம்செய்து, பல முறை அந்தந்த மக்களைக் கேட்டுச் சந்தேகங்களை நீக்கிக் கொண்ட பின்னரே எழுதிய கட்டுரைகள் இவைகள். ஒரு தனிமனிதனால் இப்படிக் காடுகளுக்குப் போகமுடியுமா? என்ற கேள்விக்குப் பதில்—ஆண்டவன் கருணையால்தான் பயணம் செய்கிறேன். மேலும் மேலும் ஆராய்ச்சித் துறையில் ஊக்கமளித்த மறைந்த திரு. மயிலை-சீனி வேங்கடசாமி அவர்களுக்கும், திரு சாண்டில்யன் அவர்களுக்கும், எனக்கு ஊக்கமூட்டிய விவேகானந்தா கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்கள் திரு ஜெகந்நாதாச்சாரி M.A. அவர்களுக்கும், திரு வித்வான் A. S. இராமமூர்த்தி M.A. அவர்களுக்கும் இந் நூலை நன்முறையில் உருவாக்கி வெளியிட்டிருக்கும் வானதி பதிப்பகம் உரிமையாளர் திரு. திருநாவுக்கரசு அவர்களுக்கும் என் நன்றிகலந்த வணக்கங்கள்.

மிகப்பயனுள்ள இந்நூலை ஆதரித்து என் பணியை ஊக்குவிக்குமாறு எல்லாத் துறையினரையும் வேண்டுகிறேன்.

No. 2, செயிண்ட் லாசர் கோவில்தெரு, மந்தவெளி
சென்னை 600 028

பிலோஇருதயநாத்

## பொருளடக்கம்



ஆசிரியர் பிலோஇருதயநாத் காட்டில் தமது சைக்கிளிலேயே ஓய்வெடுக்கும் முறைகளில் ஒன்று.



பெட்டே கவுடே 'கோவா' மலைஜாதிப் பெண்கள்
பக்கம் — 1



ஜவ்வாது மலை பெண்கள்
பக்கம்— 22



'மசிணிகுடி ஜக்கா' அநுமான் சிலை

பக்கம் — 34



''காட்டிலே மலர்ந்த காதல்''

பக்கம் — 190

உ

# 1. மனைவிக்குச் சோதனை

நான் கோவாவுக்குச் சென்றேன். நண்பரின் உதவியால் ஜீப்பில் சுமார் இருபது மைல் காட்டின் உள்ளே சென்றேன். அங்கே 'கோவா பெட்டா கௌடே' என்ற மலைவாசிகள் வாழ்கின்றனர். அவர்களுடைய குலத்தில் சுமார் நூறு ஆண்டுகளாக ஒரு கதை சொல்லப்பெற்று வருகிறது. அந்தக் கதை கௌடே குலத்தைச் சேர்ந்த மூதாதையர்களைப் பற்றியதாம். அவனே அவர்களுடைய குடும்பத் தலைவனும். அவர்கள் வாழும் மலைப்பகுதிக்கு 'காஸல்ராக்கு' என்பது இன்று வழங்கும் பெயர். பண்டைக் காலத்தில் மைசூர்ப் பகுதியை அரசாண்ட கடம்ப அரசர்கள், கோவாவை ஆண்ட காலத்தில் 'சொகுலோ மூப்பன்' என்ற ஒரு தலைவன் இருந்தானும். அவன் அந்த மலைவாசிகளை எந்தக் குறைவுமில்லாமல் பாதுகாத்து வந்தானும். சிறந்த போர் வீரன், புலி, சிறுத்தை முதலிய எந்தக் கொடிய மிருகங்கள் வந்தாலும் தடியாலும், சிறிய பாறையாலும் அடித்துக் கொன்றுவிடுவான். அந்தத் தலைவன் என்ன கூறினாலும், உடனே மலைவாசிகள் கேட்டு அதன்படி நடப்பார்களாம்.

சொகுலோ பலசாலி மட்டுமல்லாமல் அழகுள்ளவனுங் கூட. பொறுமையும் நற்குணமும் அன்பும் உள்ளவனாக இருந்தாலும் அவனிடம் சில குறைகளும் இருந்தன.

அவனுக்கு முன் யோசனை குறைவு. அவன் பிடிவாத முள்ளவன். வாலிபனாக இருந்ததால் விளையாட்டிலும் வேட்டையிலும் அதிகப் பிரியம் கொண்டிருந்தான். திருமணம் செய்துகொள்ள அவன் விரும்பவில்லை. அவன் திருமணமின்றிக் காட்டில் அலைந்தது அந்த மலைவாசி களுக்கு ஒரு குறையாக இருந்தது. ஒருநாள் மலைவாசிகள் ஒன்றுகூடி மூப்பனாகிய சொகுலோவிடம் சென்று, 'லோ—லோ—லோ!' என்று வணங்கி, "நாங்கள் கூறும் வேண்டு கோளைக் கொஞ்சம் கேளுங்கள். எங்களிடம் நீங்கள் எவ்வளவோ அன்பு காட்டுகிறீர்கள். ஆனால் எங்களுக்கு ஒரு குறை; தங்களுடைய திருமணம் பற்றியது. நாங்கள் உங்கள் உள்ளம் ஆசைப்படும் பெண்ணைத் தேடி வருகிறோம். உங்களுக்குப் பின் எங்களுக்குத் தலைவன் வேண்டாமா?" என்று வேண்டினார்கள்.

தனக்காக மலைவாசிகள் வேண்டுவதைக் கண்டு, மனமிரங்கிய சொகுலோ, "என் அருமைத் தோழர்களே, உங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்கிறேன். எனக்காக நீங்கள் பெண் தேட வேண்டாம். அந்த வேலையை நான் பார்த்துக்கொள்ளுகிறேன். என்னிடம் உங்களுக்கு எப்படி மரியாதையும் அன்பும் இருக்கின்றனவோ அப்படியே நான் தேடும் பெண்ணிடமும் உங்களுக்கு இருக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்" என்றான்.

இதைக் கேட்டதும் மலைவாசிகள் மலை இடியும்படி "சரி" என்று குரல் எழுப்பினார்கள்.

ஒரு நாள் மலைவாசிகளுடன் சொகுலோ தன் திருமணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை நடத்திக் கொண்டிருந்தான். எங்கே பார்த்தாலும் கட்டைகளைப் போட்டு நெருப்பு உண்டாக்கினார்கள். காட்டாடுகள், பன்றி, முயல், மான், காட்டுக்கோழி எல்லாவற்றையும் பிடித்துக் கூண்டில் விருந்துக்காக அடைத்தார்கள்.

திருமண நாளன்று தன் மலைவாசிகளை அழைத்துக் கொண்டு மூப்பன் மற்றொரு மலைக்குச் சென்றான். அங்கே இருந்த மலைவாசிகளும் இந்த மூப்பனுக்கு அடங்கினவர்களாயினும், அவர்கள் நாடோடி இனத்தைச் சேர்ந்தவர்கள். அந்த நாடோடிக் கூட்டத்தில் பரம ஏழை ஒருவன் இருந்தான். அவனுக்கு ஒரு பெண் இருந்தாள். அவள் பெயர், 'கொயிங்கார் அம்கா' என்பது. ஏழையாக இருந்தாலும் நற்குணமும் பொறுமையும் உடையவள். நாளெல்லாம் காட்டில் கால்நடைகளை மேய்த்துவிட்டு, மாலையில் வீட்டுக்கு வரும் வழியில் கிடைக்கும் காய் கிழங்குகளைக் கொண்டுவந்து அவற்றை வீட்டில் வேகவைத்து தானும் உண்டு தன் தகப்பனுக்கும் கொடுப்பாள். கையே தலையணையாகவும் தரையே படுக்கையாகவும் கொண்டு படுத்துக் கொள்வாள். பெற்றோர் அவளுக்குத் தெய்வம். மூப்பன் காட்டில் பல இடங்களில் அவளைக் கண்டிருக்கிறான். அவளையே மணக்க வேண்டும் என்றும் எண்ணியிருந்தான்.

மண நாள் வந்தது. மூப்பன் தன் மலைவாசிகளை அழைத்துக்கொண்டு, பெண்ணுக்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் எடுத்துக்கொண்டு நண்பர்களுடன் நடந்தான். அந்த நாடோடிப் பெண்ணின் வீட்டை அடைந்ததும், கொயிங்கார் அம்காவின் தகப்பனாரை அழைத்து, "நாங்கள் உங்கள் வீட்டுக்குத்தான் வந்துள்ளோம்" என்றான்.

மூப்பனுடைய இந்தச் செயலைக் கண்டதும், என்ன கூறுவதென்றே தோன்றாத கிழவன், "தலைவரே, உள்ளே வாருங்கள். தரையில்தான் உட்கார வேண்டும்" என்று தன் மேலிருந்த ஒரு கந்தைத் துண்டைக் கீழே விரித்தான்.

"பெரியவரே, உங்களுக்கு விருப்பம் இருந்தால், நான் உங்கள் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ளு

கிறேன். என்னிடம் உங்களுக்கு நம்பிக்கை உண்டு என்பது எனக்குத் தெரியும். எனக்கு உங்களுடைய சம்மதம் தெரிய வேண்டும்" என்று கூறினான். பெரியவர் சரி என்று சொன்னதும் மூப்பன் அவருடைய மகளை அழைத்துத் திருமணச் செய்தியை எடுத்துக்கூறி, "கொயிங்கார் அம்கா நான் உன்னை மணக்கப் போகிறேன். நீ என் விருப்பத் துக்கும் என் கட்டளைக்கும் இணங்கி நான் கூறுவதில் குற்றம் இருந்தாலும் பொறுமையுடன் வாழ்வாயா?" என்று கேட்டான்.

"தலைவரே, என் உயிரைக் கேட்டாலும் திருமணத் துக்குப் பின் நான் கொடுக்கத் தயார். அதைவிட என் னிடம் விலை உயர்ந்தது ஒன்றுமில்லை. இது சத்தியம்" என்று அவள் கூறினாள்.

சொகுலோ தன் நண்பர்களை அழைத்து, "நீங்கள் என்னிடம் அன்பாக இருப்பதைப்போல் என் மனைவியிட மும் அன்பாக இருக்கவேண்டும். அவளையும் உங்கள் தலைவி என்று ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று எல்லோ ருக்கும் சொன்னான்.

அங்கே கூடியிருந்த பெண்கள் கொயிங்கார் அம்கா வுக்குத் திருமண அலங்காரங்களைச் செய்யத் தொடங்கி விட்டார்கள். மூப்பன் தான் கொண்டு வந்த தேனை அவளுக்குக் கொடுத்து, அவளைத் தன் மலைக்கு அழைத்து வந்தான். நாடோடி இடையர் குலத்தைச் சேர்ந்தவளாக இருந்தாலும், அவள் காட்டுத் தேவியைப் போல் காட்சி யளித்தாள். கொயிங்கார் அம்காவின் குணங்களைக் கண்டு அனைவரும் அவளிடம் அன்பாக இருந்தார்கள். 'தலைவனுக்குத் தகுந்த தலைவி' என்று அவளைப் புகழ்ந்தார்கள்.

அவள் சில மாதங்கள் கழித்து ஓர் அழகிய பெண் குழந்தையைப் பெற்ருள். தலைவனுக்குப்பின் தலைவன் இல்லையே என்று காடர்கள் வருத்தப்பட்டாலும், இனியாகி லும் ஆண் குழந்தை பிறக்கக்கூடும் என்று சந்தோஷம் அடைந்தார்கள்.

கொயிங்கார் அம்காவுக்குக் குழந்தை பிறந்து சில மாதங்கள் கழிந்தன. சொகுலோ பல முறையில் தன் மனைவியைச் சோதனை செய்தாலும் மேலும் சோதிக்க விரும்பினன். ''நான் ஏழைப் பெண்ணுன உன்னை மணந்து கொண்டதற்காக என் காட்டில் ஏதோ பேசுகிருர்கள். ஆகையால் அந்தக் குறை வராமல் பேச்சைத் திருப்ப வேண்டுமானல் ஒரு காரியம் செய்ய வேண்டும். முடியுமா?'' என்ருன்.

''ஐயா, எதை வேண்டுமானுலும் செய்கிறேன். என் உயிரே வேண்டியதாக இருந்தாலும் தருகிறேன். அதைவிட உயர்ந்தது என்னிடம் என்ன இருக்கிறது? உங்கள் இன்பமே என் இன்பம்; உங்கள் துன்பம் என் துன்பம். எனக்கு வேண்டியவர் நீங்கள்தாம்'' என்ருள்.

அதைக் கேட்டதும் சொகுலோ வில்லையும் அம்பையும் எடுத்துக்கொண்டு வெளியில் போய்விட்டான். சிறிது நேரத்துக்கெல்லாம் அந்தக் காட்டின் பணியாள் ஒருவன் வந்து, கொயிங்கார் அம்காவின் எதிரில் நின்ருன். அவ னுடைய உருவத்தையும் அவன் கையில் ஏந்திய வாளையும் பார்த்ததும் தலைவி புரிந்துகொண்டு, தன் குழந்தையை வாரி அணைத்து முத்தமிட்டு, ''கண்ணே, இனி நான் உன்னைப் பார்க்கமாட்டேன். காட்டு தேவதை உன்னைக் காப்பாள்'' என்று ஆசிகூறிக் கொலைகாரனிடம் தன் குழந்தையைக் கொடுத்தாள். எத்தகைய கொடுமையான உள்ளம்படைத் தவளாக இருந்தாலும், ஒரு தாய் தான் ஈன்றெடுத்த குழந்தையைக் கொலைகாரனிடம் கொடுக்கமாட்டாள்.

ஆனால் பொறுமையுள்ள இந்தப் பெண்தெய்வம் கொடுத்தாள். குழந்தையைக் கையில் வாங்கிக்கொண்ட பணியாள் தலைவன் கூறிய கட்டளையை நிறைவேற்றினான். 'இத்தகைய கொடிய கணவன் நமக்கு வாய்த்தானே' என்ற வெறுப்புச் சிறிதும் இல்லாமல் நடந்துகொண்டாள் கொயிங்கார் அம்கா.

சில ஆண்டுகளுக்குப் பிறகு சொகுலோ தன் மனைவியைப் பின்னும் சோதிக்க எண்ணினான்.

ஒருநாள் அவன் திடீரென்று மனைவியை அழைத்து "கொயிங்கார், இந்த மலைவாழ் மக்களைத் தலைமுறை தலைமுறையாக எங்கள் குடும்பம் காத்து வருகிறது. எனக்குப் பிறகு இந்த மலைவாசிகளைக் காக்கத் தலைவன் இல்லை. எனவே உன்னை நான் விவாகரத்துச் செய்துவிடுகிறேன். நீ எப்பொழுதும் போலவே நாடோடிக் கூட்டத்தில் போய்ச் சேர்ந்துவிடு. நான் மற்றொரு திருமணம் செய்துகொள்ளப் போகிறேன். அந்தப் பெண் மற்றொரு மலைநாட்டுத் தலைவனுடைய மகள். உன் விருப்பம் என்ன?" என்று கேட்டான்.

"ஐயா, நீங்கள் என்ன சொன்னாலும் சரி, நீங்கள் சந்தோஷமாக இருந்தால் போதும்" என்று எவ்வித வருத்தமுமின்றிப் பதில் அளித்து வணங்கினாள். தலைவன் கூறியபடி எல்லா நகைகளையும் கழற்றி வைத்துவிட்டுப் புறப்பட்டாள்.

இதைக் கேள்வியுற்ற நாடோடிக் கிழவன் தன் மகளை வழியில் வந்து சந்தித்து, ஓவென்று கதறி அழுதான். பெண்ணின் நினைவாக அன்று எடுத்து வைத்திருந்த உடையை அவளிடம் கொடுத்து, "அன்றே எனக்குத் தெரியும். இந்த மலைவாசிகளுக்கெல்லாம் தலைவனாச்சே என்று தயங்கினேன்" என்று கூறி வருந்தினான்.

கூடிய சீக்கிரத்தில் சொகுலோவுக்கு மறுமணமாகப் போகிறது என்றும், அந்த மலையிலேயே இல்லாத ரூபவதி ஒருத்தி பிச்சுளி மலையிலிருந்து வரப்போகிறுள் என்றும், அந்த மலைக்குச் செல்லப் பஞ்ஜிமிலிருந்து ஒரு பெரிய ஆற்றைக் கடக்கவேண்டும் என்றும், அந்த ஆற்றில் பெரிய பெரிய கப்பல்கள்கூடப் போகலாம் என்றும் பேசிக் கொண்டார்கள்.

பண்டைக் காலத்தில் எங்கே சென்றாலும் குதிரைகளில் மேல் பிரயாணம் செய்யவேண்டும். ஆகையால் மணப் பெண்ணை அழைத்துவர வெண்குதிரைகள் போயின.

இதற்கிடையில் ஒரு பணியாளின் மூலம் கொயிங்கார் அம்காவை அழைத்துவரச் சொன்னுன் மூப்பன்.

அவள் வந்தாள். ‘‘கோயிங்கார், பிச்சுளிமலையில் உள்ள தனவானும் தலைவனுமாகிய கும்பாரின் மகளும், அவளுடன் பல ஆட்களும் குதிரைகளும், சில நாடோடி மக்களும் வருகிறுர்கள். யார் யாரை எங்கெங்கே தங்கச் செய்யவேண்டுமோ, எப்படி எப்படி, உபசரிக்க வேண்டுமோ அப்படி அப்படி என் உள்ளம் இன்பமடைய நீதான் ஏற்பாடு செய்யவேண்டும். புதிய மனைவிக்கு நீ முதல் மனைவி என்பதே தெரியக்கூடாது. அவளுக்கு நீ பணிப் பெண்ணுகவும் இருக்கவேண்டும்’’ என்று கட்டளை யிட்டான். கொஞ்சங்கூட வருத்தம் இல்லாமல், எப்பொழுதும் போலவே அவள் நடந்துகொண்டு, தனக்கு இட்ட வேலைகளை ஒழுங்காகச் செய்து முடித்தாள்.

வெண்குதிரைமேல் பெண் வந்து சேர்ந்தாள். காட்டில் திருமணத்துக்கென்று பெரிய விருந்து நடை பெற்றது. அந்த விருந்தில் வந்தவர்கள் எல்லாரும் ‘‘இந்தப் பணிப்பெண் யார்? இவ்வளவு பொறுப்புடன் வேலை செய்கிறுளே?’’ என்று ஆச்சரியப்பட்டார்கள்.

விருந்து நடந்தபொழுது கொயிங்கார் அம்கா வேலைக்காரியைப் போல் கைகட்டிக்கொண்டு புதிய மணப்பெண்ணையே பார்த்துக்கொண்டிருந்தாள். இதை ஓரக்கண்ணால் கவனித்த சொகுலோ, "என் அருமைக் கொயிங்கார், நான் உன்னைச் சோதித்தது போதும். உன் அன்பையும் பொறுமையையும் அள்ளி அள்ளிக் குடித்தே இன்று வரையில் உயிருடன் இருந்தேன். நீயே என் மனைவி. உன்னைத் தவிர வேறொருத்தியை நான் கனவிலும் நினையேன். உன்னைச் சோதிக்க நினைத்து, உன் மகளைப் பிச்சுளி மலைக்கு அனுப்பி, அங்கே ஒரு தலைவன் வீட்டில் வளர்க்கச் செய்தேன். இவள்தான் உன் மகள்" என்று கொயிங்கார் அம்காவை அணைத்து முத்தமிட்டான். அந்தக் காட்சியைக் கண்ட அனைவரும் மகிழ்ந்தனர். ஆனால் கொயிங்கார் ஆனந்தத்தால் மயக்கமுற்றுக் கீழே விழுந்தாள். பிறகு எழுந்து கணவனை வணங்கினாள். அவளுக்கு எல்லா உடைகளையும் கொடுத்தான் தலைவன். அவள் நீண்ட நாள்வரை வாழ்ந்து பல ஆண்பிள்ளைகளைப் பெற்றாள்.

அன்று முதல் அந்த மலைவாசிகள் கொயிங்கார் அம்காவையும் சொகுலோவையும் தெய்வமாகவே வணங்கி வருகிறார்கள். அன்று முதல் இன்றுவரையில் இந்த மலையில் திருமணமாகும்பொழுது இந்தச் சம்பவத்தை எடுத்துக் கூறுவார்கள். பெண் பொறுமையைக் கடைப்பிடித்து நடக்கவேண்டும் என்று கூறிக் கொயிங்காரையும் சொகுலோவையும் இன்றும் தெய்வங்களாக வணங்குகிறார்கள்.

# 2. படகர் குலக் கண்ணகி

நான் சில ஊர்களுக்குப் பல முறைகள் சென்றாலும்,
அந்த ஊர்களில் வாழும் பெரியவர்களிடம் எப்படியாவது
சிறிது நேரம் பேசி அவர்களிடம் பல கேள்விகள் கேட்பது
வழக்கம். காரணம் ஏட்டுச் சுரைக்காயில் நான் சிறுவயது
முதல் நம்பிக்கை இல்லாதவன். எந்தச் செய்தியையும்
நானே கூடுமான வரையில் ஆராய்ச்சி செய்வது வழக்கம்.
பலமுறை கோத்தகிரியிலிருந்து, "பேட்டலாடா" போயி
ருந்தாலும் சமீபத்தில் போன போது ஒரு புதிய செய்தியை
ஒரு பெரியவர் கூறினார். "அவர், கண்ணகி அன்று சினந்
தாள்; மதுரை மாநகரை எரித்தாள். கவிகாளமேகம் கோபம்
கொண்டான்; திருமலை நாயன் பட்டினத்தில் மண்மாரி
பொழியச் செய்தான். கற்பரசியரின் கடுஞ்சினமும்,
கவி வல்லாரின் கோபக் கொதிப்பும் சும்மா விடா. சீரங்க
நாயகி என்னும் தேவிக்கு ராஜா உடையார் என்பான்
கொடிய தீங்கிழைத்தான். 'தலைக்காடு' என்னும் தலை
நகரைக் கைப்பற்றக் கருதினான். அப்பெருந்தேவி பொங்கி
னாள், சாப உரை பகர்ந்தாள். பகர்ந்ததும் தலைக்காடு மண்
மூடிப் போயிற்று. இராஜா உடையார் தனது மைந்தர்
நால்வரையும் இழந்து தவித்தான். அவர் வழி வந்தோரி
லும் சிலர் அக்கதிக்கு ஆளாயினர். அவரே மைசூர் அரச
குலத்தின் முதல்வர். இன்றும் நாளையும் அந்த இராஜ
வம்சத்தார் தசரா பண்டிகையிலே ஒன்பதாம் நாள் அச்சாப

உரைக்குப் பரிகாரமாகப் பூசனையும், பிரார்த்தனையும் தவருது நடத்தி வருகின்றனர். அந்தப் பரம்பரையில் வந்த சில படகர்கள் இன்றும், நீலகிரியில் பல பகுதிகளில் சிதறுண்டு வாழ்கின்றனர். ஆனால் நீலகிரியிலோ படகர் சமூகத்தைச் சேர்ந்த "அக்கம்மாள்" என்ற ஒரு மூதாட்டி தன் மகனுக்காக ஓர் ஊருக்கே சாபமிட்ட கதை உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

"இலுப்பைப் பூக் கிடைத்தாலும் போதும்" என்று அலையும் எனக்குச் சர்க்கரையே கிடைத்தால் விடுவேனு?" "பெரியவரே! மிக்க நன்றி. கதையைச் சொல்லவும்" என்றேன். "பண்டைக்காலத்தில் மைசூரிலிருந்து ஏழு சகோதரர்கள் நீலகிரிக்கு வந்தார்கள் என்பதற்கு இந்தப் பேட்டலாடா கல்வெட்டு நல்ல சான்ருகும். இன்று கொலக்கம்பையில் பல தேயிலைத் தோட்டங்கள் இருக்கின்றன. ஆனால் அன்று கொலக்கம்பையில் படகர்கள் அங்கிருக்கும் நிலங்களில் உருளைக் கிழங்குகளும் சில பழவகைகளும் பயிர் செய்துகொண்டு கூட்டம் கூட்டமாக வாழ்ந்தார்கள். அன்று நீலகிரியில் படகர்கள் பத்தொன்பது ஊர்களில் வாழ்ந்தார்கள்.

அவற்றில் ஒன்றுதான் இந்தக் "கொலக்கம்பை" என்பது. படகர்கள் இன்று நீலகிரியில் பல ஊர்களில் வாழ்ந்தாலும், பண்டைக்காலத்தில் அந்த 19 ஊர்கள்தாம் முக்கியமானவை. இன்று நீலகிரியில் போக்குவரத்து வசதிகள் இருப்பதுபோல், பண்டைக்காலத்தில் கிடையா. ஓரிடத்திற்குப் பிரயாணம் செய்ய வேண்டுமானல், கோவேறு கழுதைகளின் மேலும், குதிரைகளின் மேலும் பல்லக்குகளிலும்தான் போவார்கள். மேலும், பண்டைக் காலத்தில் மைசூர் அரசனுடைய ஆளுகைக்குக் கீழ்தான் நீலகிரி இருந்தது. எனவே நீலகிரியின் வரி வசூலை பேட்டலாடா வழியாகத்தான் மலைகளைத்தாண்டி சத்திய

மங்கலம் தன நாயக்கன் கோட்டை முதலிய இடங்களுக்கு மணியக்காரர்கள் கொண்டு போய்க் கொடுக்க வேண்டும்.

கொலக்கம்பையின் அருகில், "அணையமன்னு" என்ற இடத்தில், "பால சேவனன்" என்ற ஒரு மணியக்காரர் வாழ்ந்து வந்தார். இவர் பேட்டலாடாவில் அன்று வாழ்ந்த ஏழு சகோதரர்களின் கால் வழியில் வந்தவர். அந்த "பால சேவனன்" இந்தப் பத்தொன்பது ஊர்களில் வாழும் மக்களிடம் வரி வசூல் செய்து அதைக் குதிரையின் மேல் சென்று சத்தியமங்கலத்திற்கு அருகிலிருக்கும் "தன நாயக்கன்" கோட்டையில் கொண்டுபோய்ச் செலுத்துவ துண்டு. அப்படி பாலசேவனன் வரி செலுத்தப் போகும் பொழுது வழியில் ஒரு நாள் தங்கித்தான் வருவார். ஒரு முறை வழக்கம்போல் பால சேவனன் வரிப்பணத்தைச் செலுத்தி விட்டுத் திரும்பிக் காட்டுப்பாதையில் குதிரையின் மேல் வந்துகொண்டிருந்தார். வரும்பொழுது காட்டில் இருள் சூழ்ந்துகொண்டதால் உடனே அவர்தான் வழக்கமாகத் தங்கும் குடிசையை நோக்கித் தன் குதிரையைத் தட்டி விட்டார். குதிரையும் வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. திடீரென்று காட்டில் "ஐயோ அம்மா" என்ற ஒலி கேட்டது. உடனே "பாலசேவனன்" குதிரையை நிறுத்தி ஒலி வந்த திசையை நோக்கி ஓட்டினார். அங்கே அடர்ந்த காட்டில் சுமார் இருபது வயதுடைய பெண்ணொருத்தி நடுக்கத்துடன் நின்று கொண்டிருந்தாள். அவள் எதிரில் பெரிய நாக மொன்று படமெடுத்து ஆடுவதையும் கண்டார். உடனே சேவனன் அந்த கருநாகத்தை ஓட்டிவிட்டார். பிறகு, "பெண்ணே! இந்த அடர்ந்த காட்டில் ஏன் இந்த நேரத்தில் தனியாக வந்தாய். காட்டில் எடுக்க வேண்டிய விறகுகளைப் பகலில் எடுக்கக் கூடாதா?" என்று கேட்டார்.

"நீங்கள் மட்டும் வராமலிருந்தால் நான், இந்நேரம் இறந்தே போயிருப்பேன். இன்றிரவு நீங்கள் எங்கள்

குடிசையில் தங்கி உணவு அருந்திப்போகவும். என் தகப்பனுரும் உங்களேக் கண்டால் மிகவும் சந்தோஷப் படுவார்.'' என்று அவள் அவரை அழைத்தாள். பெண்ணின் போக்கும் பேச்சும் பாலசேவனனுக்குப் பிடிக்கவில்லே. எனவே தன்னுடைய குதிரையின் மேல் தாவி உட்கார்ந்து வேகமாக ஓட்டிஞர். நாகத்திடமிருந்து காப்பாற்றிய சேவனனே, அழைத்த குடும்பப் பெண்ணின் பெயர் சம்பாவதி. இவள் ஒரு குடும்பத் தலேவனுடைய மகள். அந்தக் குடும்பத் தலேவன் கூடுரைச் சேர்ந்தவன். சாதாரணமாய்க் காட்டில் இருள் சூழ்ந்து கொண்டால் பாலசேவனன், அந்தக் கூடுரில்தான் தங்குவது வழக்கம். ஆனுல் அந்தச் சம்பாவதி இந்தக் கூடுரின் தலேவனுடைய மகள் என்பது பாலசேவனனுக்குத் தெரியாது. கடைசி யில் தன் ஊரிலேயே அன்றிரவை பாலசேவனன் கழிக்கப் போகிருர்—என்று தெரிந்துகொண்டாள் சம்பாதேவி, ''என்ன சூழ்ச்சி செய்து அவர் காதலே அடையாலம்'' என்று சம்பா யோசனே செய்து கொண்டிருந்தாள். மற்ருெரு பக்கம் கடுமையாகவும் கட்டாயமாகவும் நேர்மை யாகவும் சேவனன் வரி வசூலிக்கத் தவருமல் வருவது அந்தப் பத்தொன்பது ஊர் மக்களுக்கும் கொஞ்சம் காரமாகத் தான் இருந்தது. பொல்லாதவர்கள் அவரைக் கொலே செய்ய சமயம் பார்த்துக்கொண்டே இருந்தார்கள்.

அன்றிரவு குடிசையில் பாலசேவனன் தூங்கிக் கொண் டிருக்கையில், நள்ளிரவு நேரத்தில் யாரோ குடிசைக் கதவின் கயிற்றை அவிழ்க்கும் ஓசை கேட்டது. உடனே பால சேவனன், ''யார் அது!'' என்று கேட்டார்.

இருளில் நின்றுகொண்டு, ''யாராகத்தான் இருக்கும்! என் குரலேக் கூடவா இவ்வளவு சீக்கிரம் மறந்துவிட்டீர்கள்'' என்று ஒரு பெண்ணின் குரல் கேட்டது. அந்தக் குரலே எங்கேயோ கேட்டதைப் போலிருக்கிறது என்று யோசனே

செய்வதற்குள், அந்தப் பெண். பாலசேவனன் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டாள். பாலசேவனன் என்ன செய்வதென்று தெரியாமல் விழித்தார். உடனே அவர் சற்று விலகி உட்கார்ந்தார்.

"நாகத்திடம் தப்பிய பிறகு நீ எப்படி இங்கே வந்தாய்?" என்று கேட்டார்.

"ஓ! அதுவா! கூடூர்தான் என் ஊர். இந்த ஊர்த் தலைவர்தான் என் தகப்பனர். ஆகையால் தாங்கள் என்னை மனைவியாக ஏற்றுக் கொள்ளவும்," என்று கூறினள். பாலசேவனனுக்கு உள்ளத்தில் அச்சம் ஏற்பட்டது. அவர் அவளை விரும்பவில்லை. எவ்வளவோ புத்திமதிகள் எடுத்துக் கூறினர். ஆனல் சம்பாதேவியிடம் அவைகள் எல்லாம் வீணகவே போயின. அவள், அவர் மேல் வைத்த காதலைப் பகிரங்கமாகக் கூறிவிட்டாள். சம்பாதேவி எவ்வளவு கூறியும், பாலசேவனன் சம்மதம் தெரிவிக்கவில்லை. இருவருக்கும் வாக்குவாதம் நடந்தது. "எலியைத் தேடிக்கொண்டு எலிப் பொறி வருவதில்லை. எலிதான் பொறியைத் தேடிக் கொண்டு போய்த் தானே மடிந்துவிடும். அதைப்போலவே பெண்கள் ஆண்களைத் தேடிக்கொண்டு வருவதில்லை. ஆண்கள்தான் பெண்களைத் தேடிக்கொண்டு வருவார்கள். பேச்சாலும் மயக்குவார்கள். ஆனல் நானே உங்களைத் தேடிக்கொண்டு வந்தேன். காதலைத் தீர்த்துக் கொள்ள அன்று உங்கள் மேல் வைத்த அன்புதான் காரணம். தாங்கள் என்னைக் காப்பாற்றியதற்காக, நான் நன்றி கூற வந்தேன். நன்றி உங்களிடம் அன்பாக மாறியது. கடைசியில் காதலாகவும் மாறியது. இது எங்கள் குலத்தின் பண்பு, உதவி செய்யும் குணம் உங்களுக்கு உண்டு. அதனல் எனக்கு உதவி செய்யவும். பெண்கள் காதல் கொண்டால், அதை ஆண்கள் தெரிந்துகொள்ளமாட்டார்கள். இரக்கமில்லாத கல் நெஞ்சம் ஆண்களுக்கு உண்டு. ஆனல் ஆண்கள் பெண்களின் மேல் காதல் கொண்டால்,

எப்படியும் பெண்கள் மயங்கிவிடுகின்றனர். மயங்கிய பிறகுதான் பெண்களுக்கு ஞானம் உண்டாகும். புத்தியும் உண்டாகும். இப்பொழுது என்ன சொல்லுகிறீர்கள்? என்னைத் திருமணம் செய்துகொள்ளவும்'' என்று கேட்டாள். இவைகளை எல்லாம் கேட்ட பாலசேவனன், என்ன கூறுவதென்றே தெரியாமல் விசனமுற்றுர்.

''பெண்கள் ஓர் ஆணின் மேல் காதல் கொள்வதற்கு முன் அவன் திருமணமானவனு? அல்லது ஆகாதவனு? என்று யோசனை செய்யவேண்டும். நானே திருமணமானவன். என்னிடம் காதலைப் பெறமுடியுமா? நான் சத்தியத்திற்கும் ஆண்டவனுக்கும் பயந்தவன். என்னை மறந்துவிடு. நான் உன் அண்ணன்'' என்று கூறி வாதாடினுர். இப்படிப் பேசிக்கொண்டே இருந்தவள், திடீரென்று எழுந்து கோபத்துடன் வெளியில் சென்றுள். 'பெண் என்றுல் பேயும் மனமிரங்கும்' இந்தப் பேய் என்னிடம் மனமிரங்கவில்லை. இவர் உலகில் இருந்து வாழ்ந்தால்தான் என்ன, இறந்து மண்ணில் மறைந்தால்தான் என்ன? இரண்டும் ஒன்றேதான். என்று சிந்தித்தவாறே சென்றுள். பெண்கள் மனம் வைத்தால் ஆக்கவும் முடியும், அழிக்கவும் முடியும்; பெண்களிடம் ஆண்கள் ஒரு நொடியில் ஏமாந்து போவதுண்டு. பெண்கள் ஆண்களின் மேல் வைக்கும் பாசம் தீவிரமானது. ஆனுல் ஆண்கள் பெண்களின் மேல் வைக்கும் பாசம் அவ்வளவு தீவிரமானது அன்று. ஆகவேதான் பாலசேவனனை எப்படித் தீர்த்துக் கட்டுவது என்று அவள் தீவிரமாகச் சிந்தனை செய்தாள். அவள் சிந்தனைக்கு வரி கொடுக்காது மோசம் செய்யும் ஊர் மக்களும் உடந்தையாக சதி செய்தார்கள்.

பாலசேவனன் மறுநாள் காலையில் எழுந்து காலைக் கடன்கள் முடிக்க வெளியில் போயிருந்த சமயத்தில் சேவனன் தங்கி இருந்த குடிசைக்குள் நுழைந்தாள் சம்பா!

அவனுடைய பொருள்களை ஒருமுறை உற்றுப்பார்த்தாள். ஒரு யோசனை தோன்றியது. கொஞ்சங் கொஞ்சமாக மனிதனைக் கொல்வதற்கு வேண்டிய காட்டுமூலிகைகள் தேர்ந்தெடுப்பதில் காட்டில் வாழும் குரும்பர்கள் மிகவும் கெட்டிக்காரர்கள். ஆகையால் பாலசேவனனின் தாயார் வழிக்குக் கட்டிக்கொடுத்த பலகாரத்தில் நஞ்சு உடைய மூலிகைகளைக் கலந்துவிட்டாள் சம்பாதேவி. அந்த மூலிகை ஆளை உடனே கொல்லாது, கொஞ்சங் கொஞ்சமாகத்தான் கொல்லும். இந்த சூதைத் தெரிந்து கொள்ளாமல் தன் தாயார் கொடுத்த பலகாரத்தைப் பசியின் கொடுமையால் பாலசேவனன் அள்ளி அள்ளிச் சாப்பிட்டு விட்டார்.

மறுநாள் பாலசேவனன் கூடுர்த்தலைவனிடம் விடை பெற்றுக்கொண்டு, தன் இல்லம் வந்து சேர்ந்தார். வீட்டுக்கு வந்ததும், "ஏதோ மயக்கமாக இருக்கிறது!" என்று கூறிப் படுக்கையில் படுத்தார். ஆனால் அவர் மறு படியும் எழுந்து நடக்கவே இல்லை.

பாலசேவனன் இறந்தார் என்ற செய்தியைக் கேட்டதும் வருந்தியவர்கள் 25 சதவீதம் என்றால், வரி கொடுக்காமல் திருட்டுக்கணக்கு எழுதிப் பிழைத்த 75 சதவீதத்தினர் மகிழ்ந்தனர்.

நாட்கள் நடந்தன. மாதங்கள் மறைந்தன, "தன் மகன் வஞ்சகத்தால் நஞ்சு கொடுக்கப்பட்டுச் சாகடிக்கப் பட்டான்" என்பதைப் பாலசேவனின் தாயார் தெரிந்து கொண்டாள். உடனே காளியைப்போல் எழுந்து கண்ணகியைப் போல் மாறினாள். தன் மகனை நஞ்சிட்டுக் கொல்லக் காரணமாயிருந்தவர்களின் ஊர்களைச் சபித்தாள். அந்தச் சாபம் வீணாகவில்லை. கொலைக்குக் காரணமாயிருந்த ஊர்கள் அத்தனையும் தொத்துநோயால் வருந்தி அழிவதைக்

கண்டாள். தொத்துநோய் காட்டுத்தீயைப்போல் பரவியது. பத்தொன்பது ஊரும் மக்களில்லா மயானமாயின. அந்த ஊர்களிலும் நல்லவர்கள் இருப்பார்கள் அல்லவா? ஆகையால் நல்லவர்கள் அந்த ஊர்களைக் காலி செய்துவிட்டுக் ''கோடேரி'' என்ற ஊருக்குப்போய் விட்டார்கள். இன்றும் அந்தச் சந்ததியாரை நீலகிரி—''கோடேரி'' என்ற ஊரில் காணலாம் என்று முடித்தார்.

# 3. மணமகனை சோதிக்கும் மங்கைகள்

சிம்லாவில் என் நண்பர் இல்லத்தில் சில நாட்கள் தங்கி இருந்தேன். அப்பொழுது அவர், "நான் இன்னும் இரண்டு நாட்களில் சுமார் ஐந்நூறு மைல் தூரத்திலிருக்கும் இமயமலைச் சாரலில் ஒரு காட்டுப் பாங்கான இடத்திற்கு "லோடு" எடுக்கப் போகிறேன். அங்கே பல மலை ஜாதியார் கள் வாழ்கிறார்கள். அவர்கள் மலையில் தங்களைப் பல இன மக்கள் என்று கூறிக்கொண்டு, தங்களுக்கென்று ஒரு தனிப் பழக்க வழக்கங்களையும் வைத்துக் கொண்டிருக்கின்றனர்! ஆகையால் அங்கே நீங்கள் வந்தால் நலம்" என்று கூறினார்.

நானும் அவருடன் இமயமலைச் சாரலுக்குப் பிரயாண மானேன்.

## சேற்றை அடிக்கும் பெண்கள்

இந்த இமயமலைவாசிகளிடம் அடிக்கடி போகும் சில லாரி ஓட்டிகள் ஒன்றாகக் கூடுமிடம் ஒன்று வழியில் இருக் கிறது. அங்கு இரண்டு மூன்று நாட்கள் தங்கினால் போதும். எல்லா லாரி டிரைவர்களையும் சந்தித்துப் பேசி விடலாம்.

அப்படி "லாரி செண்டரில்" பேசிக் கொண்டிருக்கும் போது, ஒருவர் கூறியது: "இந்த இமயமலை அடிவாரங்களில் வாழும் தோலி மலைவாசிகளில் பல பிரிவுகள் இருக்கின்றன. அவற்றுள் ஒருவகை இன மக்கள் குறிப்பிட்ட காலங்களில் வேட்டைக்குச் செல்லுகிறார்கள். வேட்டைக்குச் சென்றவர்கள் வெறுங்கையுடன் திரும்பினால் மலைவாசிப் பெண்கள் அவர்கள்மீது சாணத்தையும் சேற்றையும் மற்ற பொருள்களையும் எடுத்துக் கேலியாக அடிப்பார்கள்.

## ஆனந்த நடனம்

ஆனால் பெரிய மிருகங்களை வேட்டையாடித் தங்கள் தோளின்மேல் கொம்பில் கட்டித் தூக்கி வருபவர்களை "ஓஹா!" வென்று பெண்கள் கூக்குரல் கொடுத்தவாறே எதிரில்போய் அழைத்து வருவார்கள். வேட்டைக்குச்சென்று வந்த ஆண்களுக்கு வெந்நீர் வைத்து நீராட்டி, வேட்டையில் கிடைத்த இறைச்சியைச் சமைத்து மதுபானங்களுடன் சாப்பாடு போடுவர். வயதான ஆண்களும் பெண்களும் குடித்த கள் வெறியில் மூழ்குவார்கள்.

அன்றிரவே மற்றொரு பக்கத்தில் திருமணமாகா வாலிபர்களும் பெண்களும் அந்தந்த ஊர்களின் நடுவில் கட்டி இருக்கும் ஒரு பெரிய குடிசையில் இன்பமாகவும் ஆனந்தமாகவும் ஒருவரையொருவர் அணைத்துக்கொண்டு பல நடனங்கள் ஆடுவார்கள். பிறகு யார் யார் மேல் காதல் கொண்டு ஆனந்தமாக இருந்தார்களோ அவரவர்கள் சில நாட்களுக்குப்பின் திருமணம் செய்துகொள்ளுவார்கள். இன்பம் எங்கே? ஆனந்தம் எங்கே? என்று காணச் சில நகரங்களில் ஆயிரமாயிரமாகச் செலவு செய்து இரவு நடனங்களை நடத்துகிறார்கள். ஆனால் பணச் செலவில்லாமல், தெய்வீகக் காதலையும் இன்பத்தையும் பல காடுகளில் கடவுள் உண்டாக்கியிருக்கிறார்" என்று கூறினார் நண்பர்.

## வேட்டை வீரன்

இதைப் போலவே வேட்டையில் வெற்றி பெற்று வரும் ஆண்களைப் பாராட்டுவது இமயமலைவாசிகளிடம் மட்டும் உள்ள பழக்கம் அன்று.

தென்னிந்தியாவிலும் சேலம் சேர்வராயன் மலைவாசிகள், ஜவ்வாது மலைவாசிகள், வயநாடுவாசிகள், கள்ளிக் கோட்டை, பூனு, லம்பாடிகள் முதலிய மலையில் வாழும் மலை வாசிகளிலும் பெண்கள் வேட்டையில் வெற்றிபெற்று வருப வனைத் திருமணம் செய்து கொள்வர். வேட்டையில் தோல்வி அடைந்த வாலிபனைத் திருமணம் செய்துகொள்ள எந்தப் பெண்ணும் சாதாரணமாக விரும்புவதில்லை. இதை நான் அந்த நண்பருக்கு எடுத்துக் கூறினேன்.

## குடிசையில் கும்மாளம்

''உங்களுக்குக் 'கட்டாவுக்குக் குஷி' என்பதுபற்றித் தெரியுமா?'' என்ருர் நண்பர். நான் தெரியாது என்றேன்.

இந்த இமயமலைப் பகுதியில் மற்ருெரு மலைவாசிகள் இருக்கிருர்கள். அவர்களுக்குச் சாதாரணமாய் இறைச்சி தவிர வேறெதுவும் சாப்பிடக் கிடைப்பதில்லை. சில சமயங் களில் காட்டுக் கிழங்குகளையும் காட்டில் பயிராகும் சில பழங் களையும்தான் சாப்பிடுவார்கள். இவர்களும் தோலி இனத் தைச் சேர்ந்த ஒரு பிரிவினர்தான். ஆனுல் பேசும் மொழியில் சற்று வேறுபாடு உண்டு. இவர்கள் பருவமடைந்த ஆண் பெண்களைத் தனியாகக் கட்டப்பட்டிருக்கும், ''கட்டா'' என்ற ஒரு பெரிய குடிசையில் கூத்தாடவும் கும்மாளமடிக்கவும் விட்டுவிடுவார்கள். அங்கே விரும்பிய ஆண்களும் பெண் களும் ஒன்ருகக் கூடி வாழ்வார்கள். அதனுல் கருவுற்ற பெண் பிறகு தன் காதலனையே மணப்பாள். கணவனும்

மனைவியுமானவர்கள் "கட்டா"வை விட்டு வெளியில் வந்து ஒரு தனி குடிசையை அமைத்துக்கொண்டு குடும்பம் நடத்து வார்கள். திருமணச் சடங்கு எதுவும் கிடையாது. மேலும் "கட்டாவில் ஆண்களும் பெண்களும் தமக்கு விருப்பமான வர்களுடன் இரவில் நடனமாடிக் கும்மாளமடித்தாலும், பகலில் அவரவர்கள் குறித்த வேலைக்குப் போக வேண்டும்" என்று அவர் கூறினார்.

## சோதனை

மேலும் இம்மலைப் பகுதியில் தண்ணீரின்மேல் பாலம் கட்டும் "மலைச்சாரல் ஜாதி"யாரிடம் மற்றொரு புதுமை யான பழக்கமிருக்கிறது. திருமணத்திற்கென்று பெண் கேட்க வரும் மணமகனை நடுத்தர வயதுள்ள மங்கையர்கள் நான்கு ஐந்துபேர் கூடிப் பரிசோதிப்பார்கள். அந்தப் பரிசோதனையின் உயர்ந்த நோக்கம் மணமகன் ஆண்மை உடையவன்தானா? இல்லையா? என்பதை அறிவதாகும்.

கணவனுக்கு ஆண்மை இருக்க வேண்டும் என்று பெண்கள் கருதுவதின் நோக்கம் தங்களுடைய காட்டில் ஆண் குழந்தைகள்தான் அதிகமாக வளர வேண்டும் என்பதாம். அந்த மணமகன், அந்தப் பரிசோதனைக்கு வரும் நடுத்தர வயதுள்ள இரண்டு மங்கையர்களிடம் தன்னுடைய ஆண்மையைத் தொடர்ந்தாற் போல் காட்ட வேண்டும். பிறகு மறுநாள் காலையில் எழுந்து ஓய்வு கொள்ளாமல் எப்பொழுதும் போலவே மலையில் மற்றவர்களுடன் காரியங் களைக் கவனிக்க வேண்டும். இந்த இரண்டு மங்கையர் களிடம் இவன் வெற்றி பெற்றான் என்று தெரிந்த பிறகு திருமணம் தடபுடலாக நடைபெறும்.

## தோல்வி அடைந்தால்...

"அந்த நடுத்தர வயதுள்ள மங்கையர்களிடம் தோல்வி அடைந்தால் அவனுக்குத் திருமணம் கொஞ்ச காலம்

தள்ளிப் போடப்படும். சிறிது காலத்திற்குப்பின் மறுபடியும் அவனை வேறு நடுத்தர வயதுள்ள பெண்கள் இரண்டுபேர் கூடிப் பரிசோதனை நடத்தியதும் அதில் வெற்றி அடைந்த பின் திருமணம் நடைபெறும்'' என்று கூறினார் நண்பர்.

''இதைப் போல் பரிசோதனை செய்யும் பழக்கம் தென்னிந்தியாவில் வேறு விதமாக உள்ளது: அதாவது சில ஆண்கள் சேர்ந்து மணமகனைப் பரிசோதனை செய்வார்கள். சில மலைவாசிப் பெண்கள் தாங்களே ஆண்களின் வீரத்தைத் தெரிந்துகொண்டு காதலிப்பது உண்டு.

சில மலையில் வாழும் பெண் தான் வளர்க்கும் எருதைப் பிடித்து நிறுத்தும் ஆண்மகனைத் திருமணம் செய்து கொள்ளுவாள். அல்லது தங்கள் பாடியில் இருக்கும் சில பெரிய பெரிய பாறைகளைத் தூக்கும்படி செய்து ஆணின் வீரத்தைத் தெரிந்து கொள்வதுண்டு'' என்று நான் அவர்களுக்குத் தமிழ்நாட்டு மலைவாசிகளைப் பற்றி எடுத்துக் கூறினேன்.

# 4. ஐயோ வேடப்பா!

ஜவ்வாது மலையில் வாழும் பழங்குடி மக்களை சந்திக்கும் நோக்கத்துடன் ஒரு தடவை அங்கு சென்றிருந்தேன்.

அங்குள்ளவர்கள் தங்களை மலையாளிகள் என்று சொல்லிக் கொள்கிறார்கள். ஆனால் கேரளத்தில் வாழும் மலையாளிகளுக்கும் இவர்களுக்கும் எந்த விதமான சம்பந்தமும் கிடையாது. எந்தக் காலத்திலோ சமவெளியிலிருந்து மலைப் பகுதிக்கு குடியேறிவிட்டதாகக் கருதப்படும் இவர்கள் நம்மைப்போலவே தமிழர்கள்தான், மலைக்கு வந்து குடியேறி விட்டதால் இவர்கள் தங்களுக்கு மலை—ஆளிகள் (மலையை ஆள்பவர்கள்) என்று காரணப்பெயர் இட்டுக்கொண்டார்கள் போலும்!

இந்த மலையாளிகள் எங்கிருந்து வந்தார்கள்? ஏன் வந்தார்கள் என்பன போன்ற கேள்விகளுக்கு இதுவரை ஆராய்ச்சியாளராலும் அறுதியிட்டுக் கூற முடியவில்லை. நீலகிரியில் வாழும் தோதுவரைப் போன்று இவர்கள் தங்களைப் புராதன மலைஜாதி மக்கள் என்றும் சொல்லிக் கொள்வதில்லை. இவர்களிடையே வழங்கும் கர்ண பரம்பரைக் கதைகளிலிருந்தும் இவர்கள் சமவெளியிலிருந்து வந்து குடியேறியவர்கள்தான் என்று யூகிக்க வேண்டியுள்ளது. சுமார் 15 தலைமுறைகளுக்கு முன்னால் அதாவது தென்னாட்டில்

முகமதியர் ஆதிக்கம் வலுத்திருந்த காலத்தில், மலைகளில் குடியேறியதாகக் கருதப்படும் இவர்கள் தொண்டை மண்டலத்தைச் சேர்ந்த வேளாளர் என்றும் சொல்லப்படுகிறது. வேளாளரைப் போலவே மலையிலும் இவர்கள் பயிர்த்தொழில்தான் செய்கிறார்கள். இவர்களது நாட்டாண்மைக்காரருக்கு "கவுண்டிக்கி" என்றும் "மூப்பன்" என்றும் பெயர்!

ஜவ்வாது மலையில் மட்டுமின்றி வேறு சுமார் 800 மலைகளிலும் மலையடிவாரங்களிலும் இவர்கள் சிதறுண்டு வாழ்கிறார்கள். இவர்கள் வசிக்கும் இடங்களுக்கு தகுந்தவாறு இவர்களுக்குரிய அடைமொழிகளும் வேறுபடுகின்றன. உதாரணமாக கொல்லிமலையில் உள்ளவர்கள் கொல்லி மலையாளிகள் என்றும், பச்சைமலையில் உள்ளவர்கள் பச்சை மலையாளிகள் என்றும் வழங்கப்படுகிறார்கள்.

ஜவ்வாது மலைக்குப் புறப்பட்ட நான் பஸ்ஸை விட்டு இறங்கியதும் வழியைக் கேட்டுக்கொண்டே நடக்க ஆரம்பித்தேன். வழியைப் பலர் காட்டினார்கள். இரண்டு மைல் தூரம் வரப்புகளின் மேலும், பலரது குடிசைகளுக்குப் பக்கத்திலும் நடந்தேன். இறுதியில் மலையடிவாரம் போய்ச் சேர்ந்தேன்.

எனது அடுத்த முயற்சி மலையாளிகள் வாழும் மலை உச்சியை அடைதல். நாவரட்சியைத் தடுக்க உப்பிட்டு உலர்த்திய மாங்காய் வற்றலைப் பையிலிருந்து எடுத்து வாயில் அடக்கிக்கொண்டு நடக்க ஆரம்பித்தேன். அநேகம் இடங்களில் செங்குத்தான மலைகளைக் கடக்கும் பொழுது ஆயாசம் ஏற்பட்டது. மேலே மேலே செல்லச் செல்ல இன்பமான குளிர் காற்றையும் அனுபவித்தேன். கடைசியில் வழித் துணையுடன் ஜவ்வாது மலை உச்சியை அடைந்தேன். நான் வந்த நேரம் அன்று இரவு முழுவதும் விடாமல் மழை பெய்துகொண்டே இருந்தது.

யாரோ ஆகாயத்திலிருந்து கற்களை வீசி அடிப்பது போல கல்மழை கொட்டியது.

மறுநாள் காலை சூரியோதய நேரம்; வெளியில் கிளம்பத் தயாராகத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டிருந்தேன். வயதான ஒருவரும் என்னுடன் பேச்சுத் துணைக்கு இருந்தார். அப்போது சில பெண்கள் வெண்கலக் குடங்களில் தண்ணீர் மொண்டு, அவ்வழியே வந்தார்கள். காலைக் கதிரவன் ஒளியில் வெண்கலக் குடங்கள் பளிச்சிட அவர்கள் ஒய்யாரமாகக் கைவீசி நடந்து வந்த ரம்மியமான காட்சி என் கவனத்தைக் கவர்ந்தது. உடனே என்னையறியாமல் கைகள் காமிராவின் மேல் போயின. 'கிளிக்' என்று புகைப்படமும் பிடித்தேன். என் பக்கத்தில் இருந்த பெரியவர் அதைப் பார்த்து ரசித்தவாறே 'ஊம்' கொட்டினார். பிறகு என்னைப் பார்த்து "உங்களுக்கு ஜவ்வாது மலை சப்த கன்னிகள் கதை தெரியுமா?" என்று கேட்டார்.

"அது என்ன கதை?" என ஆச்சரியத்துடன் திருப்பிக் கேட்டேன்.

அவர் சொன்னது இதுதான்:—

பண்டைக்காலத்தில் மலையில் ஒரு 'கவுண்டிக்கி' (ஊர்ப் பெரியதனக்காரர்) ஒருவர் இருந்தார். அவரை மூப்பன் என்றும் சொல்வது உண்டு. அவருக்கு ஏழு பெண்கள். அழகிலும், உருவிலும், புத்தி கூர்மையிலும் எழுவரும் கெட்டிக்காரிகள். அந்தக் காலத்தில் ஜவ்வாது மலை இன்னும் அடர்ந்த காடாக இருந்தது. காட்டில் எங்கு சென்றாலும் சரி, இந்த ஏழுபெண்களும் ஒரே வரிசையாக செல்வார்களாம். அந்தப் பழக்கம் இன்றும் பல பெண்களிடம் உண்டு. கவுண்டிக்கிக்கு ஏராளமான நிலமும் கால்நடைகளும் இருந்தன. கால்நடைகளை கவனிக்கும் பொறுப்பு ஒரு இளைஞனுடையது. பெற்றோரை

இழந்த அந்த அநாதைப் பையனை வேலைக்காரனாகக் கருதாமல் தன் மகனைப் போலவே கவுண்டிக்கி வளர்த்து வந்தார். வயதாக ஆக வேட்டையிலும் அம்பு எறிவதிலும் வல்லவனாக மாறினான் அவன். ஆடுமாடுகள் பயமின்றி காட்டில் மேய்ந்தன. ஏனென்றால் புலி வேட்டையிலும், சிறுத்தை வேட்டையிலும், காட்டுப் பன்றி வேட்டையிலும் அவன் மிகவும் திறமைசாலி. அவனுடைய திறமையைக் கண்ட ஜவ்வாது மலை மலையாளிகள் அவனை அன்று 'வேடப்பா!' என்று காரணப் பெயரிட்டே அழைத்தார்கள். மலையிலும் காட்டிலும் ஓடி ஆடி வேட்டையாடுவதால் அவனுடைய உடல் கட்டுடனும், திடமாகவும் இருந்தது. கவுண்டிக்கியின் ஏழு பெண்களும் வேடப்பனை "அண்ணே!" என்று அழைத்தனர்.

வலிவும் வனப்பும் மிக்க வேடப்பனை ஏழு பெண்களும் ஒருவருக்குத் தெரியாமல் ஒருவர் காதலித்தார்களாம். வேடப்பனுக்கு இது தெரிந்தபோது அவன் மிகவும் வேதனையடைந்தான். அவர்களை அவன் சகோதரிகளாகப் பாவித்துப் பழகியது முக்கியமான காரணம். தன்னை மகனைப்போல் வளர்த்து வரும் எஜமானுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்யலாமா என்பது இரண்டாவது காரணம். சகோதரிகள் அதைப்பற்றி எங்கு சிந்தித்தார்கள்? வேடப்பனைப்பற்றிய காதல் தீயுடன் அவர்களுக்குள் பொறாமைத் தீயும் வளர்ந்தது!

"அவளைத்தான் அவன் திருமணம் செய்ய விரும்புகிறான்" என்று ஒருத்தி நினைத்தாள்.

'இளையவளைத்தான் திருமணம் செய்ய விரும்புகிறான்' என்று மூத்தவள் நினைத்தாள்.

இப்படியே ஒருத்தியின் மேல் ஒருத்திக்குச் சந்தேகம் வளர்ந்தது. ஆனால் வேடப்பனோ எல்லோரிடமும் சகஜமாய்ப் பேச ஆரம்பித்தான். இந்தச் சகோதரிகளின்

பொறுமை காட்டுத் தீயைப்போல் வளர்ந்து ரகசிய மாகவே எரிய ஆரம்பித்தது. "இதைப்போல ரகசியமாக மறைந்துபோன பண்டைக்கால சம்பவங்கள் எத்தனையோ" என்று நினைத்துக் கொண்டேன்.

விஷயம் கவுண்டிக்கிக்கும் தெரிந்தது. வேடப்பனை ரகசியமாகக் கண்காணித்த அவர் அவனைப்பற்றிய சந்தேகங்களைப் போக்கிக்கொண்டார். வேடப்பனுக்கு வேறொரு பெண்ணைத் திருமணம் செய்து வைத்துவிட்டால் சகோதரிகளிடையே சச்சரவு நீங்குமென்று நினைத்தார். அதற்கு வேடப்பனும் சம்மதித்தான். ஆனால் பொறுமை யால் வெந்த சகோதரிகள் அவனது உணவில் விஷம் வைத்துக் கொன்றுவிட்டார்களாம்.

இது நடந்து சில நாட்களுக்குப் பின் காட்டில் ஒரு பெண் தனியே விறகு பொறுக்கிக் கொண்டிருக்கையில் ஒரு புலி அவளைக் கண்டு உறுமியதாம். அவள் பயத் தால் நடுங்கினாள். வேடப்பன் மட்டும் உயிரோடு இருந் தால் இந்தப் புலி இப்போது உயிரோடு இருக்குமா என்று எண்ணிய அவள், "ஐயோ வேடப்பா!" என்று கத்தி னாளாம். உடனே ஒரு பெரிய பாறை புலியின்மேல் விழுந்து புலியைக் கொன்றுவிட்டதாம். இந்தச் செய்தி காடு முழு வதும் பரவியது. அன்று முதல் காட்டுக்குச் செல்பவர்கள் "வேடப்பன் துணை" என்று சொல்லிக்கொண்டு போனால் எவ்வித ஆபத்தும் உண்டாகாது என்று நம்புகிறார்கள். வேடப்பன் சிலையை இன்றும் இந்த ஜவ்வாது மலையில் கையில் அம்புடன் காணலாம்" என்று கூறினார் பெரியவர்.

கதையைக் கேட்டுக் கொண்டிருந்த நான் "வேடப்பன் துணை" என்று கூறிக்கொண்டு எழுந்து வேடப்பன் சிலை யைக் காணப் புறப்பட்டேன். கல்வெட்டுடன் கூடிய அந்தச் சிலையையும் கண்டேன். இன்பம் கொண்டேன்.

# 5. தவளை மூப்பன்

ஆதியில் மக்கள் தோன்றியதும் பெண்தான் தலைவியா யிருந்து கூட்டத்தை நடத்தி வந்தாள். சில ஆண்டுகளுக் குப்பின் அந்தக் கூட்டத்திற்கு ஆண்தான் தலைவன் என்ற முறை உண்டானது. தலைவனுக்கு "மூப்பன்" என்ற பெயர் உதயமானது. மேற்குத் தொடர்ச்சி மலையில் கோவாப் பகுதியில் வாழும் "பெட்டா கௌடே" என்ற இன மக்கள் இன்றும் தங்கள் தலைவனை மூப்பன் என்றே அழைக் கின்றனர். இவர்கள் கோவாவின் சுற்றுப் பகுதியிலிருக்கும் காடுகளில் சிதறுண்டு பல வேலைகளைச் செய்தாலும் அதிக மாகச் செய்வது பயிர்த் தொழில்தான். இவர்களிடம் பழகும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தபொழுது இவர்கள் தவளைகளைக் கொல்வதில்லை என்பதை அறிந்தேன். "தவளைகளில் சில எங்களுக்கே தெரியாமல் எங்கள் மூப்பனாகவும் தலைவனாக வும் இருக்கக்கூடும்" என்று கூறினார்கள். காரணம் கேட்ட தற்கு ஒரு ரசமான கதையும் கூறினார்கள்.

"பல நூற்றாண்டுகளுக்கு முன் எங்கள் முன்னோர் வங்காளத்திலிருக்கும் கவுட நாடு என்ற ஊரிலிருந்து மைசூர் பகுதிகளுக்கு வந்தவர்களாம். கடம்ப அரசர்கள் காலத்திற்குப் பிறகு எங்கள் முன்னோர்கள் விரோதி அரசனுக் குப் பயந்து கோவாவுக்கு அகதிகளாக ஓடி வந்துவிட்டனர். எங்கள் குடும்பத்தில் தவளைகளைக் கொல்வதில்லை. ஏனென்றால், பல்லாண்டுகளுக்கு முன் ஒரு மூப்பன் எங்கள்

கூட்டத்தில் இருந்தான். அவனுக்கு அழகான பெண்கள் ஐந்து பேர் இருந்தார்கள். அவர்களுக்குள் கடைசிப் பெண் மட்டும் அழகிலும், புத்திக்கூர்மையிலும், அன்பிலும் தலை சிறந்தவளாக விளங்கினாள். எப்பொழுதும் அவளைப் பார்த்துக்கொண்டே இருக்கும் பெற்றோர்கூட, "இவள் என்ன தேவதையோ! அழகு இருக்கும் பெண்களுக்குத் தலைக்கனமிருக்கும் என்பார்களே! ஆனால் இவளோ முற்றிலும் மாறாக அல்லவா இருக்கிறாள்?" என்று அடிக்கடி யோசிப்பார்கள். அவளுடைய அழகைக் கண்டு "சுந்தரி" என்ற பெயரை வைத்தார்கள்.

மூப்பனின் மலைக்கு அருகில் ஓர் அழகான காடு இருந்தது. அங்கே காட்டுப் பூக்களும், நீரூற்றுகளும், குளங்களும், காட்டுப் பறவைகளும் நிறைந்திருந்தன. சுந்தரி அடிக்கடி அந்தக் காட்டின் அழகைக் கண்டு ஆனந்த மடைவதுண்டு. அங்கு தன்னுடைய விளையாட்டுச் சாமான்களைக் கொண்டு சென்று விளையாடுவது அவள் வழக்கம். அப்படி ஒரு நாள் விளையாடிக் கொண்டிருக்கும்பொழுது, அவளுடைய விளையாட்டுப் பொருள்களில் ஒரு பொம்மை அங்கே இருந்த ஒரு கிணற்றில் விழுந்துவிட்டது. அதைக் கேணியிலிருந்து எடுக்க முடியாததால் அவள் உரக்க அழுது கொண்டிருந்தாள்.

அவள் அழும்பொழுது "ஓ! காட்டு ராணியே! நீ ஒரு மூப்பனுடைய மகளாக இருந்துகொண்டு இப்படி அழக் கூடாது! ஏன் அழுகிறாய்?" என்று ஒரு குரல் கேட்டது. சுந்தரி உடனே சுற்றும் முற்றும் பார்த்தாள். ஒருவரையும் காணோம். அப்பொழுது கிணற்றிலிருந்து ஒரு பெரிய தவளை வெளியில் வந்தது. அதைக் கண்டதும் "தவளையே! நீயா இப்பொழுது பேசினாய்? என்னுடைய பொம்மை இந்தக் கேணியில் விழுந்து விட்டது. அதற்காகத்தான் அழுகிறேன்" என்று சுந்தரி கூறினாள். அதைக் கேட்டதும்

தவளை, "குழந்தாய்! அழாதே. நான் ஒரு தந்திரம் சொல்லு கிறேன் கேள். நான் உன் பொம்மையை எடுத்துத் தருகிறேன். ஆனால், நீ எனக்கு என்ன உதவி செய்வாய்?" என்று கேட்டது. அதைக் கேட்டதும் சுந்தரிக்கு சந்தோஷம் உண்டானது.

"உனக்கு என்ன வேண்டுமோ கேள். தருகிறேன். பணம் வேண்டுமா?" என்று கேட்டாள் சுந்தரி.

"எனக்கு ஏன் பணம்? நான் என்றும் உன் பக்கத்தி லேயே இருக்க வேண்டும். உன்மேல் எனக்கு அளவில்லாத அன்பும், பாசமும் ஏற்பட்டு விட்டன. உலகமிருக்கும்வரை நான் உன்னை மறக்கவோ மறுக்கவோ முடியாததோர் பாசம் என் உள்ளத்தில் குடிகொண்டு விட்டது. நான் உன் அருகில் இருக்க வேண்டும். நீயும் என் அருகில் இருக்க வேண்டும். காமம் காற்றில் பறந்துவிடும்; பாசமோ ஏக்கத்தில் கொண்டு போய்விடும். "கண் பார்வையி லிருந்து ஒருவரோ, ஒரு பொருளோ மறைந்தால் உள்ளமும் அவரை மறந்துவிடும்" என்று அடிக்கடி மானிடர்கள் சொல்லுவார்கள். ஆனால் எங்கள் இனத்தில் (தவளை இனம்) அப்படி நடந்துகொள்ள மாட்டோம். நீ என்னிடத்தில் பாசத்தோடு இருந்தால் போதும். என்றும் எந்த நேரமும் என்னை விட்டுப் பிரியக்கூடாது; இதுதான் நான் உன்னைக் கேட்கும் வரம்.

அப்படி இருக்க உனக்கு சம்மதமிருந்தால், நான் என் உள்ளத்தையும் உயிரையும் கொடுப்பேன். உடனே தண்ணீரில் குதித்துப் பொம்மையையும் எடுத்துத் தருவேன்" என்று கூறியது தவளை.

"தவளை என்னவோ உளறுகிறது. அதன்படி யார் நடக்கப் போகிறார்கள்?" என்று நினைத்தாள் சுந்தரி. "சரி,

அப்படியே நடக்கிறேன். சீக்கிரம் என் பொம்மையை எடுத்துக்கொடு'' என்றாள் பின்னர்.

இன்றும் சிலருக்கு இத்தகைய எண்ணங்கள் இருப்பதைக் காண்கின்றோம். வாழையிலை குருத்தாக இருந்தால் நடுவீட்டில் போடப்படுகிறது. அதில் சாப்பிட்டபின், அதே இலை குப்பையில் போடப்படுகிறது. இவ்வாறு பத்துப் பதினைந்து நிமிஷங்களில் ஏற்படும் பெரிய மாறுதல்களைக் கவனித்துப் பார்க்க வேண்டும். மானிடர்களிலும் பலர் இப்படித்தான் இருக்கின்றனர். இதைப் போலவே அன்று சுந்தரியும் தவளையை நினைத்தாள். தவளையோ சுந்தரியின் வார்த்தையை நம்பி உடனே தண்ணீரில் முழுகிப் பொம்மையை எடுத்து வந்து அவளிடம் கொடுத்தது. தன் கையில் பொம்மை கிடைத்தவுடன் மிகவும் சந்தோஷத்தோடு குதித்துக்கொண்டு தன்னுடைய வீட்டுக்கு ஓடி விட்டாள் சுந்தரி. அவள் ஓடுவதைக் கண்ட தவளை, ''அம்மா சுந்தரி ஓடாதே, நில். நானும் வருகிறேன்'' என்று கத்திக்கொண்டே தொடர்ந்தது. ஆனால் சுந்தரி அது காதில் கேட்காததுபோல் வீட்டுக்குள் ஓடிப் போனாள். பிறகு தவளையைப் பற்றிய சிந்தனையே அவளுக்கு இல்லை.

ஆனால் மறுநாள் காலையில் சுந்தரி தன் குடும்பத்தோடு சிற்றுண்டி சாப்பிட்டுக் கொண்டிருக்கும்பொழுது, யாரோ வந்து வீட்டின் வெளிக் கதவைப் பலமாகத் தட்டும் ஓசை கேட்டது. மிகவும் நெருங்கிய நண்பர்களாக இருந்தாலும் மூப்பன் வீடு என்பதனால் பலமாகத் தட்டமாட்டார்கள். ஆகவே உடனே எழுந்து சுந்தரி போய்க் கதவைத் திறந்தாள். அங்கே அந்தப் பெரிய தவளைதான் நின்றுகொண்டிருந்தது! உடனே சுந்தரி ஒன்றும் பேசாமல் வாடிய முகத்துடன் போய்த் தன் குடும்பத்தாருடன் சாப்பிட உட்கார்ந்து கொண்டாள். மகளின் முக வாட்டத்தைக் கவனித்த

தந்தை, ''மகளே, ஏன் முகம் வாட்டமாக இருக்கிறது? என்ன சங்கதி? யாராவது வந்து திட்டினார்களா?'' என்று கேட்டார்.

''யாருமில்லை. அந்தத் தவளைதான் கதவைத் தட்டியது'' என்று முதல் நாள் நடந்த சம்பவங்களை எடுத்துக் கூறிய சுந்தரி, ''அது வராது என்று கருதி நான் ஒப்புக்கொண்டேன். ஆனால் இன்று அது நம்முடன் வந்து உறவு கொண்டாடப் பார்க்கிறது'' என்றாள்.

''மகளே, நீ வாக்குக் கொடுத்ததுபோல் தவளையைச் சேர்த்துக் கொள்ளவேண்டியதுதான். அதை அழைத்து வா!'' என்று மூப்பன் கூறினான். தவளை உடனே உள்ளே வந்து அவர்களுடன் உட்கார்ந்து சாப்பிடத் தொடங்கியது. தவளை மனிதர்களைப்போல் தின்னும் காட்சியைக் கண்டு மிகவும் வியந்தார்கள். தவளை சாப்பிட்டு முடிந்ததும், ''சுந்தரி, நான் மிகவும் களைப்பாக இருக்கிறேன். எனவே எனக்குக் கட்டிலின்மேல் படுக்கை போடு'' என்று கூறியது.

அதைக் கேட்டதும் சுந்தரிக்குத் தாங்க முடியாத கோபம் வந்தது. ''சீ போ!'' என்று கூறினாள். உடனே சுந்தரியின் தகப்பனார், ''அம்மா, நமக்கு ஆபத்தில் உதவியவர்களை நாம் என்றும் மறக்கக் கூடாது. அதற்கும் படுக்கை போட்டுக்கொடு. ஒரு பக்கத்தில் படுத்துக் கொள்ளட்டும்'' என்றார்.

தகப்பனாரின் சொல்லை என்றும் தட்டாத சுந்தரி, தவளைக்கு ஒரு மூலையில் படுக்கைபோட்டுக் கொடுத்தாள். ஆனால் அச்செயலைத் தவளை விரும்பவில்லை. எனவே தவளை குதித்துக் குதித்துச் சென்று சுந்தரியின் கட்டிலின்மேல் படுக்க முயன்றது. மேலும், தவளை தன் விகாரத் தொண்டையைத் திறந்து கத்த ஆரம்பித்தது. சுந்தரிக்கும்

கோபம் தாங்க முடியவில்லை. "முட்டாள் தவளையே! வாயை மூடு. பேசாமல் இரு சனியனே!" என்று கோபமாகத் தவளையைத் தூக்கி வீசி எறிந்தாள். பாவம் தவளை, எதிரிலிருந்த சுவரின்மேல் போய் மோதிக்கொண்டது. சுவரில் மோதிய தவளை, மறுபடியும் தரையில் விழுந்தபொழுது அழகிய அரச குமாரனாகவும், நல்ல தேகக் கட்டுடனும், கம்பீரமாகவும், ஆண்களையே மயக்கும் நிலையிலும் நின்றது. அக்காட்சியைக் கண்ட சுந்தரி ஒன்றும் தோன்றாதவளாய்த் திகைத்து மற்றொரு பக்கம் நின்றாள். அப்பொழுது தவளையாக இருந்த ஆண் அழகன், "சுந்தரி நானும் ஒரு மூப்பனின் மகன்தான். என் மலை வெகு தூரத்திலிருக்கிறது. சில ஆண்டுகளுக்குமுன் மகான் ஒருவர் எங்கள் மலைக்கு வந்தார். அவருடைய தெய்வ பக்தியையும் சக்தியையும் தெரிந்து கொள்ளாமல் நான் அவரைக் கேலி செய்தேன். அவருக்கு ஒன்றும் உதவி செய்யவில்லை. நான் சிறுவனாக இருந்ததால் அவருடைய சக்தியும், பக்தியும் எனக்குத் தெரியவில்லை.

எனவே, அவருடைய கோபத்திற்கு நான் ஆளானேன். அவர் என்னிடம் குடிக்கத் தண்ணீர் கேட்டார். நான் கொடுக்கவில்லை. ஆகையால் என்னைத் தவளையாக மாற்றித் தண்ணீரிலே வாழ்வாய் என்று சபித்தார். உடனே நான் தவளையாக மாறினேன். அப்படி மாறிய பிறகுதான் எனக்கு அவருடைய சக்தி விளங்கியது. அதுவரையில் நான் அவரை ஒரு பிச்சைக்காரன் என்றும், பித்தன் என்றும் பிதற்றி வந்தேன். உண்மையில் அவர் பித்தன் அல்லர். நானே பித்தன். உடனே அவருடைய காலில் விழுந்து, "சுவாமி! இச்சாபம் எப்பொழுது நீங்கும்? என்னுடைய வாலிபப் பருவத்தை வீணாக்க வேண்டாம்" என்று வேண்டினேன். "சரி, அழகிய மூப்பனின் பெண் ஒருத்தி உன்னைத் தொட்டு வீசி எறிவாள். அப்பொழுதுதான் உன்னுடைய பழைய உருவத்தை நீ அடைவாய்" என்று அவர் கூறினர்.

ஆகையால் உன்னுடைய உதவியால் என்னுடைய பழைய சாபம் நீங்கிற்று. நான் பழைய உருவத்தை அடைந்தேன். மிகவும் நன்றி. நான் என் ஊருக்குப் போகிறேன்" என்று கூறினான்.

அதைக் கேட்டதும் சுந்தரி கண் கலங்கினாள். "வேண்டாம்! அப்பா வருவார், நில்லுங்கள்" என்று கூறித் தகப்பனாரின் அறைக்கு ஓடினாள். அவருடைய அனுமதியின்மேல் தவளைப் பையன் சுந்தரியை அழைத்துக் கொண்டு தன் மலைக்குச் சென்றான். அந்த மலையில், அவனுடைய தகப்பனாரும், சுந்தரியின் பெற்றோரும் சேர்ந்து அவர்களுக்குத் திருமணம் செய்து வைத்தார்கள். தவளைப் பையனின் தகப்பனார் தன் வேலையை மகனிடம் ஒப்புவித்து விட்டார். அன்றுமுதல் அந்தப் பையனுக்கு, "தவளை மூப்பன்" என்று மலை மக்கள் பெயரிட்டு அழைத்தார்கள். அந்த இன மக்களின் சந்ததியார்தான் நாங்கள். ஆகையால் நாங்கள் தவளைகளைக் கொல்வதே கிடையாது." என்று தங்கள் குடும்ப வரலாற்றைக்கூறி முடித்தார் பெரியவர்.

# 6. மசிணிகுடி ஜக்கா

உதகையிலிருந்து மைசூர் போகும் மார்க்கத்தில் சுமார் முப்பது மைல் தூரத்தில் 'கோகால்' என்ற ஓர் ஊர் இருக்கிறது. கோகாலில் திருபிச்சன் என்பவருடைய வீட்டில் ஒரு வாரம் தங்கினேன்.

அவர் இல்லத்தில் இருக்கும்போது திருகணித்தன் கோத்தர் என்பவருடைய நட்புக் கிடைத்தது. அவர் மூலம் சுற்றுப்புறங்களில் இருக்கும் மலைப் பிராந்தியங்களுக்குப் பிரயாணம் செய்தேன்.

கூடலூரிலிருந்து — மசிணி குடி பாதை வழியாக மாயாறுக்குப் போகும் பாதையில் ஏறத்தாழ மூன்று மைல்கள் நடந்தால் ஓர் பழைமையான அநுமனின் பளிங்குச் சிலை இருப்பதாகச் சொன்னார்கள்.

''மசிணி குடியில் பல்லாண்டுகளாகப் பொம்பன் பூசாரி என்னும் ஒரு சிற்பி இருந்தார். ரொம்பவும் அடக்கமானவர். சிறந்த அறிவாளியான அவரிடம் ஊரார் தங்களுடைய சந்தேகங்களைத் தீர்த்துக்கொள்ள வருவார்கள். கலை இருக்கும் இடத்தில் காசு இருக்காது என்பதற்குப் பொம்பன் பூசாரி மட்டும் விலக்காக முடியுமா? அநேகமாக அரைப் பட்டினியும் கால் பட்டினியுமாகத்தான் காலத்தைக்

கடத்தி வந்தார். யாராவது சிற்ப வேலைகளுக்கு 'ஆர்டர்' கொடுத்தால் அந்தக் காலங்களில்தான் அவர் பசியின்றிப் புசிப்பது வழக்கம்."

உதகை—கூடலூர்—மசிணிகுடி முதலிய இடங்களில் நவம்பர்—டிசம்பர் மாதங்களில் கடுமையான பனி இருக்கும் என்பது நமக்குத் தெரியும்.

அந்த ஏழைச் சிற்பியினிடத்தில் எத்தனையோ சிற்பக் கலை பயிலும் மாணவர்கள் வந்தார்கள். சிலர் கற்றுர்கள், சிலர் பாதியில் சென்றுர்கள். ஆனல் "ஜக்கன்" என்ற மாணவன் மட்டும், கற்ற வித்தை போதாதென்ருே அல்லது குரு விசுவாசமோ குருவை விட்டுப் போகவே இல்லை. "ஜக்கா!" என்று குருவின் குரல் கேட்டதும் எந்தச் சோலையில், எந்த மூங்கிற் புதரில் இருந்தாலும் சரி உடனே ஒரே ஓட்டத்தில் அவர் எதிரில் வந்து நிற்பான். ஜக்கனைக் குருவின் நிழல் என்றே கூறலாம்.

கூடலூர், மசிணிகுடிப் பிராந்தியத்தில் நஞ்சன் செட்டியார் என்பவர் ஒரு பிரபலப் பண்ணை முதலாளி; ஏராளமான ஏக்கர் நிலம் உடையவர். தயாள குணமும், இரக்க மனமும் படைத்தவர். அவர் ஓர் அநுமார் கோவில் கட்டத் திட்டமிட்டுப் பொங்கலன்று கும்பாபிஷேகம் செய்வதென்று முடிவு செய்தார். ஆகவே அநுமான் உருவச் சிலை ஒன்று செய்து கொடுக்கும்படி பொம்பன் பூசாரியிடம் கேட்டுக் கொண்டார்.

பொம்பன் பூசாரியும் குறித்த தவணையில் சிலையை முடித்துக் கொடுப்பதாகச் சொல்லி முன் பணமும் வாங்கிக் கொண்டார். அவ்வாண்டு பொங்கலுக்கு வந்திருந்த சிறிய வேலைகளை ஜக்கனே செய்து முடித்தான். இது பெரிய இடத்து ஆர்டராக இருந்ததால் பொம்பனே சிலைக்கு

வேண்டிய உளி முதலியவைகளை தயார் செய்து விட்டார். வெகுதூரத்திலிருந்து பாறையையும் கொண்டு வந்து வைத்திருந்தார்.

"ஜக்கா! சிலையின் வேலை ஆரம்பிப்பதற்கு முன் நான் செய்யப் போகும் சிலையின் மூர்த்தியை நினைத்துப் பூஜை செய்வது வழக்கமாயிற்றே! அதற்கு வேண்டியவைகளை யெல்லாம் தயார் செய்தாயா? ஏனென்ருல் அநுமானை உலகம் முழுதும் போற்ருதவர் இல்லை. கோயில் கட்டு பவரோ ஒரு பெரிய பண்ணையார். கலம் கலமாக நெல் கிடைத்தாலும் கிடைக்கலாம். பொங்கலுக்குக் குறைந்தது ஒரு மாதத்துக்கு முன் சிலையைக் கொடுத்தால்தான் அவர் கள் பொங்கலுக்கு முன் கோவில் கட்டி முடிப்பார்கள். இன்று வேலையைத் தொடங்க வேண்டும்" என்று பொம்பன் பூசாரி தம் சீடனிடம் கூறிவிட்டுக் குளிக்கப் போனுர்.

குளிப்பதற்குச் சென்றவர் வெகு நேரம் ஆகியும் திரும்பி வராதது கண்ட சீடனுக்குக் கவலையாகப் போய் விட்டது. ஜக்கன் குளிக்கும் இடத்துக்குச் சென்று பார்த் தான். தன்னுடைய குருநாதர் சிறிய பாறை ஒன்றின் வழியே இறங்கும்போது, அப்பாறை புரண்டு அவரைக் கீழே தள்ளி அவர் விழுந்த வேகத்தில் வலக் கரமும், இடக் காலும் முறிந்து, நினைவு தப்பிக் கிடப்பதைக் கண் டான். உடனே பதறிப்போய் அவரைத் தூக்கிக்கொண்டு வந்து குடிசையில் படுக்க வைத்தான் ஜக்கன். வைத்தி யரும் பொம்பன் பூசாரிக்கு வைத்தியம் செய்து, சில பச்சிலை களை, முறிந்த பாகங்களில் வைத்துக் கட்டி, பொம்பனுரே! தாங்கள் சுமார் நாற்பது நாட்கள் வரையில் படுக்கையை விட்டு அசையவே கூடாது. அப்பொழுதுதான் எலும்புகள் கூடும்" என்று கூறிச் சென்ருர்.

வைத்தியர் கூறிய வார்த்தைகளைக் கேட்டுச் சிற்பி யாருக்கு உள்ளம் உடைந்தது. அவர் முகம் வாடியது.

'நஞ்சன் செட்டியாருக்கு வாக்களித்த தவணைக்கு மேல் வைத்தியருடைய தவணை ஓடிவிட்டதே. சிற்பத்துக்காக முன் பணம் வாங்கியிருக்கிறேனே' என்று கவலை ரேகைகள் சிற்பியாரின் முகத்தில் ஓடியதைக் கண்டான் ஜக்கன்.

நாட்கள் வேகமாக உருண்டு சென்றன. அல்லும் பகலும் பொம்பன் சிற்பியாருக்கு வேண்டிய பணிவிடைகளையெல்லாம், ஜக்கனே செய்து வந்தான்.

சீடனின் கவனிப்பால் பொம்பன் பூசாரியால் சற்று நடக்கவும் உட்காரவும் முடிந்தது. நாள்தோறும் விடியற்காலையில் கடவுள் பூஜைக்குப் பின் ஜக்கன் "சுவாமி!" என்று கைகூப்பி நிற்பான். அன்று வெகு நேரம் ஆகியும் அவன் வரவில்லை. 'சரி! ஏதோ வேலையாகக் கடைக்குச் சென்றிருக்கிறானோ என்னவோ?' என்று எண்ணிப் பொம்பனே எழுந்து வெளியில் வந்தார்.

தூரத்தில் பண்ணையார் நஞ்சன் செட்டியார் வருவதைக் கண்டு பொம்பன் பூசாரி உள்ளம் கலங்கினார்.

அவரைக் கண்டதும், "ஜக்கா! ஜக்கா!" என்று அழைத்தார்.

"அநுமானின் சிற்ப வேலைகளெல்லாம் முடித்து விட்டீர்கள் போலிருக்கிறது! அநுமான் கோவில் கட்டும் வேலை, இன்னும் சில நாட்களில் முடிந்துவிடும். உங்களுக்கு என்ன உடம்பு? முகவாட்டத்துடன் இருக்கிறீர்களே?" என்றார் நஞ்சன் செட்டியார்.

"செட்டியாரே! ஏழையை மன்னிக்க வேண்டும். அநுமான் சிலையைத் தொடங்குவதற்குமுன் அன்று நான் குளிப்பதற்குச் சென்றேன். கல் இடறிக் கீழே விழுந்து, வலக்

கரமும், இடக் காலும் உடைந்து விட்டன. இந்தப் பையன் ஜக்கன் இல்லாவிட்டால் என்றோ மறைந்திருப்பேன். நான் கொஞ்சம் சுகம் அடைந்ததும், உங்களுடைய கடமையை முடித்துத் தருகிறேன். தயவுசெய்து மன்னிக்கவும்'' என்று மிகவும் பணிவுடன் வேண்டினார்.

ஜக்கனைக் காணாததால் பொம்பன் பூசாரியே எழுந்து, தாம் கொண்டு வந்த பாறையைச் செட்டியாருக்குக் காட்டுவதற்காக அவரை அழைத்துச் சென்றார்.

'பாறையை அது இருந்த இடத்தில் காணோமே' என்று பொம்பன் விழித்தார். ஆனால் பாறையைப் புரட்டிக்கொண்டுபோன அடையாளம் தரையில் தெரிந்தது. வியப்புடன் அதைப் பின்தொடர்ந்து இருவரும் பேசிக் கொண்டே சென்றார்கள். ஒரு மரத்தின் அடியில் விளக்கு எரிந்துகொண்டிருந்தது. அந்த மரத்தடியில் சிற்பம் செய்யக் கொண்டு வந்த பாறையும் இருந்தது.

சிற்பியார் பாறையின் அருகில் வர வர, பாறையில் ஏதோ ஓர் உருவம் காணப்பட்டது. பாறையின் மேல் படிந்திருந்த பனித்துளிகளைத் துடைத்துப் பார்த்தார்கள். சிலையைப்போல் இருவரும் நின்று விட்டார்கள்.

திடீரென்று ''ஆ'' என்று கத்திக் கொண்டே சிலையின் பின்பக்கத்துப் பள்ளத்துக்கு ஓடினான் பொம்பன். அவர் பின்னே நஞ்சனும் ஓடினார். இருவரும் சற்றுத் தாழ்ந்த இடத்திலிருந்து ஜக்கனைப் புரட்டி எடுத்தார்கள். ஜக்கனின் உடல் பனியால் விறைத்துப் போய் உயிரற்றுக் கிடந்தது. அந்தக் காட்சியைக் கண்ட பொம்பன் கண் கலங்கினார்.

"குரு கொடுத்த வாக்குத் தவறக்கூடாது என்பதற்காகத் தானே சிலையைச் செதுக்க ஆரம்பித்திருக்கிறான் ஜக்கன். பாறையில் அநுமான் சிலையைச் செதுக்கியபின் அதை நிறுத்துவதற்காக ஓர் அடி பள்ளம் தோண்டி அதில் இவ்வளவு பெரிய பாறையைத் தூக்கி நிறுத்தியிருக்கிறான். பாறையின் மேல்பகுதியில் தன் தோளை முட்டுக் கொடுத்துத் தூக்கினபோது பாறை சற்று அவன் மேல் சாய்ந்து ஜக்கனின் தலையில் பலமாக அடி ஏற்பட்டிருக்கிறது. ஜக்கனின் தலையில் ஏற்பட்ட காயத்தின் அடையாளம் இதோ பாருங்கள்! இச்சிலையின் தலையிலும் குருதி படிந்திருக்கிறது" என்று அநுமன் சிற்பத்தின் தலையில் இருக்கும் குருதியை நஞ்சனுக்குப் பொம்பன் காட்டினார்.

"பேசாப் பாறையைப் பேசும் பாறையாக்கியவன், பேசாமல் கிடக்கிறானே. நான் செய்வதைவிட, இச்சிலை உயிர் உள்ள சிலையைப்போல் காணப்படுகிறது. தன் உயிரை இச்சிலைக்குக் கொடுத்தான் போலும். எனக்காக இவன் செய்த தொண்டு மிக மிகப் பெரியதன்றோ! இவன் இல்லாவிடில் நான் இறந்தேயிருப்பேன். என் காதில் உளியின் ஓசை கேட்டால், நான் தடை செய்திருப்பேன் என்று அங்கு வைத்த பாறையை இவ்வளவு தூரம் கொண்டு வந்திருக்கிறான்."

குருவின் உள்ளத்தை அறிந்து வேலையைச் செய்த சீடனை எண்ணிக் கண்ணீர் கசிந்தார் பொம்பன் ஆசாரி.

பொம்பனாரின் கண்ணீரையும், ஜக்கனுடைய குருபக்தியையும் பாராட்டிய நஞ்சன், "சிற்பியாரே! ஜக்கன் செய்த அநுமானின் சிலை, அவனுடைய குருபக்தியை விளக்கும் வண்ணம், இங்கேயே நிலைத்து நிற்கட்டும். இந்தத் தெய்வீகச் சிலையை எடுத்துச் செல்ல எனக்கு மனமில்லை. உங்கள் சீடனின் பெயர் உலகம் அறியும் வரை

யில் நிலைத்து நிற்கட்டும்'' என்று கூறி விடைபெற்றுச் சென்றார்.

இப்படிச் சிலையின் கதையைக் கூறிக்கொண்டே வந்த பெரியவர் அந்த மசிணி குடியிலிருந்து—மாயாறு போகும் வழியில் நிலைத்து நின்றுகொண்டிருக்கும் சிலையைக் காட்டி ''சுமார் எழுபது ஆண்டுகளுக்கு முன் நான் சிறுவனாக இருக்கும்போது, இச்சிலையின் உருவம் நன்றாகக் காணப் பட்டது. நாளுக்கு நாள் இயற்கையாலும், சிலையின்மேல் தேங்காய்கள் உடைப்பதாலும், இச்சிலை தேய்ந்துபோய் விட்டது. இருந்தாலும் அன்று ஜக்கனுடைய குருதிபட்ட இடம் மட்டும் நாளுக்கு நாள் வளர்ந்து, மக்கள் கண்களில் நன்றாகப் படும்படியாகப் பளிச்சென்று இருக்கிறது. பாருங்கள்!'' என்றார்.

அவர் கூறியதுபோலவே அந்தச் சிலையின் தலையில் பளிச்சென்று ரத்தக்கறை தெரிந்தது.

# 7. அனுப்பியது யார்?

நீலகிரிக்குச் சென்றால், திரு. ஜோஷ்வா பிலிப்பு அவர்களின் இல்லத்தில் தங்குவது வழக்கம். அவர் உதகை யிலிருந்து சுமார் இருபது மைல்கள் தூரத்திலிருக்கும் கோத்தகிரியில் வாழ்கிறார். அவர் சுமார் எழுபதாண்டு களாக நீலகிரி மலைப் பிராந்தியத்தில் சுற்றிப் பல பணிகள் செய்தவர். அவர் இல்லத்தில் குளிருக்காகத் தீமூட்டி தன் அருகில் என்னையும் உட்கார வைத்துக்கொண்டு, நீலகிரி யில் மூலை முடுக்குகளில் என்ன என்ன சம்பவங்கள் பண்டைக்காலத்தில் நடந்தனவோ அவைகளைப் பற்றிக் கூறுவார். அவர் கூறிய பல சம்பவங்களில் சிலவற்றைப் பல பத்திரிகைகளில் நான் எழுதினேன். அச்சம்பவங்களில் சில எழுத இயலாதவாறு இருக்கின்றன. அங்ஙனம் அவர் கூறியவற்றில் இதுவும் ஒன்று.

"வாசன் என்பவர் குள்ளங்கரைத் தோட்டத்திலே மேஸ்திரியாக வேலை பார்ப்பவர்.

இவருடைய முதல் தாரத்திற்கு நந்தன் என்கிற பையன் ஒருவன் இருந்தான். குள்ளங்கரையில் வசிப்பவர்கள் சுமார் மூன்று மைல் நடந்து, பொம்மன் எஸ்டேட்டுக்கு வந்து, பிறகு பஸ்ஸில் கோத்தகிரி என்ற நகரத்துக்குச் செல்லவேண்டும்.

நந்தன் தாயின் படத்தை வணங்கிவிட்டுத் தினமும் நடந்து வந்து, பஸ்ஸில் கோத்தகிரியிலுள்ள பள்ளிக்குச் செல்வான்.

குள்ளங்கரையில் தேயிலைத் தோட்டமும் காப்பி தோட்டமும் இருந்தன. சுற்றுப்புறங்களில் மலைகளும், அடர்ந்த சோலைகளும், நீர் வீழ்ச்சிகளும், பெரிய பாறைகளும் நிறைந்த அழகிய காட்சிகள். சோலைகளில் கரடிகள் அதிகம் வசித்தன. மழைக்காலங்களில் சோலைகளில், கரையான் புற்றுகளைத் தோண்டித் தின்பதற்காகக் கரடிகள் வருவதுண்டு. நந்தன் குள்ளங்கரை ஒற்றையடிப் பாதையில், ஆங்காங்கே கரடிகளின் காலடிச் சுவடுகளைக் கண்டிருக்கிறான்.

"திடீரென்று கரடி வந்தால் என்ன செய்வாய்?" என்று ஒரு நாள் நந்தனை அவன் சின்னம்மாள் கேட்டாள்.

"அதற்குத்தான் நான் பள்ளிக்கூடம் போகும்போதெல்லாம், இந்த இரண்டு தடிகளைக் கையில் எடுத்துக்கொண்டு செல்கிறேன்" என்று அவன் பதில் உரைத்தான். நந்தனின் சிற்றன்னை ஒரு நகரத்துப் பெண். ஆகையால் நந்தன் கூறியதை அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை.

"இரண்டு கொம்புகளிருந்தால் என்ன செய்ய முடியும்?" என்றாள் அவள்.

"இல்லே சின்னம்மா! என் அம்மா இதே ஊரில் பிறந்தவள். அவளுக்குக் கரடி விஷயங்களெல்லாம் நன்றாகத் தெரியும். கையில் இரண்டு கொம்புகளிருந்தால், கரடியிடமிருந்து தப்பித்துக் கொள்ளலாம். கரடிகள் எப்பொழுதும் மரத்தின் பொந்துகளில் குடி இருக்கும். கரடி வந்ததும் நாம் ஓடக்கூடாது. மரத்திலே கரடி தலை கீழாகத்தான் ஏறும். மறுபடியும் இறங்குவதற்குத்

தெரியாமல், பொத்தென்று புளி மூட்டையைப்போல், முதுகுப் பக்கமாக, எவ்வளவு உயரமிருந்தாலும் விழுந்து விடும். கரடி மனிதர்களைத் தின்னுது. ஆனல் துண்டு துண்டாகக் கிழித்துப் போட்டுவிடும். கரடியுடன் ஒரு மிருகம் குறித்த நேரத்திலே சண்டை செய்து, ஓடிவிட்டால் மறுநாளும் அதே இடத்தில், அதே நேரத்திலே கரடி வந்து காத்திருக்கும். வஞ்சனையைத் தீர்த்துக் கொள்ளும் மிருகங் களில் கரடியும் ஒன்று. நெருப்பு ஒன்றுக்குத்தான் கரடி நடுங்கி ஓட்டம் பிடிக்கும்.

"கரடி மனிதர்கள் வரும் சப்தத்தைக் கேட்டுவிட்டால், உடனே பக்கத்திலே இருக்கும் புதர்களில் ஒளிந்துகொண்டு அருகில் வந்ததும் சண்டைக்கு நிற்கும்" என்று தன்னுடைய தாயார் கூறியதைத் தன் சின்னம்மாளிடம் கூறினுன் நந்தன்.

ஒரு ஞாயிற்றுக்கிழமை காலையிலே, எல்லாரும் சந்தைக்குப் புறப்பட்டார்கள். ஞாயிறுதோறும் சந்தை கூடு வது கோத்தகிரியில்தான். ஆகையால் காலையிலே புறப்பட் டால், சாதாரணமாய் மாலையில் தங்கள் வீடு வந்து சேருவார் கள். அன்று சின்னம்மா, நந்தன் இன்னும் அக்கம் பக்கத் திலே இருந்தவர்களில் சில மங்கையர்கள் எல்லோரும் காலை ஏழு மணிக்கெல்லாம் சந்தைக்குப் போகப் புறப்பட்டார்கள்.

நந்தன் என்றும் போலவே தன்னுடைய சாரணர் தடியைத் தூக்கிக் கொண்டான்.

"சந்தைக்குப் போகும்போது, தடி எல்லாம் எதற்கு? திரும்பி வரும்பொழுது சந்தையில் வாங்கும் சாமான்களை வேறு தூக்கிவர வேண்டுமே!" என்ருள் சின்னம்மா. "ஆமாம், அது உண்மைதான்" என்ருர் அப்பா. "தடி இல்லாமல் வெளியில் போக வேண்டாம்" என்று அம்மா

சொல்லி இருக்கிறாள். ஆகையால் "தடியில்லாவிட்டால், நான் சந்தைக்கே வரவில்லை" என்றான் நந்தன்.

"எப்படியோ போகட்டும்" என்றார் வாசன். நந்தன் சந்தோஷமாகத் தடியுடன், தன் தாயாரின் புகைப்படத்தை உற்றுநோக்கி வணங்கினான். கண்ணீர் கன்னத்தின் வழியே ஓடி வந்தன.

"நானும் உன்னுடன் வருகிறேன். கண்ணீர் விட வேண்டாம் மகனே!" என்று தாய் கூறுவதைப்போல் ஓர் உணர்ச்சி அவன் உள்ளத்திலே தோன்றியது.

எல்லோருடனும் நந்தன் புறப்பட்டான். சோலைகள் நிறைந்த ஒற்றையடிப் பாதையிலே நந்தன்தான் முதலில் நடந்து சென்றான்.

என்றும் போல் கரடிகளின் மலஜலம் வழியில் அன்று அதிகமாகவே இருந்தது. பாதி தூரம் சென்றதும் திடீரென்று "குர்—குர்" என்ற சப்தம் கேட்டது. எல்லாரும் சுற்றும் முற்றும் பார்த்தார்கள். முன்னால் ஒரு பெரிய கரடி இவர்களை நோக்கி வருவது தெரிந்தது.

எல்லாரும், "ஓ"வென்று அலறி விட்டார்கள். நந்தன் கையிலிருந்த தடியை அதன் கையில் கொடுத்தான்.

கரடி தடியைப் பிடித்துக் கொண்டது.

"கோல் சுழற்று" விளையாடுவதைப்போல், விளையாடிக் கொண்டே நந்தன் சாமர்த்தியமாகப் பின்வாங்கினான். கோல் விளையாட்டில் மனிதர்கள் எப்படி மாற்றி அடிக்கிறார்களோ, அப்படியே கோலால் அடித்துக் கொண்டே அவனுடன் தொடர்ந்து வந்தது கரடி.

கரடியுடன் போர் செய்துகொண்டே பின்வாங்கினுன்.

அதற்குள் திரும்பி வீட்டுக்கு ஓடின பையன்கள் மூலம் விஷயத்தைக் கேள்விப்பட்ட பெரியவர்களும், தேயிலைத் தோட்டத்துக் கூலியாட்களும் தடிகளுடனும், தீப்பந்தங் களுடனும், "ஒபா—டுபா" என்று காட்டு பாஷையில் கூவிக் கொண்டே வந்தார்கள். அந்தச் சப்தத்தைக் கேட்டு, கரடி ஓட்டம் பிடித்தது.

ஒரு வாரம் கழித்து, ஒரு நாள் காலை நந்தன் பள்ளிக் கூடம் போகப் புறப்பட்டான். அன்று ஒரு தடியுடன்தான் சென்ருன்.

அதே இடத்துக்கு வந்ததும், அவன் புதரில் ஏதோ சப்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். கரடி ஒரு கொம்புடன் பின்னுல் வருவது தெரிந்தது. நந்தனுக்குப் பயம் தாங்கவே முடியவில்லை. கரடிக்கும் நந்தனுக்கும் கோல் விளையாட்டு ஆரம்பமானது. நந்தன் சோர்ந்து விட்டான். "ஒபா—டுபா" வென்று சில குரல்கள் கொடுத்தான். "டுமீல்" என்று ஒரு சப்தம் கேட்டது. அதே நேரத்தில் கரடியும் "குர்ர்" என்று தரையில் சாய்ந்தது.

நந்தனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. தேயிலைச் செடி களின் மறைவிலிருந்து துப்பாக்கியுடன், அந்தத் தேயிலைத் தோட்டத்துச் சொந்தக்காரர் ஒருவர் வருவதைக் கண்டு அவரை வணங்கினுன்.

"உன் விஷயம் கேள்விப்பட்டு, நான் ஒரு வாரமாகத் துப்பாக்கியுடன் வருகிறேன். இன்று உன்னுடைய மோப்பத்தைக் கண்டதும் வெளியில் வந்தது கரடி. நான் வராமலிருந்தால் கட்டாயம் உன்னைக் கொன்றிருக்கும்"

என்று கூறினர் அவர். "தெய்வமாக இருக்கும் என்னுடைய அம்மாதான் உங்களை அனுப்பினுள்" என்று நன்றி கூறினன் நந்தன்.

—என்று கதையைக் கூறி முடித்து விட்டு, மறுநாள் காலையில் சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் வரையில்கூட, கரடிகள் வாழ்ந்த சில குகைகளுக்கு என்னை அழைத்துச் சென்று காட்டினர்.

அப்படி ஒரு குகையைக் காட்டும்பொழுது, அவருடன் சேர்த்து அதைக் "கிளிக்" என்று புகைப்படம் பிடித்துக் கொண்டேன். அடிக்கடி எனக்கு நீலகிரி—கோத்தகிரியில் புகலிடம் கொடுத்து நீலகிரியின் அற்புதங்களை எல்லாருக்கும் கூறிய அப்பெரியார் 26-7-1962ஆம் ஆண்டு, நீலகிரி மலையில் ஆண்டவன் அடியடைந்தார். அப்பெரியாருடைய மறைவு தமிழகத்திற்கே ஒரு பெரிய நஷ்டமன்ருே.

# 8. அவள் மச்சம் கொடுத்தது அச்சம்

நான் அந்த மலைவாசிகளைப் பற்றி எழுதிய கட்டுரைகளையும் அவர்களுடைய புகைப்படங்களையும் எடுத்துக் கொண்டு மறுபடியும் அந்த மலைக்குச் சென்றேன்.

எப்பொழுதும் மழைக் காலங்களில் நான் காடுகளில் பிராயணம் செய்வதில்லை. ஏனென்றால் அப்பொழுது அட்டைகள், கரடிகள் இவற்றின் நடமாட்டம் அதிகமாக இருக்கும். திடீரென்று மழை பெய்ய ஆரம்பித்தால் காடுகளில் ஒதுங்குவதற்கு இடவசதியே கிடையாது. அப்பொழுது மரங்களின் அடியில்தான் ஒதுங்கவேண்டும். இடி இடிக்கும்பொழுது மரங்களின் நிழலில்கூடக் காடர்கள் ஒதுங்கமாட்டார்கள். அந்த மலைவாசிகளுக்கும் நான் மழைக் காலங்களில் வரமாட்டேன் என்று நன்றாகத் தெரியும். அப்படியிருக்க நான் ஒருமுறை திடீரென்று மழைக் காலத்தில் போனது, அவர்களுக்கே ஆச்சரியமாக இருந்தது.

ஆனால் என் உள்ளத்தில் பெரிய ரகசியச் சுமையுடன் மறுபடியும் மலைக்கும் காடுகளுக்கும் வந்திருக்கிறேன் என்று அந்த அப்பாவி மலைவாசிகளுக்கு எப்படித் தெரியும்!

அதை அவர்களால் கண்டுபிடிக்க முடியும். ஆனால் என்னிடம் அவர்களுக்கிருக்கும் நம்பிக்கையும் விசுவாசமும் அதை மறைத்துவிட்டன. முதல் தடவை அந்த மலை வாசிகளை எடுத்த படங்களை எல்லாம் அவர்களிடம் காட்டினேன். அவர்களைப் பற்றிப் பத்திரிகையில் எழுதிய ஆராய்ச்சிகளையும் வாசித்துக் காட்டினேன். அதைக் கேட்டதும் அவர்களுக்கு சந்தோஷம் தாங்கமுடியவில்லை. எல்லோரும் எங்கள் குடிசைக்கு, "வாரும், வாரும்" என்று என்னை அழைத்தார்கள், ஆனால் நான் குறிப்பாக எந்தக் குடிசையில் தங்கவேண்டும் என்று நினைத்தேனோ அதில்தான் தங்கினேன். அதுதான் கன்னத்தில் மச்சமிருக்கும் மங்கையின் குடிசை. அவள் கன்னத்திலிருக்கும் மச்சத்தை நன்றாகக் கவனித்தேன். அந்த மச்சம் எனக்கு அச்சத்தைக் கொடுத்தது. அவள் பெயர் கெம்பி. அவள் கணவன் பெயர் கண்ணன். இந்தத் தடவை நானும் கெம்பி வீட்டாரும் நெருங்கிய நண்பர்களாகிவிட்டோம்.

தன் மனைவியின் புகைப்படங்கள் பத்திரிகையில் வந்ததைக் கண்டு, கண்ணன் அளவிலா ஆனந்தமடைந்தார். கெம்பியின் தாய் தகப்பனையும், குழந்தையையும் பார்த்தேன். ஆனால் அவள் மச்சம் மட்டும் நான் காணும் பொழுதெல்லாம் அச்சத்தைக் கொடுத்தது. இதை எப்படிச் "சால்வ்" செய்வது என்ற கவலையே பெரிதாகிவிட்டது. சதா சிந்தனையாகவே மலையில் அலைந்தேன். காரணம், எப்படிப் போய் எப்படி முடியுமோ தெரியவில்லை. உண்மைக்குப் பாடுபட்டால் அவனுக்குக் கெட்ட பெயர்தான் கிடைக்கிறது.

என் உள்ளத்திலிருக்கும் விஷயத்தைக் கெம்பியிடமும் 'அவள் கணவனிடமும் எப்படிக் கூறுவது என்று சதா என் உள்ளம் ஊசலாடிக் கொண்டிருந்தது. ஆகையால் கெம்பி செய்த சமையலைப் போற்றினேன்.

இது காட்டில் மங்கையர்கள் சமைப்பது போலில்லை என்றேன். பகலெல்லாம் காட்டில் அலைந்துவிட்டு மாலை சீக்கிரமாக வந்து கெம்பியிடம் பேசுவேன். நான் கெம்பி யின் சமையலைப் பற்றிக் கூறும்பொழுது திடீரென்று அவள் எதையோ சொல்லத் தொடங்கி நிறுத்திவிடுவாள். அவள் எதையோ மறைக்கிருள் என்பதை நான் கண்டு கொண்டேன். கெம்பி ஆழ்ந்த சிந்தனையில் இருந்தாள். நான் உடனே,

"கெம்பி நீ ஓர் அரசனின் மகளாக இருக்கவேண்டும்" என்று கூறியதும், கெம்பிக்கே தெரியாமல்,

"நான் ஒன்றும் அரசன் மகள் அல்லள். நான் சேலத்துவாசிதான்" என்று வாய்தவறிக் கூறிவிட்டாள். பிறகு அதை உடனே மறைத்தாள். அதுதான் சமயமென்று,

"என்ன சேலத்து வாசியா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டேன். காரணம் 'ஜோலார்பேட்டை' என்று கூருமல் "சேலம்" என்று கூறியதால் பெரிய சந்தேகமும், குழப் பமும் எனக்கு உண்டாயின.

"என்ன கெம்பி, எல்லாவற்றையும் மறைக்காமல் சொல்லு, என்ருல் ஏதாவது நன்மை உண்டாகும்" என் றேன். கெம்பி கூறிஞள்.

"அண்ணு! என்ன நன்மைகள் உண்டாகும்? எனக்கு ஒரு குழந்தை இருக்கிறது. என் கணவனே ஓர் அப்பாவி. அவருக்கு நான் மோசம் செய்யமாட்டேன், நான் பிறந்து வளர்ந்தது சேலம். என் தகப்பனுருக்கு ஓர் ஆபிஸர் வேலை. என் தாயாரும் ஒரு பள்ளி ஆசிரியை, என் தாயார் இறந்துவிட்டதால், என் தகப்பஞர் எங்களைக் கவனிக்க மறுமணம் செய்துகொண்டார். என் அண்ணன்

ஜோலார்பேட்டையில் வேலைக்குப் போனதும் நாங்கள் எல்லோரும் அந்த ஆண்டு விடுமுறையில் ஜோலார் பேட்டைக்குப் போனோம். ஜோலார்பேட்டைக்குப் போன அன்று மாலை எல்லோரும் கடைவீதிக்குச் சென்றோம். அன்று அங்கே மாரியம்மன் திருவிழா நடந்தது. கூட்டம் அதிகமாக இருந்தது. சுற்றுப்புறங்களிலுள்ள கிராமங்களி லிருந்துப், மலைகளிலிருந்தும் மக்கள் திரள் திரளாக வந் திருந்தார்கள். திருவிழாவில் நான் என் பெற்றோர்களை விட்டுவிட்டேன், தேடித் தேடிப் பார்த்தேன், கிடைக்க வில்லை. சிலர் என்னிடம் விலாசம் கேட்டார்கள். "அன்று தான் நான் சேலத்திலிருந்து வந்ததால், வீட்டு விலாச மும், வழியும் தெரியாது" என்று கூறினேன். கடைசியில் ஓர் இடத்தில் நின்று அழுது கொண்டிருந்தேன். அப் பொழுது ஒருவர் வந்து அன்பாக என்னிடம் பேசினார். ரொட்டி, பழம் எல்லாம் வாங்கிக் கொடுத்தார். அவரும் பலரிடம் என்னைப்பற்றிக் கேட்டார். எல்லோரும் "இந்தப் பெண் இவ்வூருக்குப் புதியதாக இருக்கிறது" என்று கூறினார்கள். ஆகையால் என்னை அவர் தம் மாட்டுவண்டி யில் ஏற்றிக்கொண்டார். அதில் அவருடைய மனைவியும் மற்றப் பெண்களும் இருந்தார்கள். நான் வண்டியில் ஏறி யதும், எனக்கே தெரியாமல் தூங்கிவிட்டேன். வெகு நேரம் கழித்து தூக்கத்திலிருந்து என்னை எழுப்பினார்கள். கண்ணைத் திறந்ததும் நான் ஒரு பெரிய காட்டில் இருப் பதை உணர்ந்தேன். என்னைச் சுற்றிலும் கூடாரங்களைப் போல் குடிசைகள் இருந்தன. அத்தகைய குடிசைகளை நான் அதற்கு முன் கண்டதில்லை. என்னைக் கொண்டு வந்தவர்கள், இந்த வீட்டிலிருக்கும் பெரியவரும் அம்மா வும்தான். இவர்கள் தங்களுக்குக் குழந்தைகளே இல்லாத தால் என்னை அன்புடன் நடத்திய விதம் எனக்கே ஆச்சரி யமாக இருந்தது. அன்பு என்பது என்னவென்றே தெரி யாமல் என் சின்னம்மாவிடம் இருந்த எனக்கு இவர்களை விட்டுப் பிரியவே மனமில்லை. ஆகையால் நாட்கள், மாதங்

கள், ஆண்டுகள் அகன்றன. வீட்டு நினைவு அடியோடு மறந்தாலும், என் அண்ணன் நினைவு மறையவில்லை.

என் அண்ணன் கவலைதான் சதா என்உள்ளத்தை வாட்டுகிறது; வாட்டியது. என் அண்ணனைக் கண்டு பிடிப்பது எப்படி? மறுபடியும் நான் ஜோலார்பேட்டை யில் நடந்த மாரியம்மன் திருவிழாவுக்கு பலமுறைகள் சென்றேன். ஆனால் அவ்வளவு பெரிய கூட்டத்தில் என்னால் அண்ணனைக் கண்டுபிடிக்க முடியவில்லை. சதா கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். கொஞ்சம் கொஞ்சமாகக் கவலையும் மறைந்துவிட்டது. உங்களைப் போல் யாரையாவது கண்டால் உடனே எனக்கு என் அண்ணன் நினைவு வந்துவிடுகிறது. கடைசியில் எனக்குத் திருமணமும் நடந்தது. என் கணவரிடமும் என் வரலாற்றைக் கூறினேன். ஆனால் அவர், ''உன்னை உன் அண்ணன் அழைத்துக்கொண்டு போய்விட்டால், நான் என்ன செய்வேன்?'' என்று கவலைப்படுவார், அவருக்குக் கவலை கொடுப்பதை நான் விரும்பவில்லை. ஆகையால் அவரைக் கேட்பதையும், ஜோலார்பேட்டை மாரியம்மன் திருவிழாவில் அண்ணனைத் தேடுவதையும் விட்டுவிட்டேன். ஏனென்றால் கணவனால் எனக்குக் கஷ்டங்கள் இருந்தால் என் உள்ளம் வேதனைப்படும். அவரால் எனக்கு ஒரு சிறு கஷ்டமும் இல்லை. நான் சந்தோஷமாக இருப்பதையே அவர் விரும்புகிறார். என்னை இந்த மலையில் வளர்த்தவர் கள் என் கணவரையும் குழந்தைபோல் பார்த்துக் கொள் கிறார்கள். தங்கள் சொத்தெல்லாம் எங்களுக்கே எழுதி வைத்துவிட்டார்கள். இவ்வளவு அன்புடன் பெற்றோர்கள் போல் பார்த்துக் கொள்ளும் இந்தப் பெரியவர்களுக்கு நான் மோசம் செய்தால் ஆண்டவன் என்னைத் தண்டிக்க மாட்டாரா? இந்த மலையிலேயே நான் சந்தோஷமாக இருக்கிறேன். இங்கே அன்பாகப் பழகிய பிறகு ஜோலார் பேட்டைத் திருவிழாவுக்குப் போனாலும் இரண்டு நாட்

களுக்கு மேல் எனக்கு அந்தவூர் பிடிக்கவில்லை. அமைதி யாக வாழ வேண்டுமென்றால், அதற்கு மலைவாழ்க்கை தான் மேலானது. ஆனால் ஒரே ஒரு குறை என் உள்ளத் தில் இருக்கிறது. என் அண்ணனைக் காணவேண்டும் என்பதுதான். ஆனால் நான் இறந்துபோவதற்குள் எப்படியும் என் அண்ணனையும் என் தகப்பனாரையும், என் சின்னம்மாளையும் பார்த்துவிடுவேன் என்று என் உள்ளம் சொல்லிக்கொண்டே இருப்பதால் கட்டாயம் பார்ப்பேன். இவைகள்தான் என் உள்ளத்தில் நீண்ட நாட்களாக மறைந்திருக்கும் ரகசியம்'' என்று கூறும் பொழுதே 'கலகல' வென்று கண்ணீர் வடித்தாள் கெம்பி.

''கெம்பி நீ ஒருத்திதான் இப்படி இருக்கிறாய் என்று நினைக்கவேண்டாம். இதைப்போல் இன்னும் ஆயிரக்கணக் கான ஆண்களும் பெண்களும் இருக்கிறார்கள். ஏன்! சில மலைகளில் சில குடும்பங்களே இதைப்போல் இருக்கின்றன. பண்டைக்காலத்தில் விரோதி அரசனுக்குப் பயந்து மலை களிலும், அடர்ந்த காடுகளிலும், வந்து தங்கியிருப்பவர் களை இன்றும் காணலாம். பண்டைக்காலத்தில் இப்படி சொத்து சுதந்திரங்களை விட்டுக் காடுகளுக்குப் போன வர்களுக்கு, ''மலைவாசி, காட்டுவாசி, ஆதிவாசி'' என்ற பட்டம் கொடுத்துள்ளார்கள். ஆனால் இன்று பணம் சொத்து உரிமைகளை எல்லாம் இழந்து பரிதாப நிலைமை யில் வெளிநாடுகளிலிருந்து அன்னிய ஆட்சியாளரால் இந்தியாவுக்கு அனுப்பப்படும் இந்தியர்களுக்கு அன்று கொடுத்ததுபோல் ''ஆதிவாசிகள்'' என்ற பட்டமல்ல. இவர்களை இன்று ''அகதிகள்'' என்றே நாம் கூறுகிறோம். இன்னும் சில நூற்றாண்டுகள் அகன்றதும் ''அகதிகள்'' என்ற பெயர் ஜாதிப்பெயராக மாறிவிடும் என்பதில் யாதொரு சந்தேகமுமில்லை. ஆகையால் நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே; என்னால் உன்னுடைய அண்ணனைக் கண்டுபிடிக்க முடியுமா? என்று பார்க்கிறேன். எல்லாம்

ஆண்டவன் செயல்'' என்று ஆறுதல் கூறினேன் கெம்பிக்கு.

அன்றுமாலை சிந்தனையுடன் கெம்பியின் குடிசைத் திண்ணையில் உட்கார்ந்துகொண்டு, கண்ணன் வரவுக் காகக் காத்திருந்தேன். அவரும் வயலிலிருந்து வந்தார்.

''நான் உங்கள் மலைக்கு இரண்டு மூன்று தடவை வந்துவிட்டேன். என்னுடன் நீங்கள் இருவரும் என் வீட்டுக்கு வரவேண்டும்'' என்று அழைத்தேன். அவர்கள் முதலில் வரப் பயந்தார்கள். 'ஐயோ பட்டணமா?' என்றார் கள். கடைசியில் அவர்களைத் தைரியப்படுத்தி என் செல விலேயே அழைத்துவந்தேன். என் வீட்டிற்குக் கெம்பியும் அவள் கணவனும் குழந்தையும் வந்த இரண்டாம் நாள் என் கடிதத்தைக் கண்டதும் ஜோலார்பேட்டையிலிருந்து என் நண்பர் கமலநாதன் என் வீட்டிற்கு வந்தார். அப் பொழுது நானும் கெம்பியின் கணவனும் பேசிக் கொண்டிருந்தோம்.

கமலநாதனுக்குக் கெம்பியின் கணவனை அறிமுகப் படுத்தினேன். சிறிது நேரமானதும் கமலநாதன் கண் கள் பலவிடங்களிலும் அலைமோதியதை நான் தெரிந்து கொண்டேன். கெம்பியின் குழந்தையை அழைத்து வந்து, ''இந்தப் பொடியன்தான், இவர் மகன்'' என்று கெம்பி யின் கணவரைச் சுட்டிக் காட்டினேன். என் பின்னால் என் மனைவியும் கெம்பியை அழைத்துக்கொண்டு வந்தாள். ''அந்த அம்மாதான், இவர் மனைவி!'' என்றேன்.

நான் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே கெம்பியும், கமலநாதனும் ஒருவரை ஒருவர் மௌனமாகச் சிறிது நேரம் பார்த்துக்கொண்டார்கள். கமலநாதன், கெம்பியின்

மச்சத்தை நன்ருகப் பார்த்தார், உடனே கெம்பி, ஆ! அண்ணு!'' என்று கதறிவிட்டாள்.

''கமலா! உன்னை நான் உயிரோடு பார்த்ததே போதும். என் தங்கை இறந்துவிட்டாள் என்று நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று அழுதார் கமலநாதன். இவைகளை எல்லாம் பார்த்துக்கொண்டிருந்த கண்ணன் (கெம்பியின் கணவர்) மரம்போல் நின்ருர். நான் சேகரித்த விஷயங்களைக் கூறத் தொடங்கினேன்.

''அன்று காலையில் சுமார் ஒருமணி இருக்கும், ''டக்—டக்'' என்று யாரோ கதவைத் தட்டத் திறந்தேன்.

''வணக்கம்! தாங்கள்தாஞ திரு. பிலோஇருதயநாத்!'' என்ருர் வந்தவர்.

''வணக்கம்! ஆமாம், உள்ளே வாருங்கள்'' என்றேன். அவரிடம் பல பத்திரிகைகளின் துண்டுகள் இருந்தன. ஒரு முக்கியமான விஷயம். இந்தப் பத்திரிகையில் இருக்கும் கட்டுரையைத் தாங்கள்தாஞ எழுதியது'' என்று அவர் கொண்டு வந்திருக்கும் பத்திரிகைகளில் ஒன்றை எடுத்துக் காட்டினுர்.

நான், ''ஆமாம்'' என்றேன். அதிலிருக்கும் ஒரு புகைப் படத்தைக் காட்டி, 'இந்தப் புகைப்படம் நீங்கள்தாஞ எடுத்தது?' என்று கேட்டார்.

''ஆமாம்! அது என்னுடைய கட்டுரைதான். அந்தப் புகைப்படமும் ஒரு காட்டில் வாழும் ஒரு காடத்தியினுடையது தான்'' என்றேன்.

எங்கள் இருவருக்குமிடையில் சற்று நேரம் மௌனம் குடிகொண்டது.

"நீங்கள் எதையும் மறைக்காமல் சொல்ல வேண்டும். காரணம் தாங்கள் என்னைத் தேடிக்கொண்டு ஜோலார் பேட்டையிலிருந்து வந்ததால், ஏதோ முக்கியமான விஷயத்தைப் பற்றி உங்கள் உள்ளம் குழம்பிக் கொண்டிருக்கிறது என்று தெரிகிறது. ஏதாவது சொல்ல வேண்டியதாக இருந்தால் தாரளமாகச் சொல்லவும். என்னால் கூடுமானவரை உதவவோ அல்லது தங்களிடம் மன்னிப்புக் கேட்க வேண்டியதாக இருந்தால் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளவோ நான் தயாராயிருக்கிறேன். காரணம் காடுகளில் காணப்படும் பல செய்திகளையும் ரகசியங்களையும் இன்னும் எழுதக் கூடாத வகையில் மறைத்து வைத்திருக்கிறேன். காட்டில் வேலை செய்யும் நண்பர்களிடம் ஏதாவது சாதாரண விஷயங்களைப் பற்றிக் கேட்டால் அவர்களுக்கு ஒன்றும் தெரியவில்லை. ஆகையால் என் அனுபவத்தைக் கொண்டு பல விஷயங்களை நான் சேகரித்துக் கொண்டு வருகிறேன். நீங்கள் எதைப்பற்றிக் கேட்க வேண்டுமோ அதைப்பற்றி தாராளமாகக் கேளும். காடுகளில் விஷயங்களைச் சேகரிக்கும் பொழுது, சில சமயங்களில் சில காடுகளில் அடியும் வாங்கியிருக்கிறேன். காரணம் என்னை அம்மை குத்துகிறவன் என்றும், வேவுக்காரன் என்றும், ஏதோ கிராமத்தில் கொலை செய்துவிட்டு மலைக்கு ஓடி வந்துவிட்டவன் என்றும் சந்தேகம் கொள்ளுகின்றனர்" என்று கூறினேன்.

"நீங்கள் சொன்னபின் நான் எதையும் மறைக்காமல் கூறுகிறேன். இதைப்போல் கன்னத்தில் மச்சமிருக்கும் மங்கையை இதுவரையில் எங்குமே கண்டதில்லை. ஆகையால் அவள் யார்? என்பதை நான் தெரிந்துகொள்ள வேண்டும். சுமார் பதினைந்தாண்டுகளுக்கு முன் என்னுடைய தங்கை ஒருத்தி சுமார் ஏழு வயதுப் பெண்ணாக இருக்கும்பொழுது காணமல்போய் விட்டாள். அவளுக்கும் இதேபோல் கன்னத்தில் மச்சமிருக்கும். மச்சத்தில் அடர்த்தியான மயிர்கள் வளர்ந்திருக்கும். ஆகையால்

என் தங்கை இவளாக இருக்குமோ என்ற ஒரு சந்தேக மிருக்கிறது. அவளாக இருந்தால், அவள் சுகமாக இருக் கட்டும். நானும் போய்ப் பார்க்கமுடியும் அல்லவா? ஆனால் அவளுக்குத் தாய் தகப்பன் மலையில் இருக்கிறார்கள் என்று நீங்கள் கூறும்பொழுதுதான் சந்தேகமாக இருக்கிறது. என்னுடைய தாய் தகப்பன் என்னிடம் அல்லவா இருக் கிறார்கள். ஆகையால் மறுபடியும் அந்த மலைக்கு நீங்கள் போக என்ன உதவிகள் வேண்டுமோ அவற்றை நான் தருகிறேன். என் தங்கையைக் கண்டுபிடித்துக் கொடுக்கும் நபருக்கு ரூபாய் ஐந்நூறு வெகுமதி கொடுப்பதாகவும் பத்திரிகையில் பிரசுரித்தேன். பலன் ஒன்றும் கிட்டவில்லை. கடைசியில் இறந்து விட்டாளோ என்று நினைத்துவிட்டோம். ஆகையால் உங்கள் கட்டுரையில் இருக்கும் மங்கையையும் பார்த்து விடலாமென்று ஓர் ஆசை" என்று கூறிக் கண் கலங்கினார் கமலநாதன்.

கமலநாதன் வந்து போனபின், எனக்குச் சதா கமல நாதன் எண்ணமாகவே இருந்தது. அவர் பண உதவியும் செய்துவிட்டார். இதை நல்ல முறையில் முடித்தால் அப் பாவிக் கெம்பிக்குக் கொஞ்சம் சொத்தும் கிடைக்குமே. இந்த உதவியை நான் செய்ய வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் எது எப்படிப்போய் எப்படி முடியுமோ. உண்மை யில் செம்பி கமலநாதனுடைய தங்கையா? அல்லது மனை வியா? என்ற பயமும் உண்டானது. ஆகையால் முதலில் ஜோலார் பேட்டையில் போய் அவருடைய மனைவியையும் பெற்றோரையும் கண்டேன். அவர் மனைவியின் எதிரிலேயே செப்பியைப் பற்றிப் பேசினேன். (கெப்பி) கமலாவின் ஐந்து வயதில் எடுத்த படத்தை வந்து காட்டும்படி தம் மனைவியிடம் கமலநாதன் கூறினார். இதனால் உடனே கெம்பி இவருடைய தங்கைதான் என்று தீர்மானம் செய்து கொண்டு இந்தக் காரியத்தில் இறங்கினேன். அதற்குப் பிறகுதான் நான் மலைக்கு வந்தேன்.

இப்பொழுதோ நீங்கள் எல்லோரும் உறவினர்களாகி விட்டீர்கள். ஆகையால் நாம் எல்லோரும் ஜோலார்பேட் டைக்குப் போய்க் கமலாவின் (கெம்பி இது மலையில் கொடுத்த பெயர்) தகப்பனுரையும் சின்னம்மாளையும் பார்க்க வேண்டும். நாங்கள் உங்கள் இருவருக்கும் செய்யவிருக்கும் மரியாதை களையும் ஏற்றுக்கொண்ட பின்தான் நீங்கள் உங்கள் மலைக்குப் போக வேண்டும். நீங்கள் உங்கள் மலையில் ஏதாவது வியாபாரம் செய்வதாக இருந்தாலும் நல்லதுதான். எந்தக் காரணத்தை முன்னிட்டும் உங்களை நாங்கள் பிரிக் கவே மாட்டோம். அந்தப் பயம் உமக்கு வேண்டாம்'' என்று கெம்பியின் கணவரைப் பார்த்துக் கூறினேன்.

அடுத்த நாள் எல்லோரும் ஜோலார்பேட்டைக்குப் பிர யாணமானோம். கமலா (கெம்பி) தன் தகப்பனுரையும் சின்னம் மாளையும் கண்டு "ஓ" வென்று அழுதுவிட்டாள். இரண்டு நாட்களுக்குப் பிறகு கமலாவுக்குச் சேரவேண்டிய சொத் தின் பாகமும், திருமணச் செலவும் எல்லாம் கொடுக்கப் பட்டன. அந்த மலையில் ஒரு வியாபாரத்தைத் தொடங்கும் படி ஏற்பாடானது. அன்று எல்லோரும் ஜோலார்பேட்டை யில் சாப்பிடும்பொழுது, 'கடைசியில் என் தங்கையைக் கண்டுபிடித்தவருக்கு இந்த ரூபாய் ஐந்நூறும்' என்று கூறிக் கமலநாதன் என் கையில் ஐந்நூறு ரூபாயைக் கொடுத் தார். எல்லோருள்ளத்திலும் என் நினைவை நிலைநாட்டி விட்டு விடைபெற்றேன்.

# 9. அவளோ திக்கற்றவள் அவளே தியாகி!

காட்டிலோ மலையிலோ எங்கு வாழ்ந்தாலும் காடர்கள், மலாவசிகள், ஆதிவாசிகள் முதலியவர்களும் மனித குலத்தவர்தானே. அவர்களும் அன்பு, பண்பு, தியாகம், தெய்வபக்தி முதலியவைகளை நகரவாசிகளைவிட அதிகம் பெற்றவர்கள்.

சில மலைவாசிகளைக் காண வேண்டும் என்று நான் மைசூரிலிருந்து குண்டல் பேட்டை வழியாக, உதகைக்குப் போகும் மார்க்கத்தில் கூடலூரில் வேறு பஸ் மாறிச்சென்று வயநாடு, நிலக்கோட்டை முதலிய மலைப்பிராந்தியங்களில் சுற்றிக்கொண்டிருந்தேன்.

பலமுறைகள் ஈண்டு வத்திருப்பதால் எனக்கு வழிகள் எல்லாம் தண்ணீர்பட்டபாடாக இருந்தன. அங்கே அன்று கூடிய கிராமச் சந்தையில் சில ஆதிவாசிகளைக் கண்டு, பேசி அவர்களுள் ஒருவனுடைய குடிசையில் தங்குவதற்காகச் சென்றேன். அவனுடன் வழியில் பேசிக் கொண்டே போனபொழுது, "மிகவும் ஏழையான அவன் கூலிக்கு மூட்டை தூக்கும் பணி செய்கிறுனே! அன்றிரவு அவன் குடிக்கக்கூட கஞ்சி இருக்கிறதோ இல்லையோ"

என்று என் உள்ளம் எண்ணியது. இருந்தலும் அவனும் அவன் மனேவியும் மிகவும் உத்தமமானவர்கள் போலும் என்று தெரிந்து கொண்டேன்.

அவன் மனேவியை நான் சீக்கிரத்தில் காணவேண்டும் என்று சற்று வேகமாக நடந்தேன். என் கற்பனே உள்ளத்தில் நான் வழியில் காணும் இயற்கைகளுடன் எல்லாம் அவனேப்பற்றி வர்ணித்துக் கொண்டே சென்றேன். கடைசியில், அவனுடைய குடிசையின் வெளித் திண்ணேயில் போய் உட்கார்ந்தேன். அவன் பெயர், "சோளன்" அவள் பெயரோ "சோழி" என்று அவன் தெரிவித்தான். அவன், தான் பேசும் தமிழில் அவளே எப்படி அழைத்தான் தெரியுமா?

"ஏண்—ணு—டி! சோழி—ஈங்—கூட்—வா, தோ—ர் யா, வா—ந்—கீரார்"

(ஏண்டி சோழி இங்கே வா! தொரை ஐயா—வந்திருக்கிருர்.) இந்த வார்த்தைகள் தமிழாக இருந்தாலும், ஒவ்வொரு எழுத்துக்கும் வார்த்தைக்கும் இடையில் நீட்டி இழுத்து இழுத்துப் பேசுகிருன். இவர்கள் அருகிலிருக்கும் கிராமக் கடைகளுக்கு அடிக்கடி போவதால், அந்தக் கிராமக் கடைக்காரர்கள் இவர்கள் வந்தால், இவர்கள் பேசுவதைப் போலவே மிகவும் அழகாகப் பேசுகிருர்கள். குடிசையின் வெளியில் வந்த சோழி எனக்கு, "சா—லா—முயா!" என்று கூறிஞள். "சலாம்மா!" என்று தலேயைத் தூக்கி அவள் அழகைப் பார்த்தேன்.

நான் அவளேப்பற்றி வழியில் செய்து கொண்டுவந்த கற்பனே எல்லாம் இடிந்த கோட்டைச் சுவர்போல் விழுந்து விட்டது. அவளேக் கண்டதும் குழந்தைகள் இல்லேயா? என்று கேட்கவந்த என் வாய் "டக்" கென்று மூடிக் கொண்டது. அவளேப் பற்றியே ஒரு பெரிய நீண்ட சிந்தனேயில் உட்கார்ந்தேன்.

அன்றிரவு அவர்கள் இல்லத்தில் மிகவும் ஏழ்மையான உணவு எனக்கு விருந்தாக அளிக்கப்பட்டது.

மறுநாள் முதல் நான் காலையில் எழுந்ததும் அவன் கையில் ரூபாய் ஐந்து கொடுத்துவிட்டு, எனக்குச் சாப்பாடு போடுவதற்காக இதை வைத்துக்கொள்" என்று கூறினேன், அந்த ஏழை அதை வாங்குவதற்குள், நான் பட்டபாடு போதும் போதுமென்ருகிவிட்டது.

மறுநாள் அவனையே என் வழிகாட்டியாக வைத்துக் கொண்டு பல—இடங்களுக்குச் சென்றேன்.

சோளனைவிட சோழி சுமார் பத்து அல்லது இருபது வயது மூத்தவளாக இருக்கலாம். அவள் கறுப்பாக இருந்தாலும், முகம் எழில்மிக்க வடிவமுடையவள். அன்பு நிறைந்த உள்ளம் படைத்தவள். ஆனால் சோளனே நல்ல வாலிபன். அவனுக்கு சுமார் முப்பது வயது இருக்கும். நான் சோளனை வழியில், "உன்னைவிட உன் மனைவி வயது மூத்தவளா? அல்லது வியாதி வந்து அப்படிப் போனாளா?" என்று கேட்டேன். அவன் கண்களில் கண்ணீர் கொட்டியது. அதைக் கண்டதும் எனக்கு ஒரு பக்கம் சந்தோஷம், மற்றொரு பக்கம், "பாவம்" என்றும் தோன்றியது. ஏனென்றால் ஏதோ ஒரு ரகசியம் இவர்கள் குடும்பத்தில் மறைந்திருக்கிறது என்று தெரிந்து கொண்டேன். ஆனால் பிறகு சொல்ல ஆரம்பித்தான் அவன்.

"என்னுடைய ஊர், என் தாய் தகப்பன் முதலியவை பற்றி எனக்கு இன்று நினைவுஇல்லை. நான் இந்த இடம் வந்து சேர்ந்து சுமார் இருபதாண்டுகளுக்கு மேல் ஆகி விட்டது. நான் சுமார் பத்து வயது பையனாக இருக்கும் பொழுது என்னை இரண்டு பேர் ஏதோ கொடுத்து அழைத்து வந்தார்கள். இந்த மலைக்குப் பக்கத்திலிருக்கும்

மலையில் ஏதோ ஒரு தேவதையின் கோயில் இருக்கிறது. என்னைக் கொண்டு வந்தவர்கள், அவ்விடத்திற்கு வந்ததும், என் கால்களையும் கைகளையும் கட்டினார்கள். நான் பயந்துபோய் கத்தினேன். உடனே அவர்கள் கையில் வைத்திருந்த தடியால் என் மண்டையில் அடித்தார்கள். "ஐயோ! ஐயோ" என்று கத்தினேன். அவ்வளவுதான் எனக்குத் தெரியும். நான் மயக்கமாக எத்தனை நாள் இருந்தேன் என்பது எனக்குத் தெரியாது. நான் கண் திறந்து பார்த்தபொழுது, என்னைக் காப்பாற்றிய உத்தமர் என் பக்கத்தில் இருந்தார். என்னைத் தலையில் அடித்ததால், என் நினைவு குறைந்துவிட்டது. பழைய நினைவு சில ஆண்டுகளுக்கு முன்தான் வந்தது. நான் "ஐயோ ஐயோ" என்று கத்தும்பொழுது இப்பொழுது இருக்கும் என் மனைவியின் முதல் கணவர் பக்கத்தில் அதே மலையில் விறகு வெட்டுவதற்காகப் போயிருந்தார். காட்டில் "யாரோ மாடு மேய்க்கும் ஒரு பையன் குரல்" என்று என் குரல் கேட்டதும், தன் கையிலிருக்கும் கோடாரியால் என்னைத் துன்பப்படுத்தும் மிருகத்தை வெட்டி விடுவதென்று அவரும், ஓவ்—ஓவ்" என்று குரல் கொடுத்துக் கொண்டே ஓடிவந்தார். அவர் கோடாரியோடு ஓடி வருவதைக் கண்ட அந்த இரண்டுபேரும் ஒரே ஓட்டமாக ஓடிவிட்டார்கள் என்று அவர் என்னிடம் கூறினார்.

நான் நல்ல நினைவுடனில்லாதிருந்தாலும், என்னை அன்பாக அவர் பார்த்துக்கொண்டார். சுமார் பத்துப் பதினைந்து ஆண்டுகள் நான் இவர்களிடமே வாழ்கிறேன். இவர்களுக்கு எருமைகளும், ஆடுகளும் வயலுமிருக்கின்றன. அந்த வேலையில் என்னையும் பழக்கிவிட்டு விட்டார்.

இப்படி இருக்கும்பொழுது, ஒருநாள் என் எஜமானர் வியாதியாகப் படுத்தார். பிறகு எழுந்திருக்கவே இல்லை.

அவர் மரணமடையும் பொழுது என்னைப் பக்கத்தில் உட்காரவைத்துக்கொண்டு, "சோளா! நான் இறந்து விடுவேன். எனக்குப் பிறகு எங்களுக்குக் குழந்தைகள் கிடையாது, நீ என் ஆடுமாடுகளையும், வயலையும் பார்த்துக்கொள். இவளையும் நீ காப்பற்ற வேண்டும். அவள் ஒரு அனாதை. மாற்றாந்தாயின் கொடுமையாலும், தன் கணவனின் கொடுமையாலும், இவள் வெகுதூரத்தி லிருந்து இந்த மலைக்கு வந்துவிட்டாள். தற்கொலை செய்துகொள்ளப்போன இவளை நான் வழியில் காப்பாற்றி னேன். காப்பாற்றியதற்காக அவளையே நான் திருமணமும் செய்து கொண்டேன். அவளும் எங்கள் ஆதிவாசிகள் குலத்தைச் சேர்ந்தவள். இந்தக் காட்டில் நீதான் பார்க்கிறாயே, கணவன் இருபது வயதுடையவனாக இருந்தால், மனைவிக்கு முப்பது—நாற்பது வயதாக இருக் கிறது. நான் உன் உயிரைக் காப்பாற்றினேன். நான் அன்று வந்திருக்காவிட்டால், அந்தத் தேவதைக்கு உன்னை "நரபலி" கொடுத்திருப்பார்கள். இப்பொழுது நான் மரணமடைந்தபின் நீ இவளைக் காப்பாற்று. இதுதான் நீ எனக்கு செய்யவேண்டிய மறு உதவி" என்று கூறி இவளுடைய கணவர், மரணமடைந்தார். அவரது மரண வருத்தம் எனக்குத் தாங்க முடியவில்லை. ஏனென்றால் என் உயிரைக் காப்பாற்றிய அவருடைய உயிர் போகாமல் செய்வதற்கு ஒரு வழியும் இல்லாமல் போனது. பிறகு நான் அவருடைய வயல்களையும் ஆடு மாடுகளையும் அவர் எப்படிக் கற்றுக்கொடுத்துச் சென்றாரோ அப்படியே மேய்த்தும் வயலைக் கவனித்தும் வந்தேன். நான் இவளிடம் நன்றியாகத்தான் இருந்தேன். சிறிது காலம் சென்றதும், இந்தக் காட்டில் நான் இவளைக் கலியாணம் செய்துகொண்டேன் என்ற வதந்தியைக் கிளப்பிவிட்டார்கள். அந்தச் சொல் எனக்கும் இவளுக்கும் மிகவும் அவமானமாக இருந்தது. சிலர், "இவளைத் திருமணம் செய்துகொள்" என்றே கேட்டார்கள். சிலர்

அவளிடம், ''அவனைத் திருமணம் செய்துகொள். இல்லாவிட்டால், இந்தக் கால்நடைகளையும் வயலையும் இவனைப்போல் கவனித்துக்கொள்ள உனக்கு ஒரு ஆள் கிடைக்க மாட்டான்'' என்று சொல்லிக் கொடுத்தார்கள்.

திருமணம் செய்து கொண்டேனே ஒழிய நான் என்னைக் காப்பற்றிய அந்த உத்தமனுக்காக என் வாழ் நாள் முழுவதையும் என்னுடைய சுகத்தையும், உலக இன்பத்தையும் தியாகம் செய்துவிட்டேன் என்று தன் சோகக் கதையைச் சொல்லி முடித்தான்.

அதுவரையில் மௌனமாக இருந்த நான், ''சோளா, நீ ஒரு உத்தமன். பல்லாண்டுகளுக்கு முன் திருவள்ளுவர் என்ற பெரியார் கூறிய ''நன்றி மறப்பது நன்றன்று'' என்ற கருத்தை நீ இன்று காட்டில் நிலைநாட்டுகிறாய்'' என்று கூறி அவனைப் போற்றினேன்.

# 10. வெட்டியது கயிறு வீழ்ந்தது தலை

கோவையிலிருந்து பாலக்காடு வழியாக மலம்புழா அணைக்கட்டுக்குச் சென்றேன். அங்கு திரு. டாக்டர். பால்ராஜ் இல்லத்தில் சில நாட்கள் தங்கினேன். அவர் பல ஊர்களில் மக்களுக்குத் தொண்டாற்றி இருக்கிறார். பல இன மக்களிடமிருந்து பல செய்திகளைச் சேகரிப்பதில் மிகவும் ஆற்றலுள்ளவர். அன்று மாலை நானும் டாக்டரும் ஜீப்பில் மலம்புழா அணைக்கட்டையும், நடுத்திட்டையும், மலைகளையும் காணச் சென்றோம். ஜீப் ஓட்டி மிகவும் திறமை யாக கரடு முரடான வழியிலும் ஜீப்பை ஓட்டிச் சென்றார். அவர் சொல்வதைப் போலெல்லாம் ஜீப் கேட்க ஆரம்பித்தது. நாங்கள் இரண்டாவது மலைச்சரிவை அடையும் நேரத்தில் நன்றாக இருட்டி விட்டது. ஜீப்பின் ஒளி போதாமல் டார்ச்சு விளக்குகள் ஒளியை வீசின. ஜீப் பள்ளத்தில் உருண்டு விடாமலும், எதிரில் எதிலாவது மோதிக்கொள்ளாமலும் இருக்க நாங்கள் பட்ட பாட்டை நினைத்தால், உள்ளம் கலங்கிற்று.

சிறிது நேரத்திற்கெல்லாம் யாரோ கற்களை வீசி அடிப் பதுபோல் மழை பெய்தது. "இடியும் மழையும் மலபாரில் நோக்கு" என்பதைப் போல் அது பாலக்காட்டு மழை;

லமாகத்தான் இருந்தது. 'இந்தப் பெரிய மழையில் மேலே தொடர்ந்து ஜீப்பை ஓட்டுவது புத்திசாலித்தனமில்லை. எங்கேயாவது ஓர் இடத்தில் நிற்க வைக்கவும்' என்று கூறினேன். கார் ஓட்டியும் ஒரு நல்ல இடத்தில் வண்டியை நிறுத்தினான். மழை விட்டபாடில்லை. தண்ணீரில் தெப்பம் மிதப்பதைப் போல், எங்கள் ஜீப் மழையில் மிதந்தது. நாங்கள் ஜீப்பின் எல்லாப் பகுதிகளையும் மூடிக்கொண்டு உள்ளே பல சம்பவங்களைப் பற்றிப் பேசிக்கொண்டே இருந்தோம்.

"நம்ப பொன்னி விஷயம் ஐயாவுக்கு தெரியுமா சார்!" என்று ஜீப் ஓட்டி கேட்டார்.

"ஆமாம், ஆமாம். ஒரு பெரிய வேடிக்கையான சம்பவம் இங்கே நடந்தது. பாவம்....!" என்று தொடங்கினர் டாக்டர்.

"நஞ்சன் வீட்டில், நஞ்சன் ஒரு வயது குழந்தை முதல் வளர்ந்து வந்தான். குழந்தையின் பால் உள்ளத்தில் நஞ்சன் தகப்பன் என்றும், கண்ணி தாய் என்றும் பச்சை மரத்தில் அடித்த ஆணிபோல் பதிந்து விட்டது. ஆனல் உண்மையான பெற்றோர்கள் யார் என்பது அந்தக் குழந்தை உள்ளத்திற்கு தெரியவில்லை, தெரிந்துகொள்ள வேண்டும் என்றும் நஞ்சன் கவலைப்படவில்லை. ஆண்டுகள் அகன்றன. வயதும் நஞ்சனுக்கு ஐந்து முடிந்தது.

நஞ்சனும், முனியனும் உயிர் நண்பர்கள். நஞ்சன் தன் உள்ளத்தில் முனியனும் பொன்னியும் தனக்கும் உயிர் நண்பர்கள் என்று நினைத்துவிட்டான்.

ஒரு நாள் இரவு நஞ்சனை, முனியன் தன் வீட்டுக்கு அழைத்தான். இரவு சாப்பிட வெகு நேரமாகிவிட்டதால் இருள் சூழ்ந்து கொண்டது. ஆகையால் சாப்பிட்டபின், முனியன் தன் வீட்டிலேயே நஞ்சனைப் படுக்கும்படி கூறினான்.

''வேண்டாம்பா! நான் இருட்டாக இருந்தாலும் போய் விடுவேன். கொஞ்ச தூரம் தானே எங்கள் வீடு' என்று பிடிவாதம் செய்தான்.

முனியன் கட்டாயப்படுத்தியதின் பேரில் முனியன் இல்லத்தில் படுத்துக்கொண்டான்.

ஆனால் தஞ்சனுக்குத் தூக்கம் வரவில்லை. அவன் கன்னியையும் பென்னியையும் அம்மா என்றே அழைப்பான். நஞ்சனையும் முனியனையும் அப்பா என்றே அழைப்பான்.

அன்றிரவு தஞ்சன் முனியனின் இல்லத்தில் தூங்காமல் வெகுநேரம் விழித்துக்கொண்டே இருந்தான். முனியனின் குறட்டையும், பொன்னியின் குறட்டையும் கேட்க ஆரம்பித்தன. தஞ்சன் மெதுவாக எழுந்தான்; தெருக்கதவைத் திறந்துகொண்டு வெளியில் வந்தான்; மறுபடியும் நன்றாகச் சாத்திக்கொண்டு, அந்த இருள் சூழ்ந்த நேரத்தில் தன்னுடைய வீட்டை நாடி நடந்து சென்றான். கதவைத் தட்டினான்.

''இந்த நேரத்தில் யார் வருவார்கள்'' என்று திடுக்கிட்டு நஞ்சனும் கண்ணியும் கதவைத் திறந்தார்கள். தஞ்சன் உள்ளே நுழைவதைக் கண்டு நஞ்சனும் கண்ணியும் திடுக்கிட்டுச் சிலையாக நின்றார்கள்.

'ஏண்டா! அங்கேயே படுத்துக்கொள்ளக் கூடாதோ?' என்று கேட்டார்கள்.

நடந்ததை விளக்கினான்—தஞ்சன். பிறகு எல்லோரும் படுத்துக்கொண்டார்கள். தஞ்சன் நிம்மதியாகத் தூங்கினான். ஆனால் நஞ்சனுக்குத் தூக்கம் வரவில்லை. பையனைப் பற்றிய பல சிந்தனைகள் அவன் உள்ளத்திலே

தோன்றின. பையன் மேல் ஆசை. ஆனால் அது பையனுக்கு ஆபத்தாகப் போய் முடிந்தால் என்ன செய்வது? கண்ணியின் உள்ளத்திலோ, "நமக்கு ஒரு பையன் பிறந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும். என்ன ஆசையாக வளர்த்தாலும் தஞ்சன் நம்முடைய பையனா?" என்று சிந்தனை செய்தாள்.

அதிகாலையில் முனியனும் பொன்னியும் நஞ்சன் படுத்திருந்த படுக்கையில் பையனைக் காணாததால் திடுக்கிட்டார்கள். உடனே முனியன் நஞ்சன் வீட்டுக்கு ஓடினான். அங்கே தஞ்சன் இருப்பதைக் கண்டான். முனியனுக்குக் கண்கள் சிவந்தன. அவன், 'எப்பொழுதுடா எழுந்து வந்தே!'' என்று கோபமாகக் கேட்டான். முனியனின் கோபத்தை அன்றுதான் கண்ணியும் நஞ்சனும் கண்டார்கள்.

"கதவைத் திறந்து போட்டுவிட்டுத் திருடன்போல் எழுந்து வந்து விட்டான். இது நடக்கும் என்று எனக்கு சில காலத்திற்கு முன்பே தெரியும். சரி! இன்று மாலை முதல் நீ அங்கேதான் இருக்கவேண்டும். எப்படித் தூக்கம் வராமல் போகிறது பார்க்கிறேன்" என்று கூறித் தஞ்சனை அடித்தான் முனியன்.

தஞ்சன் வலி தாங்காமல், "நீ யார் என்னை அடிக்க? இவ்வளவு நாள் வரையில் எங்கள் அப்பா இருக்கும் பொழுது நீ—" என்று ஏதோ கூறுவதற்குள் நஞ்சன், தன்னுடைய வாயை மூடினான். முனியன் கோபத்துடன் போய்விட்டான். நண்பர்களுக்குள் விரோதம் ஏற்படும் போல் தோன்றியது. நஞ்சன், தஞ்சனுக்கு எவ்வளவோ எடுத்துக் கூறியும், அவன் அன்று மாலை "அந்த வீட்டுக்கே போகமாட்டேன்" என்று கூறிவிட்டான்.

'சாயங்காலம் நஞ்சன் வராமல் இருந்தால் என்ன செய்கிறேன் பார்! இந்த நிலை ஏற்படும் என்றுதான் அவனை அடிக்கடி என் வீட்டுக்கு அனுப்பு என்று கூறினேன். ஏதோ நஞ்சன் ஆசைப்படுகிறானே என்று பார்த்ததின் பலன் இப்படி முடிந்தது' என்று கோபக்கனல் வீசப் பேசிவிட்டு வேலைக்குச் சென்றான் முனியன்.

முனியனும் நஞ்சனும் சுமார் ஐந்து வயது இருக்கும் பொழுது நெஞ்சையள்ளும் நஞ்சையில் திண்ணைப் பள்ளி யில் வாசித்தவர்கள். இருவருக்கும் பத்து வயதாகும் பொழுது, சுற்றுப்புறங்களிலிருக்கும் இடங்களில் சிற்றாள் வேலை செய்வதுண்டு. சில ஆண்டுகளுக்குப் பின் வெளி யூரில் கொல்லத்து வேலைகளுக்குச் சென்று வேலை செய்ய ஆரம்பித்தார்கள். கடைசியில் பல அணை கட்டும் வேலை களிலும் கலந்துகொண்டு, இருவரும் மிகவும் திறமைசாலி கள் என்றும் அணை கட்டும் விஷயங்களில் அனுபவசாலி கள் என்றும் பெயர் பெற்றனர்.

முனியனையும் நஞ்சனையும் பற்றித் தெரியாதவர்கள் இருக்கமுடியாது. ஏனென்றால் இருவரும் இணைபிரியா நண்பர்கள். எங்கு சென்றாலும் இருவரையும் ஒன்றாகவே காணலாம். எந்த ஊருக்குச் சென்றாலும் இருவரும் ஒரே குடிசையில்தான் வாழ்வார்கள். யாருடைய பேச் சிலும், பொறாமையிலும், சண்டையிலும், மற்ற எந்தக் கெட்ட பழக்கத்திலும் இருவரும் சேருவதில்லை. அவ்விடங் களில் இந்த இருவரையும் காணவும் இயலாது. மேலும், தங்களிடம் வேலை செய்யும் கூலிப் பெண்களிடமும் அன் பாகவும், மரியாதையாகவும் நடந்து கொள்வார்கள்; வீண் பேச்சும் வைத்துக்கொள்வதில்லை. இக்காரணங்களால் இவர்களைச் சிலர் நல்லவர்கள் என்று எண்ணினார்கள். சிலர் தம் உள்ளத்தில் பொறாமை கொண்டார்கள். ''எல்லாக் கூலிப்பெண்களும், இந்த இருவரிடம் காட்டும்

மரியாதையே வேறு. நம்மிடம் பேசும் கிண்டலே வேறு" என்று சில வாலிபர்கள் பேசிக்கொண்டார்கள்.

சுமார் ஐந்தாறு அணைக்கட்டுகளில் வேலை செய்து விட்டு கடைசியில் பாலக்காடு "மலம்புழா" அணைக்கட்டுக் கட்ட பல எஞ்சினீர்களின் சிபாரிசில் முனியனுக்கும், நஞ்சனுக்கும் அங்கு வரும்படி அழைப்பு வந்தது.

மலம்புழா அணை கட்டும் வேலை மிகவும் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. மலம்புழா அணைக்கட்டில் முனியனுக்கும் நஞ்சனுக்கும் மேஸ்திரி வேலை கிடைத்தது. இந்த வேலையில் இருவரும் தங்களுடைய திறமையையும், புத்தி கூர்மையையும் காட்டினார்கள்.

முனியனும், நஞ்சனும் ஒரேவிதமான துணி கட்டு வதையும், ஒரே விதமான ஆகாரம் சாப்பிடுவதையும் பலர் கண்டார்கள். பலர், "இது அவர்களுடைய பழக்கம்" என்றும் 'குழந்தை முதல் இணைபிரியா சகோதரர் கள்' என்றும் 'ஒரே தாயின் சகோதரர்கள்' என்றும் கூறி னார்கள். இவர்கள் திருமணமாகாத தேக கட்டுடன் காட்டு ராஜாக்களைப் போல் இருப்பதைக் கண்டு, சில பெரியவர்கள் திருமணம் செய்துவைக்க முன் வந்தார்கள். இச்செய்தி பலரிடம் பரவலாயிற்று. சில பெண்கள் இவர் கள் இருவரையுமே திருமணம் செய்துகொள்ளவும் நினைத்தார்கள்.

பெண் தேடும் வேலையில் மலம்புழா அணைக்கட்டில் வேலை செய்யும் எல்லோருமே போட்டி இட்டார்கள். கடைசியில் "பொன்னி"யையும் "கண்ணி" என்பவளையும் எல்லோரும் சேர்ந்து தேர்ந்தெடுத்தார்கள். ஏனென்றால் பொன்னியும், கண்ணியும் பல்லாண்டுகளாக இணை பிரியாத் தோழிகள். இருவரும் மலையாளிப் பெண்கள்.

பல அணைக்கட்டுகளில் வேலைபார்த்தவர்கள். முனியன் நஞ்சனைப் போலவே, இந்தப் பெண்களும் மிகவும் அமைதியானவர்கள்; யாருடைய பேச்சுக்கும் போவதில்லை. "வேலை உண்டு வீடு உண்டு" என்ற பழக்கமுடையவர் கள். முனியனுக்கும் நஞ்சனுக்கும் திருமணத்திற்காகப் பொன்னியையும், கண்ணியையும் முறையே ஏற்பாடு செய் வதில் கூலியாட்கள் முதல் பெரிய உத்தியோகஸ்தர்கள் வரையில் எல்லோருமே ஈடுபட்டார்கள். "சரியான பொருத்தம். சரியான ஜோடி" என்று எல்லா இன மக்களும் ஜாதி வேறுபாடுகள் இன்றி ஒன்ருகவே ஒப்புதல் தெரிவித்தனர். முதலில் இவர்களும், அவர்களும் ஒப்புக் கொள்ளவில்லை. கடைசியில் எல்லோருடைய உதவியாலும், ஒத்துழைப்பாலும் இவர்களுக்குத் திருமணம் விமரிசையாக நடைபெற்றது.

பொன்னியும் கண்ணியும் மலையாள நாட்டுத் திருமண உடையில் தேவ கன்னியர்களைப் போல் தோற்றமளித்தார் கள்.

முனியனும், நஞ்சனும் தமிழ் நாட்டு வீரர்களைப் போல் காட்சி அளித்தார்கள். அன்று மேள வாத்தியங்கள் முழங்கின. மலம்புழா அணைக்கட்டின் சுற்றுமுற்றுமிருக்கும் மலைகளில் இந்தத் திருமண ஒலி எதிரொலித்தது. அன்று அணைக்கட்டில் வேலை செய்த அனைவரும் இவர்களுக்குப் பல அன்பளிப்புகள் கொடுத்தார்கள்.

சுமார் நான்கு ஐந்து நாட்கள் வரையில், சுமார் இருபது முப்பது மைல் சுற்றளவு வரையில் இவர்களுடைய திருமணப் பேச்சேதான்.

எல்லோரும் புத்திமதி சொன்னதின் பேரில் சில மாதங் களுக்குள் சுமார் ஐம்பது கெஜ தூரத்தில் வீடு எடுத்துக்

கொண்டு முனியனும், நஞ்சனும் வாழ்ந்தாலும் வெளியி லிருந்து பார்ப்பவர்களுக்கு ஒரே வீட்டில்தான் வாழ்கிறார்கள் என்பதைப்போல் தோன்றியது. இரவுக் காலங்கள் தவிர, மற்ற நேரங்களில் நான்கு பேரையும் ஒரே இடத்தில் காண லாம். திருமணமாகி ஓராண்டுக் காலம் முடிந்தது. பொன் னிக்குப் பையன் பிறந்தான். மான் போன்ற விழிகளையும் சுருண்ட தலைமயிரையும் கத்தி போன்ற மூக்கையும் உடைய ஒரு குழந்தை பிறந்தது என்றால், அதில் பொன்னிக்குக் கூடப் பெருமையில்லை. கண்ணிதான் பெருமை கொண்டாடி னாள். கண்ணியே அன்று எல்லோருக்கும் மிட்டாய் கொடுத் தாள். சிலருக்கு தாம்பூலம் கொடுத்தாள். பையனுக்குப் பதினைந்தாம் நாள், முனியனின் நண்பன் நஞ்சனின் நினை வாகத் "தஞ்சன்" என்று நாமகரணம் செய்தான்— முனியன்.

தஞ்சன் ஒரு வயது குழந்தையாக இருக்கும்பொழுதே நஞ்சன் வீட்டில் செல்லமாக வளர ஆரம்பித்தான், "தன் நண்பனுக்குக் குழந்தை இல்லை. ஏதோ ஆசை" என்று முனியன் நினைத்தான். தன் தோழி கண்ணிக்கு ஆசை. அவளுக்குக் குழந்தை இல்லை. பாவம் என்று பொன்னி நினைத்தாள். ஆனால் குழந்தையைத் தூக்கிக்கொண்டு வந்தாலும், இரவில் அழுவதால் இரவுக் காலங்களில் நஞ்சன் வீட்டுக்குத்தான் கொண்டுபோய் விடுவான் முனியன். இப்படி நாட்கள், மாதங்கள் ஆண்டுகள் சென்றன.

தஞ்சன் வளர வளர நஞ்சனையும் கண்ணியையும் அம்மா அப்பா என்றே அழைத்தான். சில நாட்கள் கழித் துத் தஞ்சன், நஞ்சன் வீட்டிலேயே மாதக் கணக்கில் தங்கு வதும், பொன்னியின் வீட்டுக்குப் போவதும் வருவதுமாக மாறிவிட்டான். ஏனென்றால் முனியனும் பொன்னியும் சதா நஞ்சன் இல்லத்திற்கு வரவேண்டுமே என்ற எண்ணம் அங்கே மறைந்து விட்டது.

இதனல் தஞ்சன், நஞ்சனையும் கண்ணியையும் பெற்றோர்கள் என்றும் முனியனையும், பொன்னியையும் உறவினர்கள் எனறும் எண்ணி விட்டான். இந்த எண்ணம் உருவாகிய நிலையில்தான் தஞ்சன், அன்றிரவு முனியன் இல்லத்திலிருந்து நடு ஜாமத்தில் எழுந்து நடந்து வந்து விட்டான்.

அன்றுமுதல் பொன்னி மிகவும் ஆழ்ந்த சிந்தனையில் உயிர் அற்ற உடல் போல் உலாவிக்கொண்டு வந்தாள். தான் செய்த குற்றத்துக்காக முப்பதாண்டுகள் நண்பர் களாக இருந்த ஒரு சிநேகம் குந்தகமடையுமோ? என்ற கவலையே பொன்னியை வேதனைக்குள்ளாக்கியது.

இரண்டு மூன்று நாட்களுக்குப் பின் பொன்னி மிகவும் ஆழ்ந்த சிந்தனையோடு வெளிவாசற்படியில் உட்கார்ந் திருந்தாள். உடல்தான் உட்கார்ந்து கொண்டிருந்ததே தவிர உள்ளம் ஊசலாடிக் கொண்டிருந்தது.

அன்று வேலைக்குப் போன முனியன், எதையோ மறந்துவிட்டதாக இரண்டு மூன்று மணி நேரத்திற்குப் பின் மறுபடியும் வீட்டுக்கு வந்தான். முனியன், பொன்னி யின் அருகில் வந்து நிற்கும் வரை, பொன்னிக்குத் தெரியவில்லை. பொன்னியின் கண்களையும் நெற்றியின் சுருக்கத்தையும் கவனித்துக்கொண்டே வந்தான் முனியன்.

"என்னடி! இரண்டு மூன்று நாட்களாக ஒரே கவலை யுடன் இருக்கிறாய். பையனை அடித்தேன் என்று வருத்தமா? நான் மட்டும் வருந்த வில்லையா? எனக்கு என்னன்னவோ கவலைகள் எல்லாம் வருகின்றன. எவ்வளவோ யோசனைகள்" என்று பேசிக் கொண்டே இருக்கும் பொழுது "வா உள்ளே! நேரமாகிறது!" என்று ஓர் ஆணின் குரல். நஞ்சனின் குரல் போல கம்பீரமாகக் கேட்டது. உடனே முனியனுக்குக்

கண்கள் சிவந்தன. உதடுகள் துடித்தன. ஆவேசம் வந்தவனைப்போல், ''யாரடி உள்ளே ஆண்குரல் கம்பீரமாக கேட்கிறதே. 'வா—உள்ளே!' என்று உன்னை அழைத்தது யார்?'' என்று கேட்டான். ''என் காதில் விழவில்லையே! ஒருவருமில்லையே!'' என்று ஆச்சர்யமாகக் கூறினாள் பொன்னி. பொன்னியின் கையில் இருந்த அரிவாளைப் பிடுங்கிக் கொண்டு ஒரே பாய்ச்சலாக உள்ளே பாய்ந்தான் முனியன்.

வீடு முழுவதும் சுற்றுமுற்றும் பார்த்தான். மூலைமுடுக்கெல்லாம் பார்த்தான். ஒருவருமில்லை. ஆனால், ஒரு மூலையில் தஞ்சன் குழந்தையாக இருக்கும்பொழுது ஏணை கட்டிய கயிறு, மறுபடியும் கட்டி இருந்தது. ஆனால் அதில் சுருக்கு இருப்பதைக் கண்டான் முனியன்.

''இது என்னடி கயிறுதொங்குகிறது. அதில் சுருக்கும் போட்டிருக்கிறதே!'' என்று கேட்டுக் கொண்டே வெளியில் வந்தான். அப்பொழுது கூடப் பொன்னி எழுந்திருக்க முடியாமல் உட்கார்ந்து கொண்டே, ''ஒன்றுமில்லை!'' என்று மட்டும் கூறினாள். அதற்குமேல் கண்கள் கலங்கின. உள்ளத்திலே ஒரு பெரிய கனம் தங்குவது போல் தோன்றியது.

''என் மகன் தஞ்சனால் உங்களுக்கும், நஞ்சனுக்கும் பகை உண்டாகும் போல் தெரிகிறது. உங்கள் இருவருக்கும் பகை என்றால், எனக்கும் கண்ணிக்கும் கூட பகை ஏற்படும் அல்லவா? நான் என் மகன் தஞ்சனை நீண்ட காலமாக அவர்களிடம் விட்டு வைத்தது ஒரு பெரிய குற்றம், எல்லோரும், ''தாய்தான் எப்படி விட்டாள்? தாய்க்கு மகன் மேல் பாசமிருந்தால், அவன் கண்ணியிடம் அவ்வளவு பாசம் வைத்திருப்பானா?'' என்றெல்லாம் பேசுவார்கள்.

மேலும், நீண்ட நாட்களாக நீங்கள் நண்பர்கள். உங்களுக்குள் விரோதம் ஏற்பட்டால், அதற்குக் காரணம் என்

மகன் அல்லன். நானேதான். அந்தக் குற்றத்திற்கு ஆளா காமல், நான் தூக்கில் மடிந்தால், நீங்கள் யாரையாவது மறு விவாகம் செய்துகொண்டு, இனியும் இந்த மாதிரியான குற்றங்களுக்கு இடமளிக்காமல் வாழலாம் அல்லவா? என் மகனும் கண்ணிதான் அம்மா என்று சுகமாக வாழ்வான். என் மகன் எங்கே வாழ்ந்தால் என்ன? சுகமாக வாழ்ந்தால் போதும். புதிய மனைவிக்கு வேறு மகன் பிறப்பான். அவன் உங்களுக்கு ஆசை மகனாக வளர்வான். மேலும், தஞ்சன் பெரியவனாக வளர்ந்தாலும், நம்மிடம் வந்தாலும் அவனுக்கு நம் மேல் பாசம் அவ்வளவாக இராது. இது உண்மை. உலகில் எவ்வளவோ பேர் நம்மைப்போல கஷ்டப் படுகிறார்கள். தகப்பனுக்கு ஓரிடத்தில் வேலை. தாய்க்கு மற்றோரிடத்தில் வேலை. கடைசியில் பிள்ளைகளுக்கும் தகப்ப னுக்கும் சண்டை உண்டாகிறதை பல இடங்களில் பலர் மூலம், பல சம்பவங்களைக் கேட்டும், பார்த்தும் இருந்தும் கூட, அவ்விதமானதொரு நிலை நமக்கே வந்துவிட்டது.

இவைகளை எல்லாம் நினைத்தேன்; கயிற்றைக் கட்டி அதன் அருகில் சென்றேன்; அதற்குள் உங்களை நினைத் தேன். உங்கள் அன்பை நினைத்தேன்; அன்னிய குலமாக இருந்தாலும் நான் சுகமாக வாழ்ந்தேன்; மகனை நினைத் தேன்; அவனைக் கடைசி முறையாகப் பார்த்துவிட்டு, உயிர்விடலாம் என்று வெளியில் வந்தேன். 'அவன் ஓடி வருவானா?' என்று பெற்ற வயிறு துடித்தது. ஆகையால் அந்தப் பக்கமாகவே பார்த்துக் கொண்டிருந்தேன். அதற் காகத்தான் நீங்கள் வந்ததையும் நான் கவனிக்கவில்லை" என்று கூறும் பொழுதே சோகக் குரலில் ஒரு தடுமாற்றம் உண்டானது.

"அட பைத்தியமே! இன்னும் கொஞ்சம் பெரியவனாக வளர்ந்தால் அவனே தெரிந்து கொள்ளுவான். அதற் காகவா நீ இந்த வேலை செய்தாய். சீசீ" என்று பொன்னி யிடம் வாங்கிய அரிவாளால் கயிற்றை "சக்" என்று

வெட்டினுன். முனியன் கயிற்றை வெட்டியதும் வெளியில் "தொப்"பென்ற ஓசை கேட்டது. முனியன் வெளியில் ஓடினுன். பொன்னி தன் கழுத்தை முருக்கிக்கொண்டு, கீழே விழுந்திருப்பதைக் கண்டான் முனியன்.

பாவம்! ஓடி வந்தான் என்னிடம். விஷயத்தைக் கூறினுன். நானும் உடனே மருந்துகளுடன் ஓடினேன்.

"அதிகக் கவலே. இருதயம் நின்று விட்டது" என்று கூறினேன். என்னுல் வேறென்ன கூற முடியும். "விதி சதி செய்து விளேயாடியது" என்றனர் சிலர்.

"பேய் அடித்துவிட்டது" என்றனர் சிலர்.

'மகன் வாழவேண்டும், என்று மாண்டாள்' என்றனர் சிலர்.

"உள்ளே இருந்து குரல் கொடுத்தது யாராக இருக்க லாம்" என்று பேசிக் கொண்டார்கள் பலர். இது கதை யன்று சார்! உண்மையில் நடந்தது என்று கூறி முடித் தார் நண்பர் டாக்டர்.

"எப்படியோ விழுந்தது மலபார் மழை. எனக்கும் 'வெட்டியது கயிறு விழுந்தது தலே' என்ற தலேப்பு பிறந்தது. பொன்னியும் தன் எண்ணம் நிறைவேறியது" என்று சாந்தி அடைந்திருப்பாள் அல்லவா?

# 11. நீலகிரி தந்த மூன்று வரங்கள்

நந்தன் என்பவன் நீலகிரியில் ஒரு தேயிலைத் தோட்டத்திலே கூலி வேலை செய்துகொண்டிருந்தான், காலையில் சங்கு ஊதியதும் வேலைக்குச் சென்றால் மறுபடியும் மாலைதான் அவன் வீட்டிற்கு வருவான்.

நந்தனுக்கு கோபாலன் என்று ஒரு பையன் இருந்தான். அவன் வகுப்பில் முதல் பையனாக வாசித்து வந்தான். தனிமையையே அதிகமாக விரும்புவான் கோபாலன். அதனால் தினம் அவன் பள்ளியிலிருந்து வந்ததும், பள்ளிப் பாடங்களைக் கொஞ்சதூரத்திலிருந்த ஒரு மரத்தின்மேல் உட்கார்ந்து வாசிப்பது வழக்கம்.

கோபாலன் பனியில் மரத்தின் மேல் உட்கார்ந்து இவ்விதம் வாசிப்பது தாயாருக்குப் பிடிக்காது. "ஏண்டா, அங்கே எல்லாம் பனியில் போறே!" என்று அடிக்கடி கூறுவாள். "தனியாக உட்கார்ந்து வாசித்தால்தான் எனக்கு நிம்மதியாகப் படிக்க முடிகிறது, அம்மா!" என்று கூறிவிடுவான்.

அன்று அவன் வீட்டுக்கு வர வெகு நேரம் ஆகி விட்டது. தாயார் மிகவும் கோபித்துக்கொண்டாள்.

"ஏண்டா, இவ்வளவு நேரம்? மரத்தின் மேல் இருட்டியபின் எப்படி வாசித்தாய்?" என்று கேட்டாள், கோபாலனின் தாய் கமலம். ஏதோ ஒரு சாக்குச் சொல்லித் தப்பித்துக் கொண்டான் கோபாலன்.

மறுநாள் காலையில் தேயிலைத் தோட்டம் முழுவதும் ஒரே அமளியாக இருந்தது. "மார்ட்டின் துரை, கூலி ஆட்களுக்காக வைத்திருந்த பொங்கல் போனஸ் ரூ 5000 திருட்டுப் போய்விட்டது" என்று மூலை முடுக்கு எல்லாம் பேசிக்கொண்டார்கள். சிறிது நேரத்திற்கெல்லாம் எஸ்டேட் துரையும் வந்தார். எல்லா எஸ்டேட் கூலிகளை யும் ஒன்ருக நிறுத்திஞர்.

"நேற்றுப் பாங்கியிலிருந்து ரூ. 5000/- பொங்கல் போனஸுக்காக எடுத்து என் வீட்டில் தோல் பையுடன் மேஜையின் மேல் வைத்தேன். சிறிது நேரம் கழித்து அந்தப் பையைக் காணும். அதைக் கண்டுபிடிக்கும் வரையில் உங்களுக்குப் போனஸ் பணம் கொடுக்க இயலா ததைக் குறித்து வருந்துகிறேன். அதைக் கண்டுபிடித்து யார் சொல்லுகிருர்களோ, அவர்களுக்கு ரூ. 500—வெகுமதி கொடுக்கப்படும் என்று கூறிவிட்டுப் போய்விட்டார் துரை.

இதைக் கேட்டதும் சிலர், "ஐயோ, போனஸ் பணம் போய்விட்டதே!" என்று வருந்தினர். கண்டுபிடித்தால் ரூ 500 கிடைக்குமே என்ற சபலம் சிலருக்கு.

மறுநாள் பொங்கலுக்காக எஸ்டேட் முழுவதும் விடுமுறை. ஆனல் திடீரென்று அன்று காலை சங்கு சத்தம் கேட்டதும் விவரம் தெரியாமல் தொழிலாளர்கள்

எல்லோரும் எஸ்டேட் ஆபீஸுக்கு ஓடிவந்தார்கள். "பணம் கிடைத்துவிட்டது. நீங்கள் போனஸ் பணம் வாங்கிக் கொள்ளலாம். இங்கே வேலை செய்யும் நந்தனுடைய மகன் கோபாலன்தான் பணத்தைக் கண்டுபிடித்தான். நல்ல பையன். உங்கள் எதிரிலேயே பரிசு ரூ. 500/- அவனுக்குக் கொடுக்கிறேன்" என்று கூறி ரூ. 500-ஐயும் அவன் கையில் கொடுத்தார் துரை. இதைக் கண்ட நந்தனுக்கும் கமலத்துக்கும் ஆச்சரியமாக இருந்தது. எப்படிக் கண்டுபிடித்தான் என்று இருந்தது.

அன்றிரவு கமலம் கோபாலனைத் தனியாகக் கூப்பிட்டு, "என் கண்ணே! எப்படியடா கண்டுபிடித்தாய்?" என்று கேட்டாள்.

"நான் வழக்கம்போல் மரத்தின்மேல் உட்கார்ந்து வாசித்துக்கொண்டிருந்தேன். திடீரென்று யாரோ மரத்தடியில் ஓடிவரும் சத்தம் கேட்டது. யார் என்று கவனித்தேன். மங்கின இருளில் முகம் சரியாகத் தெரியவில்லை. அந்த உருவம் எதையோ ஒரு மூட்டையைக் கொண்டுவந்து நான் உட்கார்ந்திருந்த மரத்திற்குச் சற்றுத் தூரத்திலே ஒரு தேயிலைச் செடியின் அடியில் புதைத்தது. உடனே சுற்று முற்றும் பார்த்துக்கொண்டே ஓடிவிட்டது. அது யார் என்று தெரிந்துகொள்வதற்காக நானும் மறைந்து மறைந்து பின்னாலேயே போனேன். கடைசியில் அந்த உருவம் தன் வீட்டுக்குள் நுழைந்தது. பின்புதான் யார் என்று நன்றாகத் தெரிந்து கொண்டேன்.

"அன்றிரவு எனக்குத் தூக்கமே வரவில்லை. மறு நாள் காலை ரூ5000/—திருட்டுப் போய்விட்டது என்ற செய்தி தெரிந்தது. எனக்குச் சந்தேகம் தோன்றவே அந்த இடத்திற்குப் போய், தோண்டிப் பார்த்தேன். அடியிலே துரையின் தோல் பை இருந்தது. உடனே அதை எடுத்துக் கொண்டுபோய்த் துரையின் மேஜைமேல் வைத்துவிட்டு,

யார் கண்ணிலும் படாமல் திரும்பும்போது, துரையின் நாய் என்னைப் பார்த்துக் குரைத்தது, சத்தம் கேட்டு அங்கே வந்த துரை கையைப் பிடித்துக்கொண்டு விட்டார். மேஜையின்மேல் இருந்த அவர்பையையும் பார்த்து விட்டார்.

"நான் விஷயத்தைச் சொல்வதற்கு முன்" எனக்கு மூன்று வரம் தாருங்கள். பிறகு என்ன வேண்டுமானாலும் சொல்லுகிறேன்" என்றேன். 'சரி என்றார் அவர். உடனே சொன்னேன், "ஒன்று. எனக்கு ரூ 500 வேண்டாம். இரண்டு; திருடிய ஆள் யாரென்று உங்களைத் தவிர வேறு யாருக்கும் தெரியக் கூடாது. மூன்று; திருடிய ஆளை வேலையிலிருந்தும் நீக்கக் கூடாது." அவர் அதைச் செய்வதாகக் கூறிச் சத்தியம் செய்தார். நீ கண்டுபிடித்ததற்காகவும், உன் தங்கமான குணத்திற்காகவும் பணத்தைப் பெற்றுக்கொள்ளத்தான் வேண்டும் என்று பிடிவாதம் செய்தார் துரை, மிகவும் வருத்தத்தோடு பணத்தைப் பெற்றுக் கொண்டேன்" என்று கூறி முடித்தான் கோபாலன்.

"எல்லாம் சரிதான்! விளக்கின் வெளிச்சத்திலே அந்த ஆளைப் பார்த்தேன் என்று சொன்னாயே, கடைசியில் யார்? என்றே சொல்லவில்லையே" என்று கேட்டாள் கமலம்.

இந்தக் கேள்வியைக் கேட்டதும் கோபாலனின் முகம் பரிதாபமாக மாறியது. தாய் வற்புறுத்தவே, காதோடு காதாக யார் என்பதைக் கூறினான். அவள் உடனே திடுக்கிட்டாள். தன் கழுத்தில் இருந்த மாங்கல்யத்தை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். "என் கண்ணே! நீ தாண்டா உத்தமமான மகன்" என்று அவனை அப்படியே கட்டிக்கொண்டு கண்ணீர் விட்டாள்.

# 12. மரம் ஒலிக்கும் குரல்

சமீபத்தில் மேற்குத் தொடர்ச்சிமலைப் பிராந்தியத்தில் சுற்றுப்பயணம் மேற்கொண்டிருந்தபோது ஒரு சுவையான கதையைக் கேட்கும் வாய்ப்புக் கிடைத்தது. அது உண்மையாகவே நடந்த ஒரு வரலாறு என்பது அங்கு வாழுவோரின் அசைக்க முடியாத நம்பிக்கை. அந்தக் கதையின் விவரம்:

''காயீன், ஆபேல் இருவரும் சகோதரர்கள். இருவரும் ஆண்டவனுக்குப் பலி கொடுத்தார்கள். ஆனால், களங்கமில்லாத மனத்துடன் கொடுத்த ஆபேலின் பலியை ஆண்டவன் ஏற்றுக்கொண்டார். அதனால் பொறாமை அடைந்த காயீன் தன் சகோதரனைக் கொலை செய்தான்'' என்று சுமார் ஐந்தாயிரமாண்டுகளுக்கு முன் நடந்த செய்தியை விவிலிய சரித்திரம் கூறுகிறது.

மேற்குத் தொடர்ச்சி மலைப்பிராந்தியத்தின் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இன்றைக்கும் இரவில் ''அண்ணா! அண்ணா!'' என்ற குரல் ஒலிக்கிறது. அந்த அண்ணா என்ற குரல் ஒரு மரத்திலிருந்து வருகிறது என்பதைக் கேட்க இன்னமும் வியப்பாக இருக்கும். அதன் விவரம் வருமாறு:

“மேற்கு மலைப்பகுதியின் சில இடங்களில் “வவுவேடர்” என்ற வேட்டைக்காரர்கள் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். இந்த வவுவேடர் சந்ததியில் முற்காலத்தில் பொன்னன், கண்ணன் என்ற இரண்டு சகோதரர்கள் இருந்தார்கள். சொத்து விஷயமாக நீண்ட காலமாக அவர்களுக்குள் விரோதம் இருந்து வந்தது. ஆனால், அதை வெளியில் காட்டிக்கொள்ளாமலே இருவரும் பழகி வந்தார்கள். ஒருநாள் காட்டில் தேன் சேகரிக்க அண்ணன் பொன்னன், தம்பி கண்ணனை அழைத்தான். வவுவேடர்கள் தேன் எடுக்கப் போகும்போது, கையில் வளைந்த கத்தியை எடுத்துச் செல்வர். காலில் “ஆணி மிதி” என்று சொல்லப்படும் ஒருவகை மிதியடியும் அணிந்துகொண்டு, மரத்தின்மீது தொத்தித் தொத்தி ஏறுவார்கள். இப்படித் தேன் எடுக்கச் செல்லுகையில் இவர்கள் தோளில் எப்பொழுதும் ஏணி ஒன்றையும் தூக்கிச் செல்வதுண்டு. ஏனெனில் சில இடங்களில் அடி மரத்தில் ஏறுவதற்கு வசதி இருக்காது. மற்றொன்று, தேன் கட்டியிருக்கும் சில மரங்கள் பெரிய பள்ளத்தாக்கில் இருந்தால், தரைமட்டத்திலிருந்து ஏணியைத் தேன் கட்டி இருக்கும் மரத்தின்மேல் சாய்த்துப் பாதி மரத்திற்கு மேல்தான் ஏற ஆரம்பிப்பார்கள். ஆனால், அன்று பொன்னனும் கண்ணனும் தேன்எடுக்கச் சென்ற மரமோ ஒரு பெரிய பாதாளத்தில் வளர்ந்து இருந்தது. ஆகையால், மேல் தரைமட்டத்திலிருந்து பொன்னன் கொண்டுபோன ஏணியைச் சாய்த்து, அதில் கண்ணனை ஏறித் தேன் எடுக்கச் சொன்னான்.

கண்ணனும் மரத்தில் சாய்த்த ஏணியின்மேல் ஏறிச் சென்று, பிறகு மரத்தைப் பிடித்துக்கொண்டு மரத்தின் உச்சியை அடைந்தான். மரத்தின் உச்சியிலிருந்து தேனை எடுத்துப் பாத்திரத்தின் மூலம் கீழே அனுப்பினான். எல்லாவற்றையும் கண்ணன் அனுப்பிய பின், பொன்னன் மரத்தில் சாய்த்து வைத்திருந்த ஏணியை உடைத்துத்

துகள்களாக்கிவிட்டுத் திரும்பிக்கூடப் பார்க்காமல் போய் விட்டான்.

கீழே பொன்னன் செய்த இந்தச் செயலைக் கண்ட கண்ணன், "என்ன அண்ணு! ஏணியை உடைத்து விட்டாய்? நான் இறங்க முடியாதே! என்று மரத்தின் மேலிருந்து கத்தினன். ஆனல், பொன்னன் அவனைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் போய்விட்டான். கண்ணன் திகில் அடைந்தான். என்ன செய்யமுடியும்? பெரிய காடு. அந்த இடத்திற்குச் சாதாரணமாய் மருந்துக்குக் கூட யாரும் வரமாட்டார்கள். பாதி மரத்திலிருந்து குதித் தாலும் சாக வேண்டியதுதான். மரத்தின் மேலிருந்தாலும் ஆகாரமில்லாமல் சாக வேண்டியதுதான். ஆனல் மரத்தின் மேலிருந்தாலும் ஒருவேளை அண்ணனே மன மிரங்கித் திரும்பி வந்து காப்பாற்றினலும் காப்பாற்று வான் என்று நினைத்திருப்பான். ஆகையால், கண்ணன் மறுபடியும் மரத்தின் உச்சிக்குச் சென்று, பக்கத்துக் கிளை களை வெட்டிப் பரண் ஒன்றை மரத்தின் உச்சியிலேயே அமைத்துக்கொண்டு அமர்ந்துகொண்டான்.

ஏணி இல்லாவிட்டால் மரத்தில், ஏறவோ, இறங்கவோ முடியாது; ஏனெனில் மரத்தைச் சுற்றிலும் ஒரே முட்புதர்கள் அடர்ந்திருந்தன. ஒன்றுக்கும் வழியில்லாத கண்ணன் ஒரு நாள், இரண்டு நாள் என்று பரண் மேலேயே காலத்தைக் கழித்துவிட்டு கடைசியில் இறந்தான்.

அன்று முதல் இன்று வரையில் அந்த மரத்தின் உச்சியி லிருந்து "அண்ணு! அண்ணு!" என்று குரல் ஒலிப்பதாக அங்கு மாடு மேய்க்கும் சிறுவர்கள் இன்றும் கூறுகின்றனர். நண்பர் ஸ்ரீ பிரகாசம் கூறிய தகவல்களிலிருந்து)

# 13. அந்தக் காலத்தில்...

பல ஆண்டுகளுக்கு முன் ஆங்கிலேயர் ஆட்சியில் பெரிய குற்றம் செய்தவர்களையும், அரசாங்கக் குற்றவாளிகளையும் கொலை செய்யாமல் அந்தமான் தீவுக்கு அனுப்பி வந்தார்கள் என்பது நமக்குத் தெரியும்.

கோபத்தால் அடிக்கப்பட்டோ அல்லது விளையாட்டுப் போட்டியிலோ, குத்துச் சண்டையிலோ எதிராளி கொலையுண்டால், கொலைக்குக் காரணமாய் இருந்தவனுக்கு தூக்குத்தண்டனை இல்லை. ஆனால் சதித்திட்டங்கள் செய்து ஒருவனைக் கொலை செய்தால் கொலை செய்தவனை நீதி மன்றத்தில் விசாரித்து அவனுக்குத் தூக்குத் தண்டனை கொடுப்பார்கள். ஏனென்றால் சதிசெய்து கொலை செய்தால் தீர்ப்பு 'கொலைக்குக் கொலை' என்பதாகும்.

ஆனால் இப்பழக்கங்கள், இந்தச் சட்டங்கள் உலகில் எப்பொழுது உண்டாயின என்று ஆராய்ச்சி செய்யும் பொழுது, இன்று நேற்று மனிதன் நகாகரிகம் அடைந்த பின் உண்டானதில்லை. பல்லாண்டுகளுக்கு முன்பே உண்டானதாகும் என்று தெரியவரும்.

இன்று காட்டில் வாழும் ஆதிவாசிகளிடம் பல்லாண்டு காலமாகவே இந்தப் பழக்கம் நடைமுறையில் இருந்து

வருகின்றது என்பதைக் காணும்பொழுது நமக்கு வியப்பு ஏற்படாமலில்லை. இந்தியாவில் பல பகுதிகளில் வாழும் ஆதிவாசிகளிடம் நெருங்கிப்பழகிய நான், ஆங்காங்கே, அந்தந்தப் பகுதிகளில் வாழும் ஆதிவாசிகள் குற்றம் செய்தவனைப் பஞ்சாயத்தின் மூலம் விசாரித்து அவனுக்குத் தக்க தண்டனை கொடுப்பதை அறிந்துள்ளேன். பெரிய குற்றமாக இருந்தால் அவனைத் தங்கள் ஊரிலிருந்து மற்றொரு ஊருக்கு அனுப்பிவிடுகின்றனர். ஆனால் இந்தப் பழக்கம் எப்பொழுது உண்டானது தெரியுமா?

உலகம் உண்டானது பல கோடி ஆண்டுகளுக்கு முன் என்றாலும், சுமார் 4000 ஆண்டுகளுக்கு முன் (கி. மு. 2000) ஒருவனை ஒருவன் கைப் பிசகாகவாவது அல்லது பகையின் நிமித்தமாவது கொலை செய்தால் கொலைக்குக் கொலை—என்ற முறையில் கொலைப் பாதகனைக் கொலையுண்டவனுடைய உறவினர்கள் கொலை செய்து வந்தார்கள்.

இஸ்ரவேலர் கானான்தேசத்தை ஜெயித்தபின் அவ்வூரில் புதிய சட்டம் ஒன்று உண்டானது. ஒருவன் ஒருவனைக் கைபிசகாகக் கொன்றுவிட்டால், அவன் தன் ஊர் எல்லையை விட்டு ஓடிப்போய், மற்றொரு ஊரில் அடைக்கலம் புகுந்து வாழ்வதற்காகப் பண்டைக் காலத்தில் ஆறு பட்டணங்களை உண்டாக்கி வைத்திருந்தனர். அப்பட்டணங்கள், 'யோர்தான் நதி'க்குக் கிழக்கே மூன்றும் மேற்கே மூன்றுமாக உண்டாக்கப்பட்டு அதற்கு, "அடைக்கலப் பட்டணம்" என்று பெயர் வைத்தனர்.

இந்தப் பட்டணங்கள் குற்றம் செய்தவன் ஊரிலிருந்து சுமார் முப்பது மைல்கள் தூரத்திலிருக்கும்படி அமைக்கப் பட்டிருக்கும். மேலும் 4000 ஆண்டுகளுக்கு முன்னமே அந்த முப்பது மைல் தூரமிருக்கும் ஊர்களுக்குக் குற்றவாளி

யாதொரு தடையுமின்றி, ஆபத்துமின்றி ஓடிப்போகக் கூடியதாக அந்த வழிகளெல்லாம் பழுது பார்த்து வைக்கப் பட்டிருந்தனவாம்.

கொலையுண்டவனுடைய உறவினர்கள், ஊரைவிட்டு ஓடிப்போனவன் மீது, அடைக்கலம் புகுந்த ஊரில் சென்று, குற்றம் கூறினால் குற்றவாளி அடைக்கலம் புகுந்த ஊரிலிருக் கும் மூப்பன், அவன் செய்த குற்றத்தைப் பற்றி விசாரணை செய்து "கொலையாளி, பகையின் நிமித்தம் சதி செய்து கொன்றான்" என்று அறிந்தால் பழி வாங்குகிறவன், குற்ற வாளியைக் கொல்லும்படி தீர்ப்புக் கூறுவான்.

கொலை செய்தவன் கோபத்தால் கைபிசகாய்க் கொன்றான் என்று மூப்பன் கண்டால், கொலையாளிக்கு யாதொரு ஆபத் தும் வராதபடி அவனை, அக்காலத்தில் ஏற்படுத்தப்பட்ட அடைக்கலப்பட்டணத்தில் பாதுகாப்புடன் வைத்துப் பார்த்துக்கொள்ளச் செய்வான். ஆனால் எப்பொழுது கொலையாளிக்கு விடுதலை தெரியுமா?

கொலை செய்தவனுக்கு "அடைக்கலப்பட்டிணத்திற்கு ஓடிப் போ!" என்று தீர்ப்புக் கூறிய முதல் மூப்பன் மரணம் அடையும்போதுதான்!

பண்டைக்காலத்தில் ஆதிவாசிகளிடையே கொலை செய்தவனுக்குத் தண்டனை எத்தனை ஆண்டுகள் நீடிக்கு மென்று சொல்ல முடியாது. ஆனால் இன்று அடர்ந்த காடு களில் வாழும் ஆதிவாசிகள் தம்மில் யாராவது குற்றம் செய் தால் குற்றவாளியை அக்காட்டில் வாழும் தலைவன் அல்லது மூப்பன் விசாரிப்பான்.

குற்றவாளியிடம் அந்த ஊர் மக்கள் ஒரு வாரம் அல்லது இரண்டு வாரங்கள் பேசமாட்டார்கள். அவனுடைய

குடும்பத்தாருக்கு ஒரு பொருளும் கொடுக்கமாட்டார்கள். குற்றவாளி எங்கு சென்றாலும் தனியாகத்தான் போக வேண்டும். தீக்குச்சி இல்லை என்றால் இரவில் இருளில் தான் உட்கார்ந்திருக்க வேண்டும். மறுநாள் காலையில் சுமார் 4 அல்லது 5 மைல்கள் நடந்து மலையடிவாரத்திற்குச் சென்றுதான் வாங்கிக்கொண்டு போகவேண்டும்.

குற்றவாளிக்கு மூப்பன் கொடுக்கும் தண்டனை என்ன? அவர்கள் வாழும் (ஊரில்) பாடியின் நன்மைக்கும், உபயோகத்திற்கும் உகந்ததாக பாடியில் ரோடு வெட்டுதல், பொதுக் கிணறு தோண்டுதல் முதலிய பொது வேலைகளைக் கொடுத்து இலவசமாகச் செய்யும்படி கட்டளையிடுவான். குற்றவாளி அந்த வேலைகளைச் செய்ய சம்மதித்தால் பாடியில் உள்ள மக்கள் குற்றவாளியிடம் எப்பொழுதும் போலவே பழகுவார்கள்.

# 14. கடைசி மன்னிப்பு

நேற்று நடந்ததுபோல் இருக்கிறது. ஆனால் ஒன்பது வருஷங்கள் ஆகிவிட்டன. என்னுடைய அறையின் வாசலில் நின்றுகொண்டிருந்தேன். மற்றவர்கள் எல்லோரும், ஏதோ வேலையாக இருந்தார்கள். வெளியிலே ஒரே வெயில். தெரு, நடமாட்டமே இல்லாமல் வெறிச்சோடி இருந்தது.

திடீரென்று, ஆடிக்காற்று மேலைத்தெரு மதில் மூலையைச் சுற்றிப் பாய்ந்து வந்து தெருவோடு தாண்டவ மாடிச் சென்றது. அவ்வளவுதான். புழுதிப்படலம் புறப் பட்டு வெளியை நிறைத்து, வெயிலை மறைத்துச் சுழன்றது. அறைக்குள் பின்வாங்கத் தொடங்கிய நான், தெருக்கோடி யில் காற்றோடும் புழுதியோடும் போராடிக்கொண்டு யாரோ ஒருவர் வருவதைப் பார்த்துச் சிறிது நின்றேன்.

மெல்லிய உருவம், ஒடிந்து விழுந்து விடும்போல் இருந்தது. ஆனால் ஒரு கையால் கண்ணைக் கசக்கிக் கொண்டு, ஒரு கையால் பறந்தோட முயலும் வேட்டியைப் பற்றிக்கொண்டு தள்ளாடி வந்த அந்த நிலையிலும் வந்தவ ருடைய வேகமும் ஆத்திரமும் வெளிப்பட்டன. இதற்குள் என் கண்ணிலேயும் புழுதி புகுந்தது. ''அட சனியனே!'' என்று முன்னேயே பின்வாங்காத என் அசட்டுத்தனத்தை நொந்துகொண்டு, கண்ணைப் பிசைந்த வண்ணம் உள்ளே

திரும்பினேன். அதற்குள் அவரும் என் அருகில் வந்து விட்டார்.

“தங்களைத் தெரியவில்லையே?” என்றேன்.

“எப்படித் தெரியும்! இந்தப் புழுதியிலேதான் கண்ணைத் திறக்க முடியவில்லையே. நான் சுமார் ஐந்து, ஆறு நாட்களாய் உம்மைத் தேடி அலைந்து கண்டுபிடித்தேன். தியாகா! போனதெல்லாம் போகட்டும். நான் மூட நம்பிக்கையாலும், என்னுடைய உறவினர்கள் சொல்லைக் கேட்டதாலும், ஜாதி, மதம் என்ற வித்தியாசத்தாலும் பலவிதத்திலும் துன்பமடைந்தேன். எனக்காக நீங்கள் அவளை மன்னித்துத் தயவுசெய்து வந்து பார்த்தால் நலமாக இருக்கும். “மாலதி மிகவும் வியாதியாக இருக்கிறாள்” என்று பத்து நாட்களுக்கு முன் உமக்குத் தந்தி கொடுத்தேன். ஆனால் அதற்குப் பதில் இல்லாததால் நானே உம்மைக் கையோடு அழைத்துச் செல்லலாமென்று நாடி வந்தேன்” என்றார் வந்தவர்.

இவர்கள் இவ்விதம் பேசிக்கொண்டிருக்கும்போதே, தியாகனின் உயிர் நண்பனான செல்வராஜ், அப்பொழுது தான் இராணுவ உடையுடன் தியாகன் அறைக்குள் நுழைந்தான். யாரோ வந்திருக்கிறார்கள் என்று நினைத்துச் சற்றுப் பின்வாங்கியதைக் கண்ட மாலதியினுடைய தகப்பனாராகிய ஆனந்தராஜ், “வாப்பா! வா!” என்று அன்பு ததும்பக் கூப்பிட்டார்.

உடனே தியாகன், செல்வராஜுக்கு அந்தப் பெரியவரை அறிமுகப்படுத்தி “இவர்தான் மாலதியின் தகப்பனார். மாலதி வியாதியாக இருக்கிறாளாம். அடிக்கடி என் பெயரைச் சொல்லி அழைத்துக் கொண்டிருக்கிறாளாம். என்னைக் கூப்பிடுவதற்காக இவ்வளவு தூரம், மிகுந்த கஷ்டத்துடன் வந்திருக்கிறார்” என்று சொன்னபோதே

பெரியவராகிய ஆனந்தராஜுக்குக் கண்களில் கண்ணீர் பெருகியது.

பாவம்! என்ன செய்வார்: "தலைவலியும் காய்ச்சலும் தனக்கு வந்தால்தானே தெரியும்" மனிதர்கள் தப்பிதம் செய்வார்கள். ஆனால் அவர்கள் அதைக் குற்றமென்று, தம்முடைய பிழையை ஒப்புக்கொள்ளும்போது யாராயிருந் தாலும், காந்தி அடிகளைப்போல மன்னிக்க வேண்டியது அவசியம்.

"நான்கூடச் சொன்னேன், தியாகனுக்கு. எவ்வளவு சொல்லியும் ஒரே பிடிவாதமாக இருக்கிறான். உலகில் பிழை செய்யாதவர்கள் யார்? எல்லோரும் தப்பிதம் செய் கிறவர்கள்தான். தியாகா! நீ கட்டாயம் லீவு எடுத்துக் கொண்டு போகவேண்டும். இவரையே ஒரு நல்ல சாக்காகக்கொண்டு, ஆபீசரிடம் காண்பித்து லீவு எடு. இல்லாவிட்டால் இராணுவ வேலையில் லீவு கொடுப்ப தென்றால் 'குதிரைக் கொம்புதான்' உம்! எதையும் யோசிக்காதே. புறப்படு!" என்று சொன்னான் செல்வராஜ்.

"சரி; அதைப்பற்றிப் பிறகுதான் யோசிக்க வேண்டும்" என்றான் தியாகன்.

மறுநாள் தியாகன், செல்வராஜிடம் தனக்குப் போக விருப்பமில்லை என்றும், மாலதி செய்த துரோகத்தால் தனக்கு அவளைப் பார்க்கக்கூட விருப்பமில்லை என்றும் சொல்லிவிட்டான். பெரியவரும், செல்வராஜும் நெருங்கிய நண்பர்களாகப் பழகியதைக் கண்ட தியாகன், முதலில் செல்வத்தையே அனுப்பலாமென்று யோசித்து, அதைத் தன் நண்பனுக்கும் தெரியப்படுத்தினான். அதைக்கேட்ட பெரியவரும், தன் நண்பன் மாலதியைக் கண்டு, அந் நிலைமையை எடுத்துரைத்தால், பிறகு கஷ்டமின்றித்

தியாகன் மாலதியைப் பார்க்க வருவான் என்று யோசித்துத் தன்னுடன் செல்வராஜை அழைத்துக்கொண்டு போனர்.

செல்வராஜ் பெரியவருடன் சென்றபின், தியாகனுக்குச் சொல்ல முடியாத வேதனையாகவும், விசனமாகவும் இருந்தது. இவ்வாறு இரண்டு மூன்று நாட்கள் சென்றன.

ஒருநாள் அதிகாலையில் தன் படுக்கையில் யாரோ உட்கார்ந்திருப்பதாகக் கண்டு திரும்பிப் பார்த்தான். தன் கண்ணையே நம்பவில்லை. ஏன்? ஒரு வாரம் லீவில் மாலதியைப் பார்க்கச் சென்ற செல்வராஜ், நான்காம் நாள் காலையில் முதல் ரயிலில் வந்துவிட்டான். கண்ணைத் திறந்த தியாகன் "மாலதி எப்படி இருக்கிருள்?" என்ருன்.

செல்வராஜ் மௌனமாக இருந்தான். என்ன சொல்வதென்று தோன்ருமல், "நீ போனல் நன்ருக இருக்கும். இதுதான் என் முடிவு. ஏனென்ருல், "மலர்ந்த முகமே வாழ்க்கையின் இன்பம்; மனக்கவலையே பலக் குறைவு" என்பதைப்போல மனக்கவலைக்கு மருந்துண்டா? மெலிந்து பித்தம் பிடித்தவளைப்போல் தியாகா! தியாகா!! என்று சொல்லிக்கொண்டிருக்கிருள். உன்னைக் காணவேண்டுமென்ற நோக்கத்தில்தான் அவள் உயிர் உடலில் இருக்கிறது, அதற்காகத்தான் அவளும் ஏதோ உயிரை வைத்திருப்பதாகத் தெரிகிறது" என்று சொல்லி, மிகவும் உருக்கத்தோடு தன் நண்பனைப் போய்ப் பார்க்கும்படி வேண்டிக்கொண்டான். தன் நண்பன் தனக்காகப் பாடுபட்டதாலும், தன் நண்பன் வெகு நாட்களாய்ப் பூர்வீக விஷயத்தை அறிய ஆவலாக இருப்பதாலும், நமக்கும் அவனுடைய பூர்வீக விஷயங்களை அறிய ஆவலாக இருப்பதாலும், தியாகனுடைய பூர்வீக வரலாற்றை இங்கே கவனிப்போம்—:

மைசூருக்கு அருகிலிருக்கும் கிருஷ்ணராஜ் பேட்டை என்பது தியாகனுடைய ஊர். தியாகனும், மாலதியும் ஒரே பள்ளியில் வாசித்தவர்கள். சிறுவயது முதற் கொண்டு தியாகனும், மாலதியும் எங்கே சென்றாலும் ஒன்றாகவே செல்வார்கள். ஆனால் சிறுவர்களுக்கு எவ்விதம் சண்டை வருமோ அப்படியே அவர்களுக்கும் வருவது உண்டு. மாலதியின் தந்தை ஆனந்தராஜ் என்பவர், மாலை நேரங்களில், தியாகனுடைய தகப்பனாருடன் உலாவுவதற்கு வர இருவரும் சுமார் அரைமைல் தூரம் செல்வார்கள். அப்பொழுது தியாகனும் மாலதியும் கூடவே செல்வது வழக்கம். பெரியவர்கள் அரசாங்க விஷயங்களில் வாதாடிக் கொண்டே சென்றால், இவர்கள் இருவரும் வீண் வம்பு ஏதாவது பேசிக்கொண்டே அவர்கள் பின்னால் போவது வழக்கம்.

தியாகனும் மாலதியும் பள்ளிக்கூடத்திலும் ஒரே வகுப்பில்தான் படித்து வந்தனர். அவர்களிடையில் ஒருவருக்கொருவர் இளமை அன்பு வளர்ந்தது. பள்ளிப் படிப்பும் முடிந்தது. பிறகு கல்லூரி படிப்புக்காக அவர்கள் இருவரும் மைசூருக்கு வந்தனர். ஆனால் தியாகனுக்கும் மாலதிக்கும் குழந்தை அன்பு பறந்து, காதல் அன்பு புகுந்தது. நாட்கள் நடந்தன. மாதங்கள் மறைந்தன. வருஷங்கள் சென்றன. அவர்களுடைய காதல் விஷயங்கள் அவர்களுடைய பெற்றோர்கள் காதிலும் ஊசலாடியது.

ஆனந்தராஜ் ஆபீஸ் மூலம் மாறுதல் வந்தது போலத் தாமே தக்க ஏற்பாடுகளுடன் தம்மைப் பெங்களூருக்கு மாற்றிக்கொண்டார். உடனே மாலதியும் அந்தக் கல்லூரியி லிருந்து பெங்களூரிலிருக்கும் மற்றொரு கல்லூரிக்கு வர வேண்டியதாயிற்று. காதலன் காதலியைப் பிரிந்தால் எப்படித் துயரடைவார்கள் என்று ஏட்டில் வர்ணிக்க முடியாது. வாசகர்களையே அதைச் சிந்திக்க விட்டு விடுகிறேன்.

தியாகனுக்கும், மாலதிக்கும் ஏன் விவாகம் நடப்பதைத் தடை செய்தார்கள் என்றால் இருவரும் வேறு வேறு ஜாதியைச் சேர்ந்தவர்கள். சொத்து விஷயத்திலும் தியாகன் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவன். இக்காரணங்களைக் கொண்டே தடை ஏற்பட்டது.

தன் தகப்பனார் தன் சந்தோஷத்தைக் கெடுத்து, இவ்விதமான சூழ்ச்சியில் மாற்றிக் கொண்டார் என்பது மாலதிக்குத் தெரிந்ததும், அவள் வீட்டில் எல்லோர் மேலும் கடுகடு வென்று இருக்க ஆரம்பித்தாள். இந்த விஷயத்தைத் தியாகனுக்கும் எழுதிவிட்டாள்.

இவ்விதமாகச் சில மாதங்கள் சென்றன. மாலதிக்கும் ஒரு பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயினி வேலை கிடைத்தது. தியாகனும் படிப்பை எல்லாம் முடித்துவிட்டு, மைசூரிலே ஏதோ ஒரு வேலையில் அமர்ந்துகொண்டான். மாலதியின் தாயாருக்கு மாத்திரம் தன் மகளைத் தியாகனுக்குத்தான் மணம் செய்து கொடுக்க விருப்பம். ஆனால் மாலதியின் தகப்பனாருக்கோ அவளைத் தியாகனுக்குக் கொடுக்க விருப்பமில்லை. ஏன்? ஏழை! தியாகன் கெட்ட குணமுடையவன் என்னும் நோக்கமுமில்லை, படிக்காதவன் என்னும் நோக்கமுமில்லை; தன் மகளை ஓர் ஏழைக்குக் கலியாணம் செய்து கொடுத்தால் கஷ்டங்களையும், குடும்பத் தொல்லைகளையும் அனுபவிக்க வேண்டுமே என்று அவர் நினைத்து, மாலதியை அரண்மனை வேலையிலிருக்கும் ஒருவருக்குத் திருமணம் செய்து கொடுப்பதாக முடிவுக்கும் வந்து விட்டார்.

பாவம்! மாலதி என்ன செய்யக்கூடும். இரவும் பகலுமாக யோசித்தாள். அவளுடைய புத்திக்கு ஒன்றும் எட்டவில்லை. ஐயோ யாரிடம் வேதனையைச் சொல்லக் கூடும். கடைசியாக, ஒரு யோசனை வந்தது; உடனே தியாகனுக்குக் கடிதம் எழுதி வரச் சொன்னாள்!

சாதாரணமாகப் பிடிவாதத்திற்கும் ஓர் எல்லே உண்டு. அதிகப் பிடிவாதமான குணமும் ஆபத்தாய் முடியும். தியாகனும் மாலதியைத் தனியாகச் சந்தித்து விஷயங்களை அறிந்துகொண்டான். "மாலதி! உண்மைக் காதல் உனக்கு இருந்தால் என்னுடன் வா! தெய்வீகக் காதல் என்று சொல்லுகிறார்களே, அவர்கள் எல்லாம் ஏன் சொன்னார்கள். ஒரு பணக்காரன் எல்லாவிதச் சந்தோஷத்தையும் அடைவான். ஆனால் ஏழை அடையும் சந்தோஷம் தன் மனைவி ஒன்றுதான். பணமோ பத்தும் பேசும். ஆனால் தெளிந்த அறிவுள்ளவன் முன்னால் அதற்குப் பேசும் திறன் கிடையாது" உண்மைக்கும் கற்பனைக்கும் இடையிலுள்ள எல்லைக் கோடுதான் விவாகம் என்பது. அந்த விவாகத்தையும் காலத்தில் அநுபவிக்காமல் முதிர்ந்த வயதான பிறகா அநுபவிப்பது? எத்தால் வாழலாம். மனம், ஒத்தால் வாழலாம் என்பதைப்போல், அன்பு இல்லாளுக்குப் பணம் வேண்டியிராது என்று, சாரணத் தலைவராகிய "பேடன் பௌல" சொல்லுகிறார். ஏதோ நானும் வேலை செய்கிறேன். அப்படி உனக்குப் பிரியமிருந்தால் "என்னுடன் வா! நாம் மனமொத்த தம்பதிகளாக வாழ நம்மால் முடியாதோ?" என்று கூறினான் தியாகன்.

இரவெல்லாம் ராமாயணம் கேட்டதைப்போல.... "தியாகா! இப்படி என்னைக் கூப்பிட்டால், என் பெற்றோர்கள் சம்மதிக்காமல் நான் எப்படி வருவது? உங்கள் மேல் எனக்குப் பூரணக் காதல் இருந்தாலும் அவர்களையும் சமாதானப்படுத்திக் கொள்ள ஒரு வழி இல்லையா? எனக்கு அவ்வளவு தைரியமும் இல்லை வர. ஆனால் நான் உண்மையாக உங்களை நேசிக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியாதா?" என்று சொன்னாள்"—மாலதி.

"மாலதி! எதற்காக என்னை இங்கு அழைத்தாய்?" என்று சற்று வெறுப்புடன் கேட்டான் தியாகன். 'உங்களைப்

பார்க்கத்தான்' என்ருள் அவள். "என்னைப் பார்க்க என்று சொல்ல உனக்கு வெட்கமில்லையா? இன்னும் சில நாளில் அரண்மனை உத்யோகஸ்தனுக்கு மனைவியாகப் போகிற நீ ஏழைத் தியாகனை எதற்காகப் பார்க்கவேண்டும்? இவ் விடத்தை விட்டுப்போ. என் முகத்தில் விழிக்காதே'' என்று கோபத்திஞல் கூச்சலிட்டான்.

"ஏன் இப்படிக் கோபித்துக் கொள்ளுகிறீர்கள்? நான் ஏதாவது தப்புச் செய்தேனு?'' என்று கெஞ்சினுள் மாலதி. அவள் கண்களிலிருந்து கண்ணீர் பொல, பொலவென்று உதிர்ந்தது.

"நீலி! என்மேல் அன்புடையவள்போல் நடந்து, என்னையும் வரச்சொல்லிவிட்டு, இப்பொழுது அரண்மனை உத்தியோகஸ்தனை மணக்கப் போகிருய். ஆமாம், நான் ஏழை. நான் உனக்கு நகை செய்துபோட முடியுமா? அவன் செல்வத்தில் புரளுகிறவன் "அரண்மனை உத்தியோகம்'' என்ற பட்டம். நானே ஒரு ஏழை. கம்பெனிக் கிளார்க்கு. அவன் நினைத்த மாத்திரத்தில் உன்னைப்போல தங்கத்தால் கூடச் சிலை செய்துவைக்க அவனுல் முடியும்'' என்று படபடவென்று பேசினுன். ஆத்திரம், கோபம், ஏமாற்றம் முதலிய பல உணர்ச்சி கள் அவன் இருதயத்தைச் சேர்ந்தாற்போலத் தாக்கவே அவனுல் மேலே பேச முடியவில்லை. வார்த்தைகள் தடுமாறின. அவள் குழந்தையிலிருந்து பழகியும், கடைசி யில் விசுவாசமில்லை என்றும், ஒரு உறுதியான முடிவும், வார்த்தையும் இல்லை என்றும் பலவிதமான எண்ணங்கள் அவன் மனத்தில் தோன்றி மறைந்தன.

"அரண்மனை உத்தியோகம் என்று எனக்கு ஆசை இல்லை. அரண்மனையில் நான் யாரையும் காதலிக்கவில்லை. அப்பாதான்——?'' என்று மாலதி கூறி முடிப்பதற்குள்.

“அப்பாவுமாச்சு, ஆட்டுக் குட்டியுமாச்சு! இங்கே நில்லாதே போ!” என்று தியாகன் எரிந்து விழுந்தான். அவனுடைய சொற்கள் கூரிய பாணங்களைப்போல் தாக்கி மனத்தில் வேதனையைக் கொடுத்ததில் மாலதிக்கு துக்கமெல்லாம்போய், கோபமே வந்தது.

‘இந்தத் தோட்டம் உங்கள் பாட்டன் வீட்டைச் சேர்ந்ததில்லை. நான் இங்கேதான் நின்றுகொண்டிருப்பேன். என் இஷ்டம்’ என்று சீறினாள். ஆனால் அவனைப் பிரிய மனமில்லை.

“மகாதேவியே! தங்கள் இஷ்டப்படியே இவ்விடத்தில் வீற்றிருங்கள்” என்று சொல்லிவிட்டு, “உன் முகத்தில் விழிப்பதுகூடப் பாவம். நானே போய்விடுகிறேன் இவ்விடத்தை விட்டு” என்று தியாகன் கண் கலக்கத்துடனும், மன வேதனையுடனும், சற்றுக் கோபத்துடனும் அவசரமாய் அவ்விடத்தை விட்டகன்றான். அவன் போவதையே பார்த்துக்கொண்டிருந்த மாலதி துக்கம் தாங்காது சிறு குழந்தையைப்போல் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள். எவ்வளவோ பேச வேண்டுமென்று வந்தேனே என்று வருந்தினாள், கொஞ்ச நேரம் சென்றதும் அவள் மனதில் திடமான எண்ணம் ஒன்று உண்டாகியது. “சரி நான் அரண்மனை உத்தியோகஸ்தனையே மணந்து கொள்கிறேன்.” என்று தனக்குள்ளேயே முணுமுணுத்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பினாள்.

மாலதியை விட்டுச் சென்ற தியாகன் தன்னுடைய ஆபீஸுக்கு வந்து ஆபீஸ் மூலமாகவே லீவ் (leave) எடுத்துக்கொண்டு யுத்தத்தில் சேர்ந்தான்.

எண்ணி எட்டு வருஷங்கள் சென்றன. அவனும் பல தேசங்களைச் சுற்றிப் பார்த்துவிட்டுக் கடைசியில், சொந்த

ஊரைப் பார்க்கத் திரும்பினன். ஆனல் தியாகன் மனத்தில் மாத்திரம் ஒருவிதச் சாந்தியும் ஏற்படாததால் ஊருக்குள் நுழைந்து யாரையும் க்ஷேமலாபங்கள் விசாரிக்க அவன் விரும்பவில்லை. ஆகவே அவன் தன் தகப்பனர் காலமான பிறகு அந்த ஊரில் யாருமில்லாததால், தன்னுடைய பழைய நண்பன் வீட்டில் தங்கினன்.

ஒரு நாள், மாலை நேரத்தில் அவனுடைய பழைய இன்ப துன்ப சம்பவங்களை ஞாபகப்படுத்தவல்ல சில இடங்களைச் சுற்றிப் பார்த்துவிட்டுக் கடைசியில், துக்கத்தால் மேலே நடக்க முடியாதவனய் ஓரிடத்தில் எதையோ நினைத்துக் கொண்டு மெய்மறந்து உட்கார்ந்தான்.

"யாரது! நீங்களா?" என்ற ஒரு பெண்ணின் குரல் திடுக்கிடச் செய்தது. திரும்பிப் பார்த்து, மாலதி அங்கே நின்றுகொண்டிருந்ததைக் கண்டு, ஆச்சர்யத்தினல் மௌனமாய் அவளைக் கவனித்தான். யௌவனமும், அழகும் ததும்பிக் கொண்டிருந்த மாலதி, முகத்தில் களையின்றி, பிரேதம்போல் நின்றுகொண்டிருந்தாள் தண்ணீர் குடத்துடன். அவளுடைய சுந்தரவதனத்தில் பல கவலைத் திரைகள் தோன்றியிருந்தன.

கொஞ்ச நேரம் மௌனத்திலேயே சென்ற பிறகு "மாலதி! சௌக்கியமா? இங்கே வந்து எத்தனை நாட்களாகின்றன?" என்று விசாரித்தான் தியாகன்.

"ஐந்து வருஷங்களாக இங்கேதான் இருக்கிறேன். அப்பாவுக்கும் வயதாகிவிட்டது. அம்மா போன வருஷம் தான் இறந்து போனள். நான் "ராஜிநாமாக்" கொடுத்ததால் எனக்கும் பழைய உபாத்தியாயினி வேலை கிடைக்கவில்லை. இப்பொழுது ஒரு ஆரம்பப் பாடசாலையில், குறைந்த சம்பளத்துக்குத்தான் வேலை செய்கிறேன்" என்று மாலதி மெல்லிய குரலில் கண்ணீரோடு கூறினள்.

“என்ன?” என்று ஆச்சரியத்துடன் தியாகன் கூறினான்.

“என்னைத் தள்ளிவிட்டு என் கணவர் மறுமணம் செய்துகொண்டு விட்டார். அதிலிருந்து நான் இங்கேதான் இருக்கிறேன்.” என்று அவள் தன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு சொன்னாள்.

“பணக்காரன், அரண்மனை உத்தியோகம் என்று மணந்து கொண்டாயே இவ்வளவுதானா?” என்று கேலியும், குரோதமுமாகத் தியாகன் கேட்டான். மாலதிக்குத் துக்கம் பொங்கிக்கொண்டு வந்தது.

“ஏற்கனவே புண்ணாயிருக்கும் மனத்தை, ஏன் இன்னும் புண்படுத்துகிறீர்கள்? எல்லாம் உங்களால்தான் வந்தது. கல்யாணமான ஒரு வருஷத்திற்குள் என் கணவருக்கும் எனக்கும் மனக்கஷ்டம் உண்டானது. நான் அவரிடம் எப்பொழுதும் சந்தோஷமாக இருக்க, என் மனம் இடம் தருவதில்லை. அதற்கு நான் என்ன செய்ய முடியும்? இக் காரணத்தால் என் கணவருக்கு என்மேல் வெறுப்பேற்பட்டு விட்டது. நான் உங்கள்மீது பிரேமை கொண்டிருந்தேன் என்பதை எப்படியோ தெரிந்துகொண்டு, என்னை விஷம் போல வெறுக்கத் தலைப்பட்டார். பிறகு நாளாவட்டத்தில் அவருடைய மனம் பல ஸ்திரீகள் பால் சென்றது. அதைப் பற்றி நான் அவரிடம் விவாதித்தபொழுது ‘சீ நாயே, நீ உன் காதலனிடம் போ!’ என்று என்னை அடித்து வீட்டைவிட்டுத் துரத்திவிட்டார். மறுமணம் செய்து கொண்டு இப்பொழுது அவர் சௌக்கியமாக இருக்கிறார்.

ஒரு தவறும் செய்யாத நான், உங்களாலும் வெறுக்கப் பட்டேன். அவராலும் வெறுக்கப்பட்டேன். பெரும்பாலும் பெண்கள் ஆண்களைத் தேடி ஓடுவதில்லை. எங்கேயாவது

எலிப்பொறி எலியைத் தேடி ஓடுமா? ஆனால் நானோ
உம்மைத் தேடி ஒரு காலத்தில் வந்தேன். என் மனத்தை
நிறுத்திவிட ஏதாவது உபாயம் செய்யலாமென்று கலந்து
யோசிக்க, நான் உம்மை வரவழைத்தேன். தேடி வந்த
என்னைக் கண்டு, கண்டபடி தூஷித்து மனத்தைப் புண்
படுத்திவிட்டுப் போனீர்கள். என்ன இருந்தாலும் நாங்கள்
பெண்கள்தானே! ஆண்களைப்போல் தைரியம் எப்படி
பொதுக்கென்று குதிக்கும். இன்று என் பரிதாப நிலையைக்
கண்டு பரிகசித்து மகிழ்கிறீர்கள். இந்தச் சமயம் நான் என்
விதியை நொந்துகொள்வதைத் தவிர, வேறென்ன செய்ய
முடியும்?" என்று படபடவென்று கூறிக் கண்ணீர்
உகுத்தாள்.

யாரைத் தன் உயிர் போன்று கருதி அவள் சுக துக்கங்
களைப் பகிர்ந்து கொள்ளச் சித்தமாயிருந்தானோ, அவளையே
தான் துன்பப்படுத்தியதை அறிந்தவுடன் தியாகன் பச்சா
தாப மேலிட்டவனாய், "மாலதி! என்னை மன்னித்து விடு."
என்று கூறி முடிப்பதற்குள் மாலதி அவனைப் பாராமலே
விடு விடு என்று வீடுநோக்கிப் போய்க்கொண்டிருந்தாள்.

இதைக் கண்ட தியாகனுக்கு அதற்குமேல் அந்த ஊர்
விஷம்போல் இருந்தது. உடனே பழையபடி அவன்
வேலைக்கு வந்துவிட்டான். தன் கணவனாலும் உயிருக்கு
உயிராக இருந்த தியாகனாலும் வெறுக்கப்பட்ட மாலதி
அன்ன ஆகாரமின்றி கொடிய வியாதியால் பீடிக்கப்பட்டுப்
படுத்த படுக்கையாக இருந்தாள். தகப்பனார் எவ்வளவோ
ஆறுதல் சொல்லியும் "மனநோய்க்கு மருந்துண்டா?"
என்ற கதையில் வந்து நின்றது.

"இப்பொழுதோ தியாகா! தியாகா!! என்று கூப்பிட்
டுக் கொண்டிருக்கிறாளாம். நான் என்ன செய்யக்கூடும்?"
என்று தன் உயிர் நண்பன் செல்வராஜுக்குப் பூர்விக
விஷயங்களை எல்லாம் விவரமாகச் சொல்லி முடித்தான்.

“தியாகா! எல்லாம் எப்படியாவது போகட்டும். எனக்காகவாவது நீ போகத்தான் வேண்டும். மாலதியின் நிலை மிகவும் மோசமாக இருக்கிறது. ஏதோ! மனிதர்கள் குற்றம் செய்கிறவர்கள்தாம். உலகில் யார்தான் பிழை செய்யாமல் இருக்கிறார்கள்?” என்று கூறினான் செல்வம்.

கடைசியில், ஒரு முடிவுக்கு வந்தவனைப்போல் தியாகன் மாலதியைப் பார்க்கப் புறப்பட்டான். தியாகனுக்கு என்னமோ மனம் கஷ்டப்பட்டுக் கொண்டுதான் இருந்தது. அவன் வண்டியைவிட்டு இறங்கியதும், தன் ஊர் தன்னையே வெறுப்பதாகத் தோன்றியது.

மாலதியின் வீட்டுத் திண்ணையில் மாலதியின் தந்தை வாடிய முகத்துடனும், தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு எதையோ ஆழ்ந்து யோசித்துக் கொண்டிருந்தார். தியாகனைக் கண்ட அவர் கண்கள் கண்ணீரால் அலை மோதியது. “தியாகா!..........” என்று அவனை அணைத்துக் கொண்டார். பெரியவர், தியாகனை மாலதியின் அறைக்கு அழைத்துக்கொண்டு போனார். அப்பொழுதுதான் மாலதி, “தியாகா! தியாகா!” என்று கண்ணை மூடியாவாறு சொன்னது தியாகன் காதில் விழுந்தது.

இக் காட்சியைக் கண்ட தியாகன் மரம்போல் அசையாமல் நின்று விட்டான். வெகுநேரம் சென்றபின் தன்னையே தேற்றிக்கொண்டு மாலதியின் படுக்கையின் மேல் உட்கார்ந்தான். இதைக் கண்டதும் பெரியவர் சற்று அறையை விட்டு வெளியே அகன்றார். தியாகன் மாலதியைத் தடவிக் கொடுத்தான். மாலதியா? என்று சந்தேகமும் வந்தது.

“மாலதி!” என்று மெல்லிய குரலில் கூப்பிட்டான். இக்குரல் தன் செவியில் இன்பமாய் இருந்ததைக் கண்ட

மாலதி, தன் கண்ணைத் திறந்தாள். ஈ ஆடவில்லை. எங்கும் ஒரே மௌனம் குடிகொண்டது.

"மாலதி! இது என்ன கோலம்?" என்றான்.

"தியாகா! கடைசியாக உங்களிடம் சில விஷயங்களைச் சொல்ல வேண்டுமென்றுதான் நான் என் உயிரை வைத் திருந்தேன். நீ ஒரு நல்ல பெண்ணைத் தேடித் திருமணம் செய்துகொள். குழந்தைகள் பல பெற்றுச் சுகமாய் இரு. எனக்குப் பிறகு என் தகப்பனாரைக் கை விடாதே. எனக்காக இரவும் பகலும் கஷ்டப்பட்டார். என்னைப்போல வேறு எந்தப் பெண்களும் கஷ்டப்படாமல். என் விஷயத்தைப் பலருக்கும் எடுத்துச் சொல்லவும் கடைசி யாக, இந்த நேரத்திலாவது "என்னை மன்னித்து என்னை ஏற்றுக்கொள்வீரா?" என்று கண்களில் கண்ணீர் கலங்கக் கேட்டதைக் கண்ட தியாகன், அவளை அப்படியே தன் இரு கைகளாலும் எடுத்துத் தன் மார்போடு அணைத்துக் கொண்டான். இப்படியே அவர்கள் எவ்வளவு நேரம் இருந்தார்களோ தெரியாது. வெகுநேரம் கழித்து பெரியவர் உள்ளே வருவதைக் கண்ட தியாகன் தன் நினைவு வந்து, மாலதியைப் பார்த்தான். மாலதி சமாதான மாகத் தன் உயிரைத் தன்னுடைய மடியிலே நீக்கியதைக் கண்டான் தியாகன்.

பிறகு அவ்விடத்தை விட்டு, மாலதியின் தகப்பனாருடன், தியாகன் தன் இருப்பிடத்துக்குச் சென்றான். ஆனாலும் அவன் கருத்தை விட்டு மாலதியின் கதை அகலவில்லை. அவன் கண்களைவிட்டு அந்தச் சந்தர்ப்பம் அகலவில்லை. அவன் காதுகளைவிட்டு 'என்னை மன்னித்து என்னை ஏற்றுக் கொள்வீரா?' என்ற அந்தப் பதம் மட்டும் அகலவே இல்லை.

# 15. அவள் குற்றம்

என் கணவரைப் பிரிந்து சரியாக எட்டு ஆண்டு கள் ஆகிவிட்டன. என் தகப்பனாரின் நண்பர் ஒருவர் எங்கள் இல்லத்திற்கு வந்தார். அவர் என் மன நிலைமையை நன்றாக அறிந்து, என் பூர்விக சரித்திரத்தைக் கேட்க, நானும் அவரிடம் என் கதையைச் சொல்ல வேண்டியதாயிருந்தது:

'உலகம் இன்னது என்று தெரியாத நான். பள்ளிக் கூடப் படிப்பை முடித்துக்கொண்டு, பிறகு ஆசிரியைத் தொழிலுக்கு வாசித்துத் தேறினேன். பிறகு ஒரு பள்ளிக் கூடத்தில் சேர்ந்து வேலை பார்த்து வந்தேன்.

''என் தகப்பனாருக்கு நல்ல வருவாயிருந்ததால், அவர் என் சம்பளத்தை எதிர்பார்க்காமல் இருந்தார். அவருக்கு நான் கடைசிப் பெண்; நான் சந்தோஷமாயிருக்க வேண்டு மென்று அடிக்கடி சொல்லுவது வழக்கம். கடைசியில் என் னுடைய உறவினர் ஒருவருக்கே என்னைத் திருமணம் செய்து கொடுத்தார். கல்யாணமான மறுவாரமே, என் கணவர் இல்லத்திற்கு நான் சென்றேன். என் தமக்கைமாரும் கல்யாணம் செய்துகொண்டு, தூர தேசத்தில் இருந்த தாலும், நான் அதிக காலம் சென்று பிறந்ததாலும், என் மேல் அளவிலா ஆசை வைத்திருந்தார்கள் என் பெற்றோர்கள்.

பெரிய வீட்டில் பழகிய எனக்கு, கணவருடைய சிறிய வீட்டில் என்னவோ ஒரு மாதிரியாக இருந்தது. மின்சார விளக்கில் பழகிய எனக்கு மண்ணெண்ணெய் விளக்கு இருளாக இருந்தது. ஆகையால் சனிக்கிழமைகளிலும் ஞாயிற்றுக்கிழமைகளிலும் மற்ற ஆபீஸ் விடுமுறை நாட்களிலும் நான் என் தாயகம் செல்ல என் கணவரிடம் அனுமதி வாங்கிக்கொண்டேன். சில சமயங்களில் அவரும் என்னுடன் வந்து எங்கள் வீட்டில் தங்குவார். அந்நாட்கள் இன்பமாக இருந்தன.

இவ்விதம் ஆறு மாதங்கள் சென்றன. இரண்டு நாட்கள் பிறந்த வீட்டில் தங்குவது என்று இருந்தது, மூன்று அல்லது நான்கு நாட்கள் என்று ஆயின. இப்படியே இருந்து கடைசியில் என் கணவரிடம், "உங்கள் அம்மா அப்பாவுக்கு வேண்டிய பணம் கொடுத்துவிடுங்கள்! அவர்கள் அங்கேயே இருக்கட்டும். நீங்கள் என்னுடன் என் பிறந்த வீட்டுக்கு வந்துவிடுங்கள். நீங்களும் அடிக்கடி, 'பெரிய வீடு நன்ருக இருக்கிறது' என்று சொல்லுகிறீர்களே!" என்று சமயம் பார்த்து யோசனை கூறினேன்.

அவர், "தங்கமணி! நீ வேண்டுமானுல் போய்க் கொஞ்ச காலம் இருந்துவிட்டு, வா! ஆனுல் நான் மாத்திரம் வரமாட்டேன். மாமியார் வீட்டில் மருமகன் இருந்தால், அவன் மரியாதை குறைந்துவிடும் என்று உலகம் சொல்வது வழக்கம். ஆகையால் நீ போ, நான் வாரத்திற்கு ஒருமுறை அல்லது இருமுறை வருகிறேன்" என்று சொன்னுர்.

இவைகளைக் கேட்டதும் எனக்கு அளவில்லா ஆனந்தம் உண்டாயிற்று. எப்படியாவது கொஞ்ச காலம் ஆன பிறகு என் கணவரும், என் தாயகம் வருவார்—என்ற நோக்

லத்தில் இருந்தேன் என் அறியாமையால். விளையாட்டுப் போல் ஓராண்டு ஓடியது.

ஒரு நாள், என் மாமியார் நோயுற்றிருக்கிறார் என்று நானும் அவருடன் சென்றேன். என் கணவரின் இல்லத்திற்குச் சென்ற எனக்கு இருப்பே கொள்ளவில்லை. ஆகவே மாமி தேக சுகம் அடைந்த நான்காவது நாள் மாமியிடம் மாத்திரம் சொல்லிவிட்டு, என் இல்லம் வந்து சேர்ந்தேன்.

என் கணவர் ஆபீஸிலிருந்து வந்ததும், நான் இல்லத்தில் இல்லாததைக் கண்டு, மிக வருந்தினாராம். அன்று முதல் அவர் என் இல்லத்திற்கு வருவதே இல்லை. ஒரு மாதம் கழிந்தபின் நானே அவரைப் போய்ப் பார்த்தேன். அவருக்குப் பதிலாக, அன்று நானே சமைக்க ஆரம்பித்தேன். அதற்கு அவர் ஒன்றும் சொல்லவில்லை.

“நீங்கள் ஏன் வீட்டிற்கு வருவதில்லை? என் மேல் கோபமா?” என்று கேட்டேன்.

“கோபம் ஒன்றும் இல்லையே! என் பெற்றோர்கள் அடுத்தடுத்து வியாதியால் படுத்துவிடுகிறார்கள். நான் வர முடியாமல் போய்விட்டது” என்று சொன்னார்.

அச்சமயத்தில் என் தாயாருக்கும் உடம்பு சுகமில்லை. ஆகையால் அன்றே என் இல்லம் வரவேண்டியதாக இருந்தது.

நான் என் இல்லம் வந்த மூன்றும் ஆண்டு என் மாமனார் இறந்து விட்டார். அவர் இறந்த மூன்றும் நாள்தான் எனக்கு விஷயம் தெரியும். இது என் பெற்றோர்களுக்கு மிகுந்த வருத்தத்தை உண்டாக்கியது.

என் வருத்தத்தைக் காணச் சகியாதவராய் என் தகப்பனர் திடீரென்று, மாரடைத்து இறந்துவிட்டார். இத் துக்கச்செய்தியைக் கேள்விப்பட்ட என் கணவர் ஓர் அன்னியரைப் போல், வந்தார், சென்ருர். ஆம், என் கணவர் என்னைத் தன்னுடன் வருமாறு ஒரு வார்த்தை கூடக் கூறவில்லை. இப்படி உயிருடன் என் கணவரை இழந்து தன்னந்தனியள் ஆனேன்.

மறுபடியும் உபாத்திமைத் தொழிலைச் செய்யலாம் என்று எண்ணினேன். அதற்கு வேண்டிய நற்சாட்சிப் பத்திரங்கள் எல்லாம் என் கணவர் இல்லத்தில் இருந்ததால் அந்த வேலைக்கு மனு செய்துகொள்ளக்கூட முடியாமல் போய்விட்டது.

ஆகையால் நான் கொஞ்சகாலம் என் பெரிய அக்காள் வீட்டில் இருக்கலாம் என்று சென்றேன். அக்காளுக்கு என் வயதுப்பெண் ஒருத்தி இருக்கிருள். எனக்கும் அவளுக்கும் சதா சண்டையாக இருந்தது. எனக்கு ஒரு நாளாகிலும் இன்பமோ அல்லது சாந்தியோ இருந்ததில்லை.

பெரிய தமக்கையினிடம் இருந்து வருத்தத்துடன் நீங்கி வெளிவந்த நான், பின்பு என் சிறிய தமக்கையினிடம் சென்றேன். அவளுக்கும் இரண்டு சிறிய குழந்தைகள் இருந்தனர். அவர்களிடம் முதலாண்டு சந்தோஷமாகவே இருந்தேன்.

என் தாயார் எங்கள் சொந்த ஊரில் வீட்டு வாடகையைக் கொண்டு காலம் கழித்து வந்தாள். நான் என் கணவரின் இல்லத்திலே இருப்பதாகவே, என் தாயார் அக்கம்பக்கத்தில் கேட்டவர்களுக்குச் சொல்லி வந்தார்கள்.

பழகப் பழகப் பாலும் புளிக்கும் என்பார்கள். அது போல் என் சிறிய தமக்கைக்கும் என்பால் ஒருவித அருவருப்பு ஏற்பட்டது. நான் என் சின்ன அத்தானிடம் பேசினாலும், பவுடர் போட்டுக்கொண்டாலும், சின்ன அக்காளுக்கு என்மேல் சந்தேகம் வந்துவிடும்.

இந்நிலையில் அடிக்கடி 'மறுபடியும் என் கணவரிடம் போகலாமா?' என்று எனக்குத் தோன்றும். ஆனால் எனக்கிருந்த கர்வம் அதற்கு இடங்கொடுக்கவில்லை.

இதற்கு மத்தியில் என் சிறிய தமக்கை பிரசவத்திற்காக ஆஸ்பத்திரிக்குச் சென்றாள். இனிமேல் அந்த வீட்டில் இருப்பது சரியல்ல என்று அன்றே, நானும் என் தாய் வீட்டுக்குச் சென்றேன்.

அக்கம் பக்கத்து வீட்டுப் பிள்ளைகளுக்கு, "பிரைவேட் பாடம்" சொல்லிக் கொடுத்து நானும் என் தாயாரும் காலத்தைக் கடத்தி வந்தோம். ஏன்? என் தாயாரைத்தேடி யாராவது வாலிபர்கள் வந்தால், அது பார்ப்பவர்களுக்கு ஒரு குற்றமாக இருந்தது. இவைகளை நினைத்து நினைத்து நான் வியாதியாகப் படுத்தேன். இனி எனக்கு......" என்று அதற்குமேல் சொல்ல முடியாமல் படுக்கையிலேயே நான் அழ ஆரம்பித்தேன்.

இவைகளைக் கேட்ட பெரியவர், "சிக்கல்களை அதிகமாக்கிக் கொண்டாய்! இன்று இன்பம் எங்கே என்று தேடுகிறது உள்ளம். சாந்தி கிடைத்தால், சற்றுச் சாயலாம் என்று நாடுகிறது உள்ளம். அது இருக்கும் இடம் எது என்று சொல்ல முடியாது. அது எங்கும் இருக்கிறது; அது எங்கும் இல்லை. சிலர் உணவில், செல்வத்தில், உடையில் டாம்பீகத்தில், கல்வியில், சுற்றுப் பிரயாணத்தில், இன்பம் இருப்பதாக எண்ணுகிறார்கள். அங்கும் இல்லை என்பதைக்

கடைசியில் உணர்கிறார்கள். தாய் வீட்டில், கணவரின் வீட்டில், இன்பம் இருப்பதாக எண்ணுகிறோம், ஆனால் அங்கும் இல்லை.

"ஆனால் இன்பத்தின் கதிர்கள் ஆங்காங்கே வீசிக் கொண்டேதான் இருக்கின்றன. இரவு பகல் மாறுவதைப் போலவே, குடும்பத்தில் சிறிய சிறிய பூசல்கள் இல்லாவிட்டால் சுவாரஸ்யம் இருப்பதில்லை. சிறு சிறு குழப்பமும், கலகமும் ஏற்பட்டால்தான், தெளிவும் அமைதியும், இன்பமும், சாந்தமும் உண்டாகும். துன்பங்கள்தான் இறுதியில் ஏற்படும் இன்பங்களுக்கு அறிகுறிகள். தோல்விகள் தான் இறுதியில் உண்டாகும் வெற்றிக்கு அறிகுறிகள்" என்று என் தகப்பனாரின் நண்பர் கூறிவிட்டு வெளியில் சென்றார்.

நான்கு நாட்கள் சென்றன. அந்தப் பெரியவர் எங்கள் வீட்டை நோக்கி மறுபடியும் வந்து, "உன் கணவர் உன்னைக் காண வேண்டுமாம். என்னுடன் வா!" என்று கூறினார். எட்டாண்டுகளுக்குப் பின், இவ் வார்த்தைகள் எனக்குப் புதியதோர் மணக்கோலத்தை உண்டாக்கின. நானும் உடனே சென்றேன். எங்கள் வண்டி என் கணவரின் வீட்டண்டை போய் நின்றது.

வாசலில் காத்திருந்த என்மாமி, "வாம்மா தங்கமணி"? என்று என்னை அழைத்தார்கள். நான் சற்று தயக்கத்துடன் உள்ளே சென்றேன். என் மாமியும், பெரியவரும் பேசிக் கொண்டிருந்தார்கள். அங்கிருந்த ஒரு அறைதான் என் கணவரின் அறை என்று தெரிந்து, மெல்ல எட்டிப் பார்த்தேன். சுற்றும் முற்றும் பார்த்தேன். அவர் இல்லை. அவ்வறையின் எதிர்ச்சுவரில் மகாத்மா, ஜவஹர்லால் முதலியோரின் படங்கள் இருந்தன. மற்றொரு புறத்தில் உலகத்திற்கு அஹிம்சையைப் போதித்த புத்த பகவானின் திரு

உருவப்படம் இருந்தது. இவற்றுக்கு மத்தியில் கணவரை "உதாசீனம்" செய்து தள்ளிய இந்த அகங்காரப் பேயின் புகைப்படம் பெரியதாகச் செய்து மாட்டியிருந்தது.

'நான் அவரை, எவ்வளவோ உதாசீனம் செய்துங்கூட அவர் என்மேல் இவ்வளவு அன்புடன் இருக்கிருரே' என்று நினைக்க நினைக்க என் மூச்சுத் திணறிற்று.

ஒரு நிமிஷம் தேவதாயின் படத்தைப் பார்த்தேன்.

"அவர் ஏழை என்பதற்காக நீ அவரை உதாசீனம் செய்தாயே! மனிதர்களுக்கு வேண்டுவது அன்பு" என்று அத் தேவமாதாவின் படம் சொல்லுவதுபோல் தோன்றியது. அடுத்த நிமிஷம் என் கணவரின் படத்தைக் கண்ணில் ஒத்திக்கொள்வதற்காக, இரண்டடி நகர்ந்தேன். மார்பு 'படபட' வென அடித்துக்கொள்ள, அவர் படுக்கையின் மேல் 'தொப்' பென்று விழுந்து மூர்ச்சையாகிப் போனேன்.

எனக்கு நினைவு வந்தபோது, என் கணவரது மடியின் மேல் நான் தலை வைத்துப் படுத்திருப்பதைக் கண்டேன். "சட்" டென்று எழுந்திருக்க முயன்ற என்னை நோக்கி, "தங்கம்! உன் உடம்புக்கு என்ன? இப்பொழுது எழுந்திருக்க வேண்டாம். பேசாமல் படுத்துக்கொள்" என்ருர் என் கணவர்.

"என்னை மன்னித்து விடுங்கள். நான் உங்களுக்கு மிகவும் அபசாரம் செய்து விட்டேன்?" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தேன்.

"பைத்தியமே! நீ என்றும் என் தங்கந்தான். வருத்தப் படாதே. எல்லாம் அவர் செயல். நாம் என்ன செய்ய முடியும்?" என்று முகத்தோடு முகம் வைத்துச் சொன்னுர்.

# 16. பில்லவர் சொன்ன கதை

இந்தியாவில் சுமார் இரண்டு லக்ஷம் ஆதிவாசிகள் இருப்பதாகக் கணக்கிடப்படுகிறது. நம் நாட்டு ஆதிவாசி கள் பலரில் பில்லவர்களும், ஒரு கூட்டத்தினர். விந்திய சாத்பூரா மலைகளின் சாரலில் இம்மக்கள் கூட்டங் கூட்ட மாக வாழ்கின்றனர். ஒற்றையடிப் பாதையின் மூலமாகப் பாறைகளையும் குன்றுகளையும் கடந்து சென்ருல், இவர் களுடைய குடிசைகளைக் காணலாம். இவர்களுடைய குடிசைகள் பெரிய கிண்ணத்தைக் கவிழ்த்தாற்போல் காண்போருக்குத் தோன்றும். இவர்கள் வில் வேட்டை யில் சமர்த்தர்கள்.

இவர்கள் குடிசையில் ஐந்து நாட்கள் நான் தங்கினேன். எனக்கு உதவி செய்த பெரியவர் அவர்களுடைய குலக் கதைகள் பலவற்றைக் கூறிஞர்.

தமிழ்நாட்டில், பண்டைக்காலத்தில் இறந்தவர்களுக்கு வீரக்கல் நாட்டிஞர்கள். கற்புடைய மகளிருக்கு மகா சதிக் கல்லை நட்டு வணங்கிஞர்கள். அக்கல்லில் அவர் களுடைய பெயர்களையும் வீரச்செயலையும் குறித்து வைத் தார்கள். மேல்நாடுகளிலோ இறந்தவர்களுக்காகப் பெரிய கல்அறை ஒன்று கட்டி, அதன்மீது அவர்களது வீரத் தைப் பற்றிச் செதுக்குவார்கள். பிறகு படிப்படியாக

இறந்தவர்களின் உருவத்தையே அமைத்து வைத்து வணங்கும் வீர வணக்க வழக்கமும் உண்டாயிற்று. கற்பரசியாகிய கண்ணகிக்குச் செங்குட்டுவன் கல்லால் சிலையைச் செய்து பிரதிஷ்டை செய்தான்.

இவ்வாறு பில்லவர்கள் தம் குலக்கதைகளையும் வீரக் கதைகளையும் தலைமுறை தலைமுறையாகச் சொல்லிக் கொள்ளுகின்றனர். அப்படிச் சொன்ன பல கதைகளில் ஒன்றை இங்கே தருகிறேன்.

"பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஒரு வண்ணான் ஆற்றில் துணி துவைத்துக்கொண்டு இருந்தான். அவன் பகல் வேளையில் ஆற்றங்கரையில் அறுசுவை உணவு சாப்பிடுவது வழக்கம். அங்ஙனம் அவன் சாப்பிடும்போது, தன்னுடைய உணவில் ஒரு பிடி சாதத்தைத் தினந் தோறும் மீன்களுக்கு இட்டுப் பின்பு சாப்பிடுவான்.

பல்லாண்டுகளுக்குப் பின், ஒருநாள் உருவத்திலே பெரிய ஒரு மீன் வண்ணானைப் பார்த்து 'ஜலப்பிரளயம்' வரப்போகிறது. காரணம், உலகில் பாவம் நிறைந்து விட்டது. ஆகையால் நீ ஒரு பெரிய பெட்டியைச் செய், அதில் நீயும் உன் சகோதரியும், ஜீவராசிகளில் ஒவ் வோர் இனத்தில் ஒவ்வொரு ஜதையும் பேழைக்குள் சேர்த்து மூடிக்கொள்ளுங்கள்.

பேழைக்குள் நீங்கள் உங்களுக்கு வேண்டிய ஆகாரத் தையும், ஜீவராசிகளுக்கு வேண்டிய தீனிவகைகளையும் வைத்துக்கொள்ளவும். நீர் எங்கள் இனத்தை உணவிட் டுக் காப்பாற்றியதால், உங்கள் உயிருக்கு எச்சரிக்கை செய்கிறேன்" என்று கூறித் தண்ணீரில் மறைந்தது மீன். பிறகு பில்லவ வண்ணான் மீன் கூறியபடி ஒருபெரிய பேழை செய்து எல்லா ஜீவராசிகளையும் அதில் சேர்த்துக்

கொண்டான். பிறகு மழை ஆரம்பித்தது. பல மாதங்கள் மழை பெய்தது.

ஜலப்பிரளயத்திற்குப் பின் இராமர் தம் தூதனை அனுப்பி, பூலோகத்தின் நிலைமை எப்படி இருக்கிறது. என்று தெரிந்து வா!'' என்று கூறி அனுப்பினார்.

பூலோகத்திற்கு வந்த தூதன் சேவல் கூவும் குரலைக் கேட்டு சுற்றும் முற்றும் பார்த்தார். ஒரு பெரிய பெட்டி ஒரு மலையின்மேல் இருப்பதைக் கண்டு, பேழையைத் தூக்கிச் சென்றான்.

இராமர் வண்ணானைப் பார்த்து, "நீ யாரப்பா? எப்படித்தப்பினாய்? இப்படிப் பேழை செய்து எல்லா ஜீவராசிகளையும் அதனுள் சேர்த்துக்கொள்ள வேண்டு மென்று கூறியது யார்?" என்று கேட்டார்.

வண்ணான் தான் பல்லாண்டுகளாக அன்னமிட்டு வளர்த்த மச்சங்களில் ஒன்று கூறிய செய்தியை இராம ருக்குக் கூறினார். பின்பு இராமர் வண்ணானை வடக்கு, கிழக்கு, மேற்குத்திசைகளில் திரும்பும்படி கூறினார். அவனரு கிலிருந்த பெண்ணைச் சுட்டிக் காட்டி "இவள் யார்?" என்று கேட்டார்.

இவள் என் சகோதரி" என்று கூறினான் வண்ணான். இராமர் வண்ணானைத் தெற்கே திரும்பும்படி சொல்லி மறு படியும் அப்பெண்ணைக் காட்டி "இவள் யார்?" என்று கேட்டதற்கு "இவள் என் மனைவி" என்று கூறினான் வண்ணான். பிறகு இராமர் தூதனைப் பார்த்து, வண்ணான் தப்பிப் பிழைக்க இந்த உபாயத்தைக் கூறின அந்த மீன் வர்க்கத்திற்கு உடனே அவைகளது நாக்கை வெட்டும்படி கட்டளையிட்டார்.

அன்று முதல் இன்றுவரையில் அந்த மீன் வர்க்கத்திற்கு நாக்கு வெட்டுண்டேதான் இருப்பதாகக் கூறப்படுகிறது.

இராமர் வண்ணனைப் பார்த்து "இனவிருத்தி உலகில் பெருகுவதற்காக நீ உன் சகோதரியை மனைவியாக்கிக் கொண்டு, அவளுடன் இன்பமாக நீண்ட நாள்வரையில் வாழ்வாயாக" என்று கூறினார்.

அந்தச் சகோதர தம்பதிகளுக்கு ஏழு பெண்களும், ஏழு பிள்ளைகளும் பிறந்தார்கள். இராமர் முதல் பையனுக்கு ஒரு பரியைப் பரிசளித்தார். ஆனால், அவன் அந்த அன்பளிப்பான தெய்வீகக் குதிரையைச் சவாரி செய்யச் சக்தியற்றவனாக இருந்தபடியால் அதை வெட்டவெளியில் விட்டுவிட்டு அருகிலிருந்த அடர்ந்த காடுகளுக்குள் சென்றான். அங்கு மரங்களை வெட்டியும் வேட்டையாடியும் தேனைச் சேகரித்தும் வாழ ஆரம்பித்தான். அன்றுமுதல் அவன் சந்ததியார் காட்டிலேயே தங்கிக் காட்டுவாசிகள் ஆனார்கள். அவர்கள்தாம் நாங்கள். நாங்கள் இன்று 'பில்லவர்கள்' என்ற இந்திய இனமாக அழைக்கப்படுகிறோம்" என்று கூறினார் பில்லவப் பெரியார்.

இப் பெரியார் கூறிய, 'பில்லவர்' களின் குலக் கதைகளில் இது எவ்வளவு தூரம் உண்மையானது என்பது யாருக்குத் தெரியும்? ஆனால் மானிட இயல் சரித்திர வாயிலாகப் பல்லாண்டுகளாக ஆராய்ச்சி செய்யும் நான், இந்நாள் வரையில் இந்தியாவில், "அண்ணன் தன் சொந்தச் சகோதரியைத் திருமணம் செய்து கொள்ளும் ஓர் இனம் இன்றுமுண்டு'—என்று நம்புகிறேன்.

இவர்கள் கூறின ஜலப்பிரளயம் என்ற சம்பவம் கிறிஸ்தவர்களின் வேதத்தில் ஆதியாகமத்தில் கீழ்க் கண்டவாறு உள்ளது:

கர்த்தர் நோவாவை நோக்கி,

உலகில் பாவங்கள் நிறைந்து விட்டன. நீயும் உன் வீட்டிலுள்ள அனைவரும் முன்னதாகவே செய்து வைத்த பேழைக்குள் பிரவேசியுங்கள். உன்னுடன் எல்லா ஜீவராசிகளிலும் ஆணையும் பெண்ணையும் சேர்த்துக் கொள்" என்று கூறினார்.

ஏழாம் நாள் முதல் இரவும் பகலுமாக மழை பெய்து உலகம் முழுவதும் ஜலப்பிரளயம் ஏற்பட்டது. எல்லா ஜீவாரசிகளும் மாண்டன. நோவாவின் பேழை மட்டும், 'அரராத்' மலையின் மேல் தங்கி இருந்தது. அப்பொழுது கர்த்தர் நோவாவை நோக்கி, "பூமியை நிரப்புங்கள்" என்று கூறினதாக வேதம் கூறுகிறது. பில்லவர்கள் இதனைத் தங்கள் குலக் கதையாகத் தலைமுறை தலைமுறையாகச் சொல்லிக்கொண்டு வருகிறார்கள்; அன்னியர்களிடமும் கூறுகிறார்கள். அக்காரணத்தால் அக் கதையில் நாளடைவில் சில மாறுதல்கள் உண்டாகி இருக்கலாம். பல்லாண்டுகளாக ஆதிவாசிகளின் கதைகளை யும், பழக்க வழக்கங்களையும், அவர்களின் பொருள் களையும், மொழிகளையும் சேகரித்து வைத்துக்கொண்டு, அவர்கள் நம்முடைய சங்ககால நூல்களிலும் பலதரப்பட்ட மக்களுடைய வேதங்களிலும் நாடோடிப் பாடல்களிலும், வைத்திய நூல்களிலும் கூறப்பட்டுள்ள செய்திகளுடன் எவ்வகையில் தொடர்புடையனவாய் இருக்கின்றனவென்று ஆராய்ச்சி செய்யும் நான், கிறிஸ்தவர்களின் வேதத்தில் வரும் 'நோவா' வின் சந்ததியாராக இவர்கள் ஏன் இருக்கக்கூடாது? என்று சிந்திக்கிறேன். ஏனென்றால் மற்ற ஆதிவாசிகளிடம் ஜலப்பிரளயக் கதையை நான் இது வரையில் கேட்டதில்லை.

மேலும், இன்றுவரையில் மச்ச வகையில் குறிப்பிட்ட ஒரு வர்க்கத்திற்கு மட்டும் தலையில் நாக்கு வெட்டுண்டு இருப்பதை நாம் காணலாம்.

காட்டில் கேட்ட கதைகளையும் கண்ட நிகழ்ச்சிகளையும் நாடோடிப் பாடல்களில் வரும் கருத்துக்களையும் வைத்துக் கொண்டு சற்று ஆராய்ந்தால் அவைகள் ரசமான கருத்துக் களை நமக்கு ஊட்டும் என்பது திண்ணம்.

இவைகளைப்போல், பல காடுகளில் பல கதைகளைக் கேட்டு இன்பமடைவதும் உண்டு. ஆனால் அக்கதைகளில் சில ஆராய்ச்சி முடிவுகளுக்கு இடமளிக்க இன்னும் மறுத்து நிற்கின்றனவன்றோ!

# 17. புயலும் அமைதியும்

இரண்டு மூன்று நாட்களாகவே மேகங்களெல்லாம் இருண்டு இருந்தன. புயல் காற்று வீசப் போகிறது என்று பத்திரிகைகள் எல்லாம் எச்சரித்திருந்தன. ஆனால் எத் திசையிலிருந்து, எத்திசையை நோக்கி, என்றைக்கு அடிக்கும் என்பது மட்டும் யாருக்கும் தெரியாது. ஒரு நாள் இரவு கடுமையான காற்று வீசத் தலைப்பட்டது.

பிரமாண்டமான மரங்களெல்லாம், மளார்—மளார் என்று முறிந்து விழுந்தன. இடியும் மின்னலும் கண்ணை யும், காதையும் அவற்றின் பணியைச் செய்ய ஒட்டாமல் தடுத்தன.

புயல் காற்றுக்கும் இடி மழைக்கும் வெள்ளத்திற்கும் பயந்து நெஞ்சையள்ளும் தஞ்சையை விட்டுக் கால் நடை களைப்போல் மக்கள் பலர் நடந்து, பக்கத்திலே இருக்கும் கிராமங்களுக்கும் ஊர்களுக்கும் திரள் திரளாகச் சென்றனர். வண்டியும், காரும் எதுவுமே இல்லாத பண்டைக்காலம் போல் அன்று தஞ்சை தோற்றமளித்தது. இந்நிலையில் வீதியின் வழியில், சரஸ்வதி மகாலைக் கடந்து சற்றுத் தூரம் நடந்து போய்க்கொண்டிருந்தது ஓர் குடும்பம். புயல் காற்றையும் மழைத் தண்ணீரையும் கிழித்துக்கொண்டு ஒரு கார் மிகுந்த வேகமாக அக் குடும்பத்தைத் தாண்டிச் சற்றுத்

தூரத்திலேபோய் டக்கென்று நின்றது. காரிலிருந்தவர்கள் தெரிந்தவர்களைப்போல் இறங்கி வந்து அக் குடும்பத்தைப் பார்த்து, "மிஸ்டர் மூர்த்தி! நாங்கள் கும்பகோணம் போகிறேம். எங்களுடன் வாருங்கள். எங்கள் இல்லத்திலேயே தங்கலாம், புயல் நின்று, அமைதிக்குப்பின் வந்துவிடலாம்" என்று காரிலிருந்த கண்ணன் கூறினர்.

"வேண்டாம், உங்களுக்கு ஏன் வீண் சிரமம், நானும் என் மனைவியும், என் நண்பர் இல்லத்திற்குப் போகிறேம்" என்று பதிலுரைத்தார்—மூர்த்தி.

பின்பு கண்ணன் காரிலிருந்து இறங்கி மூர்த்தியின் குழந்தைகளையும், அவர் மனைவியையும் காரில் உட்காரும் படி வற்புறுத்தினர்.

கண்ணனின் செய்கை, பார்ப்பவர்களுக்கு இரு குடும்பத்தாரும் நெருங்கிய உறவினர்களாக இருக்கவேண்டுமென்பதை நன்ருகத் தெளிவுபடக் காட்டியது.

ஏற்கனவே எதிர்க்காற்றில் நடந்து கால்கள் கடுக்கவே கண்ணன் கூறியதைக்கேட்ட கமலகாந்தி, தன் கணவர் மூர்த்தியைத் திரும்பிப் பார்த்தாள். மூர்த்தியும் தன் மனைவிக்கு அனுகூலமாகவே தலையை அசைத்தார். பின்பு எல்லோரும் காரில் உட்கார்ந்து கொண்டார்கள். காரும் வேகமாகச் சேற்றையும் மழைத் தண்ணீரையும் புயல் காற்றையும் கிழித்துச் சென்றது. ஆனல் காரிலே ஒரே மௌனம் குடிகொண்டது.

சில ஆண்டுகளுக்கு முன் நடந்த எல்லாச் சம்பவங்களும் அக்காரிலிருந்த எல்லோருடைய உள்ளத்திலும் ரீங்காரமிட்டது என்பதை அவர்களின் முகங்களே கண்ணாடிபோல் காட்டின.

கொடைக்கானல் என்பது மலைப்பாங்கான இடம். அவ்விதமான மலைப்பிரதேசத்தில் ராஜு என்பவர் சிறிய தோர் தோட்டத்தை வைத்துக் குளிர் தேசத்துப் பயிர்களைப் பயிர் செய்துகொண்டிருந்தார். சாதாரணமாய் அவர் நல்ல உழைப்பாளி. காலைமுதல் மாலைவரை உழைக்கும் மனப்பான்மை கொண்டவர். தம்முடைய உழைப்பாலும், மனைவியின் ஓயாத உதவியாலும் சிறிய தோட்டம், பெரிய தோட்டமாகவும், கடைசியில் பல மைல் சுற்றளவுள்ள தாகவும் மாறியது. பண்ணை ஆட்களைக்கொண்டு தோட்டம் அமைக்கவும், இயந்திரங்களைக்கொண்டு தண்ணீர் இறைக்கவும் தலைப்பட்டார். ராஜு என்னும் பெயர் மாறி முதலாளி என்ற நாமம் சூட்டப்பட்டது. சிலர் "தோட்டக்கார ராஜு வீடு" என்னும் பட்டம் கொடுத்தனர்.

ஆனால் கல்வி என்பதோ பூஜ்ஜியமாக, 'அ' என்ற எழுத்தே தெரியாத அவர், தம்முடைய குமாரத்திகள் இருவரையும், நன்றாகக் கல்வி கற்கும்படி செய்து பட்டதாரி கள் ஆக்கினார்.

மூத்த மகளை ஆசிரியையாகச் செய்தார். சிறிய மகளை டாக்டர் பணிக்குத் தேர்ச்சிபெறச் செய்தார். தங்கள் மூதாதையர் காலம் முதல், இன்று வரையில் தங்கள் குடும் பத்திலேயே பட்டதாரிகள் யாரும் இல்லை, ஆசிரியைகளும் இல்லை; டாக்டர் அம்மையார்களும் இல்லை. அவர்கள் குடும்பத்திலே ஆண்களுக்கே கல்வி இல்லை என்றால், பெண்களைப்பற்றிக் கூறவும் வேண்டுமா!

மூர்த்தி என்பவர் கொடைக்கானலிலே ஓர் அரசாங்க உத்தியோகத்தில் கீழ்க் குமாஸ்தாவாக இருந்தார். அவர் தோட்டக்கார ராஜுவுக்குச் சற்றுத் தூரபந்து. இவர் பட்டம் பெறாவிட்டாலும், உயர்தரப் பாடசாலைப் படிப்பு படித்தவராகையால், இவரைத் தேர்ந்தெடுத்துக், கமலகாந்

திக்குப் பெற்றோர்கள் திருமணம் நடத்தினர்கள். மூர்த்திக்கும் கமலகாந்திக்கும் திருமணம் நடந்து, சில ஆண்டுகளே ஆயின. அடிக்கடி இவர் தம்முடைய மைத்துனி டாக்டர் பிரேமாவுக்கு ஒரு நல்ல வரன் வரவில்லையே என்று வருந்துவது உண்டு.

கண்ணன் என்பவர் தோட்டக்கார ராஜுவுக்கு நெருங்கிய பந்துதான். ஆனால் ஐந்தாறு வகுப்பு வரையில் தான் வாசித்தவர். ஒரு மளிகை கடையில் வேலை செய்கிறார். ஆனால் உயரத்திலும் அழகிலும் பார்வையிலும் மன்மதனைப் போல் உள்ளவர். குணத்திலோ குணாளனைப் போன்றவர்.

சிகாமணி அம்மாளும், பிரேமாவும், இவர் கடையில் தான் மாதந்தோறும் வீட்டுக்கு மளிகைச் சாமான் வாங்குவது வழக்கம். பிரதி மாதமும் கடைக்குப் போகும்போது சின்னப் பெண்ணை அழைத்துச் செல்வது வழக்கம்.

கண்ணன் மளிகைக் கடையில் இருந்தாலும், அதிகமாகக் கல்வி கற்காதவராக இருந்தாலும், சிறந்த அறிவாளி என்பதையும், அன்பும், சாந்தமும் உடையவர் என்பதையும் எப்படியோ தெரிந்து வைத்திருந்தாள் பிரேமா. கண்ணன் தனக்கு ஓய்வு கிடைக்கும் நேரத்திலெல்லாம் பத்திரிகைகளுக்குச் சிறு கதைகள் எழுதுவது வழக்கம். அடிக்கடி அவர் கதைகளை டாக்டர் பிரேமா வாசித்து ரசிப்பதும் உண்டு.

இந்த நிலையில் டாக்டர் பிரேமாவுக்கு நல்ல வரன் வாய்க்கவில்லையே என்ற சிந்தனை என்றும் ராஜுவின் உள்ளத்திலே வேதனை செய்துகொண்டே இருந்தது. தன் மகளை ஏன் படிக்க வைத்தோம், ஏன் பட்டதாரி ஆக்கினோம் என்ற சிந்தனையே, அவர் உள்ளத்தில் சதா ஊசலாடிக் கொண்டிருந்தது. கொஞ்சமாகப் படிக்க வைத்திருந்தால்

எவனுக்காவது மணஞ் செய்வித்திருக்கலாம் அல்லவா? என்று பல சிந்தனைகள் ராஜுவின் உள்ளத்தை வாட்டின.

சில மாதங்களுக்குப் பிறகு, "பிரேமாவுக்குத் திருமணம் நடந்துவிட்டது. அதே மளிகைச் சாமான் கடைக்காரக் கண்ணனையே மணந்தாள் என்று கண்ணீருடன் சிகாமணி அம்மாளின் கடிதம் கமலகாந்திக்கும் மூர்த்திக்கும் வந்தது.

கல்யாணச் செய்தியைக் கேட்டுக் களிக்க வேண்டிய உள்ளங்கள் கண்ணீரால் கலங்கின.

அன்புள்ள மைத்துனி பிரேமாவுக்கு,

ஆசி. நாங்கள் சுகம். சுகமறியப் பேரவா. சில தினங்களுக்கு முன்னர், உன்னுடைய தாயாரிடமிருந்து ஓர் கடிதம் வந்தது. கடிதத்தைக் கண்டு களிக்க வேண்டிய கண்கள், கண்ணீரால் கரைந்தன. பாறையைத் தேரை சுமந்திருப்பதைப் போலவும், கிணற்றைப் பாசி மூடி இருப்பதைப் போலவும், எல்லோருடைய துயரங்களையும் அக்கடிதம் மூடி இருந்தது. ஆகாயத்தை மேகங்கள் தாலாட்டினால், மழை உண்டாகும். அதைப் போலவே கடிதம் எங்கள் தேகத்தைத் தாலாட்டியது, மழையைப்போல கண்ணீர் கசிந்தது. தேகத்தின் அங்கங்கள் எல்லாம் அறுந்து விழுவது போல் இருந்தன. அச்செய்தியைக் கேட்டு, 'இது உண்மையாக இருக்குமா? என்ற சிந்தனை எங்களுக்கு உண்டானது. அச்சிந்தனைகளும் சிதறுண்டன.

நம் குடும்பத்தில் ஒரு, "டாக்டர் லேடி" உண்டு என்று பெருமை கொண்டோம். அந்தப் பெருமை இன்று இடிந்து விழுந்தது.

வாழ்க்கை என்பது அலைகள் அடங்கிய கடல். அந்த அலைகள் அடிக்கும்போது, போதுமான பலம், தைரியம்,

தெய்வபக்தி, பெரியவர்களின் துணை இவை வேண்டு மல்லவா? அவைகள் அலைகளுக்குப் பக்கத்திலே உங் களுக்கு உண்டாவென்று சில விநாடிகள் சிந்தித்தேன். நீ தேடிக்கொண்டதை எதிர்த்துச் சொல்லவோ, அதைத் தடுக்கவோ, வேண்டாமென்று சொல்லவோ, எனக்கு உரிமையில்லை. ஆனால் அந்த உரிமை பெற்றோர்களுக்கு உண்டு.

எங்களுக்குச் சொல்லாமல் நீ திருமணம் செய்து கொண்டது எங்கள் உள்ளத்தையே உடைத்துவிட்டது. காதல் கல்யாணத்தை நான் வெறுக்கவும் இல்லை, அதை நான் போற்றவும் இல்லை. இரண்டுமே எனக்குத் தெரி யாது. ஆனால் நீ திருமணம் செய்வதற்குமுன் எனக்குக் கடிதம் எழுதி இருந்தால் நான் இன்னும் பல முக்கிய மான விஷயங்களை எழுதி இருப்பேன்.

'வெள்ளம் வருவதற்கு முன் அணையைக் கட்டவேண்டும்' ஆனால் வெள்ளமே வந்துவிட்டது, இப்பொழுது அணை கட்டுவதில் உபயோகமில்லை. ஆனால் வந்த வெள்ளத்தை நல்ல மார்க்கத்திலும், நல்ல வயல்களுக்கும் திருப்பலா மல்லவா? எழுதும்போது துயரம் தொண்டையை அடைக் கின்றது. உனக்கு இருப்பது பெண் உள்ளம்தானே என்பதும் யோசிக்க வேண்டி இருக்கிறது.

பெண்ணுக்கு ஓர் ஆண் துணை கட்டாயம் வேண்டும். எல்லா மங்கையர்களுக்கும்தான் வேண்டும். ஆனால் தேர்ந் தெடுக்கும் ஆண் சூழ்நிலையை ஜயிக்கக்கூடிய ஆணா? கடைசி மட்டும் நேசிக்கக்கூடிய ஆணா? மனக் கசப்பினாலோ வறுமையின் வாட்டத்தினாலோ பெண்ணைக் கடிந்து பேசக் கூடிய ஆண் வர்க்கமா? என்று நம் நாட்டில் ஒவ்வொரு பெண்ணும் தெரிந்துகொள்ள வேண்டுவது மிகவும் அவசியம்.

பெற்ருேர்களை மறந்து, சகோதரியை மறந்து, என்னையும் மறந்து நீ திருமணம் செய்து கொண்டதால் கூட எனக்குக் கோபமோ வருத்தமோ இல்லை. ஆனல் குடும்ப சம்பிரதாயத்தைவிட்டுக் கோவிலிலோ பெரியவர்கள் சூழ வீட்டிலோ தாலி கட்டுவதை மறந்து, 'இடது கைக்காக, வலது கரத்தை வெட்டுவதைப்போல்' நம் குடும்பத்தில் என்றும் நடக்காத ஒரு காரியத்தைக் கல்வி ஞானம் இருந்தும், செய்தாயே அதுதான் எனக்கு வருத்தம்.

நரம்புகளை நூலாகத் திரித்து, தோலைப் பாயாக விரித்து, கொதிக்கும் ரத்த வேகத்திலே பாடுபட்ட ஏழைத் தாயை மறந்துவிட்டாயே இது தர்மமா? ''உண்மையான அன்பை வாய்ச்சொல் வெளிப்படுத்தாது; சேவைதான் வெளிப்படுத்தும்'' என்பதைக் காந்தி அடிகள் முஸ்லீம் இந்து கலவரத்திலே தெருவிலே நின்று அடியுங்கள். என்னைத் திட்டுங்கள், ஒருவருக்கொருவர் திட்டிக்கொள்ள வேண்டாம்'' என்று கூறினர். அதைப்போல் உன்னைத் தன் உயிர்நாடியாக மதித்த ஓர் உயிரை, உனக்காக எதையும் செய்யத் தயாராக இருந்த ஓர் உயிரை, உனக் காக உறவினர்களையும், சகோதர சகோதரிகளையும் இழக்கத் தயாராக இருந்த ஓர் உயிரை, உன் சுகமே தன் சுகமாகக் கருதிய ஓர் உயிரை, தன் அன்பையே அள்ளி அள்ளிக்கொட்டிய ஓர் தாயகத்தையே மறந்து நீ திருமணம் செய்துகொண்டதும் எனக்கு வருத்தமில்லை. குடும்ப சம்பிர தாயத்தைவிட்டுப் புதிய மார்க்கத்திலே திருமணம் செய்ததை நினைத்தால் என் உள்ளம் வேதனைக் கடலிலே மூழ்கிவிடுகிறது.

மின்னும் மின்னலிலே, இடியின் அடியிலே, மழையின் நடுவிலே நின்றுகொண்டு கூலிக்கு வேலைசெய்யும் தோட்டக் காரனைப்போல் அல்லாமல் ரோமாபுரியிலே வசித்த பண்டைக் கால அடிமையைப்போல் பணியாற்றினர். அதன்மூலம்

வருமானத்தைச் சம்பாதித்தார் உன் தந்தை. யாருக்காக? உங்களைக் காப்பாற்றி பட்டதாரிகளாக்கவும், குடும்பப் புகழையும், பெருமையையும் வாங்கித்தரக் கூலித் தோட்டத்திலே, கால்கள் கடுக்க, கைகள் வலிக்க, தேனீக்கள் கொட்டப் பாடுபட்ட ஓர் ஏழைத் தகப்பனுரை மறந்து, நீ செய்து கொண்டதும் எனக்கு வருத்தமில்லை. கோவில் குளங்களை மறந்தும், குடும்ப சம்பிரதாயத்தை மறந்தும், புதிய முறையில் திருமணம் செய்து கொண்டதை நினைத்துத் தான் கண்ணீர் விட்டோம்.

ஏதோ நம் உறவினர்களில் ஒருவரையே நாடினுயே என்றுகூட எனக்கு வருத்தமில்லை. எனக்குத் தெரிவிக்காமல் ரகசியக் கல்யாணமாகச் செய்ததை நினைத்தால் வருத்தமாகத்தான் இருக்கிறது.

உன் விஷயத்தை எங்களுக்கு எழுதவேண்டாமென்று தூண்டியது, உன் உள்ளமல்ல, எல்லாவற்றையும் உதறித் தள்ளு என்று தூண்டியது உன் இளகிய உள்ளமல்ல, படைத்த பரமனையும் உதறித்தள்ளு என்று தூண்டியது, உன் உள்ளமல்ல, குடும்ப சம்பிரதாயத்தையும், தொன்று தொட்டுவரும் பழக்கத்தையும் உதறி தள்ளு என்று தூண்டியது உன் உள்ளமல்ல. அது வேறு கல்நெஞ்சம் படைத்த உள்ளமாகத்தானிருக்கவேண்டும், அப்படிப் பட்ட கல்நெஞ்சத்திலே உனக்கு எப்படி இடம் கிடைத்ததோ என்றுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

இக்கடிதம் உன் சிந்தனையை சிதறடிக்கவோ, உன் உள்ளத்தைப் புண்படுத்தவோ எழுதவில்லை. உன் வாழ்க்கையையும், சிந்தனையையும் கெடுத்தால் இன்று அது எங்களுக்குத்தான் நஷ்டம். நான் கெடுக்கவுமில்லை, புகழவுமில்லை, போற்றவுமில்லை. இதில் எதுவுமே கூருமல் இருப்பதுதான் இன்று நலம். ஆனுல் எங்களை எல்லோரும்

நகைத்திட இடம் வாய்த்ததே என்றுதான் யோசனை. சரி எல்லாம் முடிந்துவிட்டது. நல்ல மார்க்கமாக நடவுங்கள். நான்கு பேருக்கு நல்லவிதமாக நடவுங்கள். இன்னும் என்ன எழுதுவது? மளிகைக் கடையிலிருந்து அவரை நிறுத்தி விடு. வேறு வேலைக்குப் போகும்படி தூண்டு. இதைத்தான் நான் உனக்கு எழுத வேண்டுமென்று பல நாட்கள் சிந்தனை செய்தேன். இன்று எழுதிவிட்டேன். கூடுமானல் இதற்குப் பதில் எழுது.

இங்ஙனம்,
அத்தான் மூர்த்தி
ஆசி கூறுகிறேன்.

அடுத்த வாரமே பதில் வந்தது :—

பேரன்பு கொண்ட அத்தானுக்கும், அக்காளுக்கும் பல வணக்கம். நாங்கள் சுகம்.

உங்கள் அன்புமிக்க கடிதம் கண்டு, கண்ணீர் விட்டேன் கதறி அழுதேன். உங்களுக்குத் தெரிவிக்காமல் நான் திருமணம் செய்துகொண்டது குற்றம்தான். உங்களுக்குத் தெரிவிக்கப் போதுமான தைரியம் என்னிடமில்லை. மன்னிக்கவும். ஆனல் தாங்கள் கூறியதைப்போல் நான் யாரையும் மறக்கவும் இல்லை, தூஷிக்கவும் இல்லை; புறக்கணிக்கவும் இல்லை. இதில் எதுவுமே எனக்குத் தெரியாது. செய்யவும் மாட்டேன்.

ஆனல் நான் டாக்டராக இருந்தும் பட்டம் பெற்றும் ஒரு சாதாரணப் படிப்புள்ளவரைத் திருமணம் செய்து கொண்டேன் என்பதும், குடும்ப சம்பிரதாயத்தின்படி செய்யாமல், மாறுபட்ட முறையில் செய்தேன் என்பதும் யாவருக்கும் வருத்தமே. ஆனல் பெண்ணுக்கு ஓர் ஆண் துணை வேண்டும் என்பதை நினைத்துத் தான் நான் தேர்ந்தெடுத்தேனே

ஒழிய மற்றபடி ஒன்றுமில்லை. மளிகைச் சாமான் கடையில் பணியாற்றும் நம் உறவினர்களில் ஒருவர்தான் நான் திருமணம் செய்தவரும்.

என்னைப்போல் பட்டம் பெற்ற ஆண்களிடம், அன்பையும், என் சுதந்திரத்தையும் நான் எதிர்பார்க்க முடியாது என்பது என் கருத்து. மற்றவர்களின் கருத்தைப்பற்றி நமக்கேன் கவலை. 'எலிப் பொறி எலியைத் தேடிச் செல்லாது' ஆனால் நானே அவரைத் தேடிச்சென்று திருமண ஏற்பாடுகள் செய்தேன். என் கேள்விகளுக்கு அவர் முதலில் திடுக்கிட்டார். மறுத்தார்.

"படித்துப் பட்டம் பெற்ற பெண்களைத் திருமணம் செய்தால் என்னைப்போல் உள்ளவர்கள் மிகவும் கஷ்டப்பட நேரிடும். நானும் உன்னை ஒன்றும் கேட்க முடியாது. கேட்பதும் நன்றாக இராது. ஆகையால் உன்னைப்போல் பட்டம் பெற்ற ஓர் ஆணைத் தேர்ந்தெடுப்பதுதான் நலம். என்னைப் போல் சாதாரண ஒரு மங்கையையே நான் திருமணம் செய்வது எனக்கு நலம். உன் உறவினர்களுக்கு நீயும், என் உறவினர்களுக்கு நானும் விரோதிகளாக மாட்டோம்.

"பணக்காரர்களின் உறவும் வேண்டாம், அவர்களின் பகையும் வேண்டாம். இரண்டுமே ஏழைகளுக்கு ஆபத்து" என்று அவர் கூறினார்.

இவைகளைக் கேட்ட என் உள்ளம் திடுக்கிட்டது. பெண்களுக்கு வேண்டியதும், அவர்கள் விரும்புவதும் ஆண்மையும் அழகும்தான். நான் பட்டம் பெற்றவள் என்று அவர் என்னை விரும்பவில்லை. 'பெண் என்றால் பேயும் மனம் இரங்கும்' என்பதைப்போல், நான் அவரையே மணப்பது என்று தீர்மானித்தேன். ஆனால் உண்மையிலே அவர்

என்னை விரும்பவில்லை என்பது அவர் நடத்தையிலிருந்தும் அவர் என்னிடம் பேசியதிலிருந்தும் விளங்கியது. ஒரு நாள் திடீரென்று (கண்ணன்) அவரின் தாயார் எங்கள் இல்லம் வந்தார்கள்.

"கண்ணனுக்கு மூன்று நாட்களாக கடுமையான ஜுரம். நீங்கள் வந்து பார்த்து ஏதாவது மருந்து கொடுத்தால் நலமாயிருக்கும்" என்று கூறினார்கள்.

'சமயம் வந்தது காரியத்தைக் கைகூடச் செய்ய' என்று நினைத்து அவர் இல்லம் சென்றேன்.

'இது விஷ ஜுரம். சுகமடைய சுமார் மூன்று வாரங்களாவது ஆகும்! ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போவதாக இருந்தால் சொல்லுங்கள்' என்றேன்.

'வேண்டாம்மா! நீயே....?' என்று இழுத்தார்கள் அவர் தாயார்.

அன்று முதல் ஒரு நாளைக்குக் குறைந்தது நான்கு ஐந்து முறை அவரைக் கவனித்து வந்தேன். வைக்கோலின் பக்கத்தில் தீயை வைத்துவிட்டுப் பற்றாது என்றால் பற்றாமலா இருக்கும்?

நாளுக்கு நாள் என் பணி விடைகள் அவர் உள்ளத்தைக் கரைத்தன. அவர் இருதயம் திறந்தது, நான் சமயம் பார்த்து உள்ளே புகுந்தேன். ஆனால் நான் எல்லோருக்கும் சொல்லாமல் அவர் உள்ளத்திலே புகுந்தது குற்றம்தான். மன்னிக்கவும். ஆனால் நீங்கள் கூறுவதைப் போல நாகரீக முறையிலே செய்த திருமணமும் இல்லை. காதல் கல்யாணமும் இல்லை. ஆண், பெண்ணுக்குத் துணை என்ற முறையிலே தேர்ந்தெடுத்தேன்.

பட்டம் பெற்ற ஆண்களுக்குச் சொத்துடனும், செல்வத்துடனும் கற்ற அழகிகளே 'க்யூ' வரிசையில் இருக்கும்போது என்னைப்போல் கறுவண்டாகவும், கண்கள் சற்று கருடப் பார்வையாகவும் இருக்கும் ஒரு பெண்ணை பட்டம் பெற்ற ஆண்களோ அல்லது உத்தியோகம் செய்யும் ஆண்களோ விரும்புவார்களா? இவைகளை நன்ருகச் சிந்தனை செய்தேன். நான் வாழ்க்கையின் சிக்கலிலே சிக்குண்டு சிதறிப் போகாமல் வாழ்க்கை என்னும் படகிலே இறங்கியது குற்றமில்லை. ஆனல் சொல்லாமல் இறங்கியது குற்றம்தான்.

எங்களைப்போல் ஓர் ஏழை உறவினனையே நான் தேர்ந்தெடுத்தேன் என்பது குற்றமா? 'ஓர் ஏழை உறவினனையே மணந்தேன்!' என்று யாரிடமாவது கூறினல் 'நல்லதுதான்' என்று கூறுகிருர்கள். நான் எழுதுவதை எழுதிவிட்டேன். நான் செய்த தவற்றை மன்னிக்கவும். எங்களையும் தங்களுடன் சேர்த்துக் கொள்ளவும். இது என் கடைசி வேண்டுகோள்.

இங்ஙனம்,

எல்லோராலும் புறக்கணிக்கப்
பட்ட மைத்துனி
டாக்டர் பிரேமா.

கடிதத்தை வாசித்து முடித்தான் மூர்த்தி. அவன் தலையிலே பாறை ஒன்று மோதுவதைப்போல் இருந்தது. என்ன எழுதுவது; எதைக் குற்றம் என்பது. ஆனல் எப்படியோ நம் உறவினர்களில் ஒருவனைத் தேர்ந்தெடுத்தாளே அதுவே புண்ணியம் என்று அவன் வாய் முணுமுணுத்தது. அக்கடிதத்திற்குப் பின் எவ்விதக் கடிதமோ, எவ்வித விஷயங்களோ ஒன்றுமே ஒருவருக்கொருவர் தெரிந்து கொள்ளச் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை.

அச்சம்பவங்களுக்குப் பிறகு சில மாதங்களில் பர்மா, சிங்கப்பூர் போய்விட்டார்கள் என்ற வதந்தி பரவலாயிற்று.

சுமார் பத்தாண்டுகள் பறந்தோடியது. திடீரென்று "கர்ர்ர்" என்று கார் டிரைவர் பிரேக் போட்டான். காரிலிருந்தவர்கள் எல்லோரும் நடுங்கிப் போனார்கள்.

'என்னப்பா சங்கதி' என்றார் மூர்த்தி.

"ஒன்றும் இல்லை. குழந்தை ஒன்று குறுக்கே ஓடி வந்தது" என்று சர்வ சாதாரணமாய்க் கூறினார் டிரைவர்.

கவனித்து ஓட்டப்பா. குழந்தைகளெல்லாம் இருக்கின்றன" என்றார் கண்ணன்.

"இல்லிங்கோ சார்! வண்டியிலே ஒரே 'சைலன்டா'ப் போச்சென்னு யோசித்துக்குனே வந்தேன். குழந்தைங்கோ கூட பேசாமல் இருக்குங்குளே அதுதான் ஆச்சரியப் பட்டேன்" என்று கூறினார் டிரைவர்.

கார் ஒரு பங்களாவின் எதிரிலே போய் நின்றது. எல்லோரும் இறங்கி உள்ளே சென்றார்கள்.

வீட்டினுள் ஓர் அறையில் பண்டைக்காலத் தொல் காப்பியம், தேவாரம் முதலிய தமிழ் நூல்களும், மற்றொரு பக்கத்திலே ஆங்கில நூலாசிரியர்களின் வாழ்க்கை நூல்களும் இருந்தன. கண்ணன் ஆங்கிலத்திலும் தமிழிலும் நன்றாகத் தேர்ந்திருந்ததைக் கண்ட மூர்த்திக்கே சற்று அச்சம் பிறந்தது. கண்ணன் டாக்டர் பிரேமாவைத் திருமணம் செய்த பிறகு பர்மாவுக்குச் சென்றார். அங்கே பல இயந்திரங்களின் வேலைகளும் மோட்டார் ரிப்பேரும் கற்றுக்கொண்டார். அதன் மூலம் தொழில் விருத்தி செய்து கொண்டு தஞ்சையிலும், கும்பகோணத்திலும், சென்னையிலும் நிலங்களும் வீடுகளும் வாங்கி விட்டார்.

இன்று உயர்ந்த நிலையில் சுமார் பதினைந்து லாரிகளை வைத்து கும்பகோணத்திலே ஒரு பெரிய கம்பெனி முதலாளி யாகி இருப்பதைக் கண்ட மூர்த்திக்கே ஆச்சரியமாக இருந்தது.

சுமார் பத்துப் பதினைந்து நாட்கள் வரையில் கும்ப கோணத்திலே இருந்தார்கள் மூர்த்தி வீட்டார்.

ஒரு நாள் காலையில் மூர்த்தியும் அவர் வீட்டார்களும் தஞ்சைக்குப் போவதற்காகப் புறப்பட்டார்கள்.

கண்ணனும் டாக்டர் பிரேமாவும் மூர்த்தியின் கையில் ஒரு சுருள் கடிதத்தைக் கொடுத்தார்கள்.

அதில் மூர்த்தியின் பெயரிலும், கமலகாந்தியின் பெயரி லும் இரண்டு லாரிகள் ரிஜிஸ்டர் செய்து 'அன்பளிப்பாகக் கொடுத்தோம்' என்று எழுதி இருந்தது.

சற்றுத் தூரத்திலே இரண்டு லாரிகளும் தஞ்சையை நோக்கி நிறுத்தப்பட்டிருந்தன.

இரண்டு லாரிகளையும் எடுத்துக்கொண்டு மூர்த்தியும் தஞ்சை வந்து சேர்ந்தார்.

'நம் குடும்பம் சமாதானமடைய இவ்வளவு பெரிய புயலே வர வேண்டி இருந்தது' என்று அவர்களின் உள்ளத் திலே யாரோ கூறுவதைப்போல் இருந்தது.

பெரிய புயலுக்குப்பின் அக்குடும்பத்திலே ஒரு நீண்ட அமைதி ஏற்படுமென்று யாருக்குத் தெரியும்!

# 18. கரேலமயிசம்மா

கஞ்சம், கோதாவரி, கிருஷ்ணா முதலிய ஜில்லாக்களிலும், ஐதராபாத்திலும், "செஞ்சு" மலைவாசிகளை நாம் காணலாம். பொதுவாகக் கிராமப்புறங்களிலும், காடுகளிலும், மலையடிவாரங்களிலும் இவர்கள் வசிக்கிறார்கள். விசாகப்பட்டணத்திலும், ரங்கூனிலும் அதிகமான குடும்பங்கள் வசிக்கின்றன.

சந்திர வம்சத்தைச் சேர்ந்தவர்கள் என்றும், பொதுவாக, "பஞ்சபாண்டவர் பரம்பரை" என்றும் இவர்கள் தங்களைக் கூறிக் கொள்கின்றனர். சின்ன செஞ்சுலு, பெத்த செஞ்லு என இவர்களில் இருபிரிவுகள் இருக்கின்றன. ஆண்கள் கறுத்த மேனியும், தடித்த உதடுகளும், இருள் போன்று முறுக்கிய மீசையுமுடையவர்களாகக் காணப்படுகிறார்கள். சிலர் தலையின் உச்சியில் சீக்கியர்களைப்போல் கொண்டை போட்டுக்கொண்டிருக்கிறார்கள். பெண்களும் கறுத்தமேனி உடையவர்கள். நல்லஉயரமும், திடகாத்திரமும் உள்ளவர்கள். பெண்களும், ஆண்களும் காதில் பெரிய வட்ட வளையம் அணிகிறார்கள். கையிலும், கைமுண்டாவிலும் பெரிய காப்புகளையும், காலில், "கண்ணகிச் சிலம்பு" என்ற சற்றுப் பெரிய வளையத்தையும் பெண்கள் அணிந்துள்ளனர்.

இவர்களை 1896-இல் "திருட்டுத் தொழில் புரியும் ஆதிவாசிகள்" என்ற கூட்டத்தில் சேர்க்கப்பட்டாலும், இன்று இவர்கள் பல தொழில் செய்து பிழைக்கின்றனர். திருமணத்தன்று ஆடு, மாடு, மான், புலி, பன்றி ஆகிய வற்றில் எதையாவது ஒன்றைத் தங்கள் குலதெய்வத்துக் குப் பலியிடுகிருர்கள். பிறகு திருமணம் விருந்துடன் சாதாரணமாய் நடைபெறும்.

பாண்டவர்களை மலையின் சக்தி என்று வணங்குகிருர் கள். கால்நடைகளைக் காக்கும் தேவதை, கிராம தேவதை, மக்கள் தேவதை என்ற பல தெய்வங்களை வழிபட்டாலும் முக்கியமான தேவதை "கரேலமயிசம்மா" என்ற ஒரு வனதேவதை. இந்த வனதேவதை சம்பந்தப்பட்ட ஒரு வனவாசியின் காதல் கதை மிகவும் சுவாரஸ்யமானதாகும்.

நானும் ஒரு செஞ்சும் ஐதராபாத்திலிருந்து சுமார் முப்பது மைல்கள் பஸ்ஸில் ஒரு மலையடிவாரத்திற்குச் சென்ருேம். அந்த மலையடிவாரத்தில் நடந்துபோகும் பொழுது என்னுடன் வந்த செஞ்சு திடீரென்று ஒரே பெரிய பாறையின் பக்கமாகச் சென்று எதையோ கவனித்தான். அவன் பேசும் தெலுங்கு எனக்கு விளங்கு வதற்குக் கொஞ்சம் கடினமாகத்தான் இருந்தது.

"நீ எதைக் கவனிக்கிருய்?" என்று கேட்டேன்.

அவன் சொன்ன பதில் என்னை நடுங்கச் செய்தது. "இந்தக் குகைக்குள் புலியோ கரடியோ போய் இருக் கிறது. ஆனல் அதன் நகங்களின் மூலம் கவனித்தால் உள்ளே போன மிருகம் வெளியில் வரவில்லை. வெளி யில் வந்தது போன்ற கால் நகங்களின் குறிப்பு இல்லை. அம்புடன் இங்கேயே இருப்போம். வெளியில் வந்தால், என் அம்புகளுக்குத் தப்பி அது போக முடியாது,"

என்று கூறிக்கொண்டே உட்கார்ந்தான். "இது என்னடா! வேதனையாக முடிந்தது. அபாயம் எப்படி எங்கே இருக்குமோ" என்று நினைத்துக்கொண்டே நான் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டேன். என்னுடைய போக்கைக் கண்ட அவன் பக்கத்திலிருக்கும் மரத்தின் மேல் என்னை ஏறும்படி சொன்னான். அவன் சொல்லி வாய்மூடுவதற்குள் நான் மரத்தின் மேலிருந்தேன். சிறிது நேரத்திற்கெல்லாம் அவனும் மரத்தின்மேல் வந்து அம்பைக் குகைக்கு நேராகப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்தான்.

"புலி வேட்டைக்கு வரும் செஞ்சுலுகாரை, கரேலமயிசம்மா" என்ற எங்கள் வனதேவதை காக்கும். எங்களுடைய மூதாதையர் ஒருவரை அன்று ஒருபெரிய புலியினிடமிருந்து காப்பாற்றியதே அந்த வனதேவதை தான்.

"உம்! அது ஒரு பெரிய கதை" என்று கூறினான். நான் கேட்டதின் பேரில் அக்கதையைச் சொன்னான்.

"செஞ்சலுக்கள் வம்சத்தில் பண்டைக்காலத்தில் ஒரு பெரிய செல்வன் வாழ்ந்து வந்தான். அவனிடம் ஏராளமான ஆடு, மாடுகள், எருமைகள், கோழி, வாத்து முதலியவைகள் இருந்தன. அவனுக்கு ஒரு பையன் இருந்தான்; அவனுக்குச் சுமார் பத்துப் பதினைந்து வயது இருக்கும் பொழுது, அவனுடைய பெற்றோர் ஒருவர் பின் ஒருவர் இறந்துவிட்டார்கள். பெற்றோர் இறந்துவிட்டதும், பையனுக்குத் துணையாக, அவன் தாய்மாமன்மார்கள் வந்து சேர்ந்தார்கள். சில நாட்களுக்குப்பின் அந்தத் தாய்மாமன்மார்கள், சகோதரியின் சொத்துக்களையும், ஆடு மாடுகளையும் எடுத்துக்கொண்டு பையனை அனாதையாக விட்டுவிட்டுப் போய் விட்டார்கள். பையன் சிறியவனாக இருந்ததால் என்ன செய்வதென்று ஒன்றும் தோன்றாத வனாக, பலரிடம் போய்ச் சொன்னான். அவன் சொல்லை

யாரும் கேட்கவில்லை. காரணம் தாய்மாமன்மார்கள் மிகவும் மூர்க்க குணமுடையவர்கள். கடைசியாக அவன் தன் தாய்மாமன்மார்களிடமே போனுன். மாமன்மார் கள் உதவி செய்வதற்குப் பதில் நன்ருக உதைத்துத் துரத்தி விட்டார்கள். அத்துடன் அவர்கள் அவனை வீடவில்லை. இந்தப் பையன் பெரியவனுக வளர்ந்தால் தன் தகப்பன் சொத்துக்குச் சண்டை போட வருவான் என்றும் எண்ணி ஞர்கள். பையனே தன் தாய், தகப்பனை நினைத்துப் புலம்பிக்கொண்டு தன்னுடைய சொந்தக் குடிசைக்கே சென்று வெளித் திண்ணையில் உட்கார்ந்து அழுதான்.

அவனுடைய நிலையைக் கண்டு, "கரேலமயிசம்மா" என்ற எங்கள் வனதேவதை மனமிரங்கி ஒரு பாட்டியைப் போல் கொஞ்சம் ஆகாரமும், தண்ணீரும் எடுத்துக் கொண்டுவந்து கொடுத்தது. பையன் யாரோ ஒரு பாட்டி என்று நினைத்துக்கொண்டு "இன்று இந்தப் பாட்டி சோறுபோட்டார்கள். நாளைக்கு என்ன செய்வதோ? தினம் தினம் நமக்கு யார் சோறுபோடுவார்கள்" என்று எண்ணி மறுநாள் காலையில் கால் வந்த வழியே நடந் தான். கால்கள் வலி எடுக்கும் வரையில் நடந்து கடைசி யில் "பெத்தபுலிபாரு" என்ற கிராமத்தை அடைந்தான். அக்கிராமத்தில் ஒரு கிழவன் தன் மூன்று பையன்களோடும் ஒரு பெண்ணேடும் வசித்து வந்தான். இந்தப் பையன் அக்கிழவன் வீட்டுத் திண்ணையில் சுருண்டுபோய் படுத்து விட்டான். இந்தப் பையன் நிலையைக் கண்டும், கேட்டும், அக்கிழவன், "கவலைப்படாதே அப்பா! உன்னுடைய தகப்பனர் வைத்த சொத்துக்களை உன் மாமன்மார்கள் எடுத்துச்சென்ருல் போகட்டும். என்னிடம் இருக்கும் கால் நடைகளை மேய்த்துக்கொண்டு வா! நான் உன்னைக் காப்பாற்றுகிறேன்" என்று கூறினுன்.

பையன் கிழவன் வீட்டில் பண்ணைத் தொழில்களைக் கவனித்துக் கொண்டு வந்தான். அக் கிழவன் குடும்பம்

தவிர மற்றக் குடும்பங்கள் அக்காடு போலிருக்கும் கிராமத்தில் இல்லை. ஆகையால் அக்கிழவன் வீட்டிலேயே அப் பையன் பல்லாண்டுகள் பணிபுரிந்து வந்தான். பையனோ நல்ல குணம் படைத்தவன். நல்ல வாலிபப் பருவமடைந்து விட்டான். தினம் தினம் கிழவனுடைய ஆடுமாடு எருமைகளைக் காட்டுக்கு ஓட்டிக்கொண்டு போவான்.

வன தேவதையான "கரேலமயிசம்மா" வும் பாட்டி ரூபத்தில் அடிக்கடி வனத்தில் தோன்றி "சுகமாக இருக் கிறாயா?" என்று விசாரித்துப் போகும். அவள் யார் என்பதைப் பற்றிப் பையன் கவலைப்படவில்லை. யாரோ காட்டிலே வாழ்கின்ற பாட்டி என்றே நினைத்தான். திடீரென்று ஒருநாள் பையன், அக்கிழவியின் வாழ்க்கையை விசாரித்தான். அதற்கு அந்தக் கிழவி, 'தம்பி! உனக்கு அப்பா அம்மா இல்லை, ஆகையால், நான் உன்னை விசாரித்துவிட்டுப் போக, வெகுதூரத்தி லிருந்து வந்தேன்." என்று கூறினாள்.

நாட்கள், மாதங்கள், ஆண்டுகள் உருண்டோடின. அந்தப் பெத்தப் புலிபாரு கிழவனுடைய மகளும், அந்தப் பையன், வயதுடையவளாய் இருந்தாள். ஆகையால், அப்பெண்ணுக்கு இந்தப் பையனைக் கண்டால் ஒரு தனி அன்பும் பரிதாபமும் இருந்தன. அன்பும் ஆசையும் பெண் உள்ளத்தில் வளர்ந்து கடைசியில் அது காதலாக மாறியது. ஆகையால், கிழவனின் பெண் தன் தகப்பனிடம், "அப்பா! நான் நம் வீட்டில் இருக்கிற அந்த அனாதை ஆளைத் திருமணம் செய்து கொள்ளுகிறேன்" என்று கூறினாள். பிறகு இருவருக்கும் திருமணம் நடந்தது. இருவரும் இன்பமாக வாழ்க்கையை நடத்தி வந்தார்கள்.

இப்படி இருக்குங்காலையில் ஒரு நாள் இந்தப் பையன் காட்டில் ஆடுமாடுகளை மேய்த்துக் கொண்டிருக்கும்

பொழுது ஒரு கொடிய புலி வந்து, கிழவரது ஆடுமாடு களைக் கொன்று விட்டது. உடனே அந்தப் பையனுக்கு ஆத்திரமும் கோபமும் பொங்கின.

"ஆ! என் மாமனருக்கு இவ்வளவு நஷ்டம் உண்டாக்கிய அந்த வேங்கையை வேட்டையாடாமல் இருப்பதா?" என்று கூறி வில்லும், அம்பும், கோடாரியும் கையில் எடுத்தான். மாமனரும் மனைவியும் வேண்டாம் என்று தடுத்தும், "நான் வெற்றியுடன் வருவேன்" என்று கூறி வேங்கையை வேட்டையாடக் காட்டுக்குள் நுழைந்தான். காட்டில் புலியைத் தேடிப் பல இடங்களில் பல நாட்கள் அலைந்தான். கடைசியாக ஒரு சிறு குன்றின் மேல் ஒரு சிறிய குடிசை இருப்பதைக் கண்டான். அதனுள் புகை வருவதையும் கண்டான்.

"குடிசையில் யாரோ இருந்தால்தான் புகை வரும்" என்று தீர்மானித்துக் கொண்டு, குடிசையை நாடிச் சென்றான்.

அந்தக் குடிசையில் ஒரு கிழவியைக் கண்டான். அக் கிழவின் பெயர் "பேரல பெத்தம்மா?" அப்பெத்தம்மா வுக்கு இந்தப் பையனைக் கண்டதும், மிகவும் ஆச்சரியமாக இருந்தது.

"எங்கிருந்து வருகிறாய் தம்பி! இந்த இடத்தில் ஒரு கொடிய புலி இருக்கிறது. அந்தப் புலியின் பயத்தால் என் குடிசையை நாடி ஒடி எவரும் வரமாட்டார்கள். நீ மட்டும் எப்படி வந்தாய்? அது மிகவும் கொடிய புலி. யாரையும் உயிருடன் விடுவதில்லை" என்று கூறி அவனை உள்ளே அழைத்தாள்.

"ஏன் பாட்டி உங்களை மட்டும் ஒன்றும் செய்யாதோ?" என்று மிகவும் ஆச்சரியமாகக் கேட்டான்.

“நானே கிழவி; என் இறைச்சி ருசியாக இருக்காது. ஆட்டிறைச்சி சாப்பிடும் மக்கள்கூட பெண் ஆட்டின் கறியையும், கிழ ஆட்டின் கறியையும் சாப்பிட விரும்ப மாட்டார்கள் தெரியுமா? அதைப் போல என் இறைச்சி ருசி இருக்காதோ! என்னவோ! என்னை ஒன்றும் செய்வ தில்லை.” என்று பதில் கூறினாள் கிழவி. பிறகு பையனும் கிழவியும் பேசிக் கொண்டிருந்தார்கள். பையன் மூலம் எல்லாச் செய்திகளையும் கிழவி அறிந்து கொண்டாள். ஆனால் பையன் தனக்குத் திருமணமாகியிருக்கிறது என்று ஏனோ சொல்லவில்லை. பையன் தன் சரித்திரத்தைச் சொல்லி முடித்ததும் அந்தக் காட்டுப் புலியைப் பற்றிக் கூறினாள். தினந்தோறும் விடிந்ததும் எப்படியாவது ஓர் ஆளையும், ஆடுமாடுகளையும் கட்டாயம் கொன்று விடும் அந்தப் புலியைக் கொல்ல நினைத்து, வேட்டைக்கு வந்தால், அதை அந்தப் புலி எப்படியோ தெரிந்துகொண்டு, அவர் கள் பின்னலேயே அது பிரயாணம் செய்யத் தொடங்கி விடும். ஆனால் அந்தப் புலியை யார் கொன்று விடுகிருனே அந்த வீரனுக்குத் தன் பெண்ணைத் திருமணம் செய்து கொடுப்பதாகப் பக்கத்துக் காட்டில் வாழும் ஒரு பெத்த மஞ்சு பறைசாற்றியிருக்கிருர்” என்பதையும் பையனுக்கு எடுத்துக் கூறினாள்.

“பாட்டி! எனக்கு அந்தப் புலியைப்பற்றி எல்லாம் நன்ருகத் தெரியும். நான் தெரிந்துதான் காட்டில் தனித்து வந்தேன்” என்ருன் பையன்.

கிழவி புலியைப்பற்றி எவ்வளவோ சொல்லியும், பையன் கேட்டபாடில்லை. கடைசியில், “சரி! நாளைக்குத் திரும்பிப் போகிறேன் பாட்டி!” என்று கூறிக் கொஞ்சம் பணம் கொடுத்துப் பாட்டியிடம் சாப்பிட்டபின் இருவரும் அந்தக் குடிசையில் படுத்துக்கொண்டார்கள்.

முதல் ஜாமத்தில் பையன் எழுந்தான். தன் வன தேவதையாகிய, "கரேலமயிசம்மா"வை நினைத்துத் தியானம் செய்தான். பிறகு பாட்டி தூங்குவதைக் கண்டு, மெதுவாக அம்பும் வில்லும் எடுத்துக்கொண்டு வெளியில் வந்து காட்டை நோக்கிச் சென்றான். காட்டில் கருகரு வென்று இருள் மூடி இருந்தது, காட்டில் இரவில் நடப்ப தென்றால், கண்களை நன்றாக மூடிக்கொண்டவன் எப்படி நடப்பானோ அப்படித்தான இருக்கும். எதன்மேல் காலை வைக்கிறோம், எதிரில் எதன்மேல் மோதிக்கொள்கிறோம்.... என்று ஒன்றுமே தெரியாது. தட்டுத்தடுமாறி நடந்தான். கடைசியில் புலியின் வாடை அவனுடைய மூக்கில் பட்டதும், உடனே அருகில் இருந்த மரத்தின்மேல் ஏறிக்கொண்டான். பாட்டி சொன்னதைப்போல் புலி வரும்வழி இதுதான் என்று ஒரு முடிவுக்கு வந்தான். மனித வாடை பட்டதும் புலி வெளியே கிளம்பிவிட்டது. புலியும் மரத்தின் அருகில் வந்தது. பையனுடைய ஒரே அம்பில் புலி மாண்டது. பையன் இன்பத்தோடு மரத்திலிருந்து கீழே இறங்கி வந்தான். புலியின் நகங்களையும், காதுகளின் நுனியையும், வாலின் நுனியையும் அறுத்துத் தன்னுடைய தோல் பையில் போட்டுக்கொண்டு கிழவியின் குடிசைக்குள்போய் ஒன்றும் தெரியாதவன்போல் படுத்துக்கொண்டான்.

மறுநாள் காலையில் ஒரு வண்ணான், ஒரு கழுதையுடன் துணி மூட்டைகளை எடுத்துக்கொண்டு, அந்த வழியாகச் சென்றான். புலி படுத்திருப்பதைக்கண்டு, பயந்து அலறி தன் கையிலிருந்த துப்பாக்கியால் சுட்டான். ஆனால் புலி இரவிலேயே இறந்து விட்டது என்பது அவனுக்குத் தெரி யாது. புலி இறந்து விட்டது என்று அதன் அருகில் சென்று அதன் காதுகளையும், பாக்கி இருந்த நகங்களையும் மொட்டை வால் துண்டையும் கொஞ்சம் அறுத்துக் கொண்டான். இவைகளுக்கெல்லாம் நுனி எங்கே? என்பதை அவன் கவனிக்கவில்லை.

கிராமத்திற்கு ஓடிப் புலியைக் கொன்று விட்டேன். "பெத்த மஞ்சு பெண் எனக்கேதான்!" என்றான்.

பெத்த மஞ்சு மகள் வந்தாள். வண்ணான் கொண்டுவந்த பொருள்களை நன்றாகக் கவனித்தாள்.

"ஐயா! இவைகள் எல்லாம் ஏன் மொட்டை மொட்டையாக இருக்கின்றன!" என்று கிண்டலாகக் கேட்டுச் சிரித்தாள். அப்பொழுதுதான் பெத்தமன்சியும் சற்று யோசித்தான். "ஆம் இதில் ஏதோ சூது இருக்கிறது" என்று நினைத்துக் கிராமங்களுக்கெல்லாம், "தண்டோரா" போட்டு எல்லோரையும் அழைத்து ஒரு பெரிய பஞ்சாயத்தை வைத்தார். அந்தப் பஞ்சாயத்திற்கு, பேரல பெத்தம்மாவும் அந்தப் பையனை அழைத்து வந்தாள்.

பெத்தமன்சி நடந்த விஷயங்களைக் கூறினார். உடனே பையன் தன் விஷயங்களை எல்லாம் முதலிலிருந்து கூறி கடைசியில் புலி நகத்தையும், வாலையும், காதுகளையும், காட்டினான். பஞ்சாயத்தில் வந்தவர்களுக்கு கோபம்வந்து விட்டது. எல்லோரும் சேர்ந்து வண்ணானை அடித்துத் துரத்தினார்கள்.

உடனே பெத்தமன்சி தன் பெண்ணை அந்தப் பையனுக்குத் திருமணம் செய்து கொடுத்தார். பையனுடைய வீரத்தைப் பாராட்டி பெத்தமன்சி மாப்பிள்ளைக்கு ஐம்பது, அறுபது மாடுகளை அன்பளிப்பாகக் கொடுத்துவிட்டார். பையனும் பெண்ணும் பெத்தமன்சி வீட்டில் ஆனந்தமாகக் காலத்தைக் கழித்தார்கள்.

சில நாட்களுக்குப் பிறகு, 'அனாதையாகவும் திக்கில்லாதவனாகவும் வந்த அவனைக் காப்பாற்றிய பெத்த புலிபாருவில் குடி இருக்கும் பெரியவரையும், தன் அருமை முதல் மனைவியையும் காணவேண்டுமென்று தீர்மானித்தான்.

எனவே தன் இரண்டாவது மாமனுரிடம் விடைபெற்றுக் கொண்டு தன் மனைவியுடன் காட்டை நோக்கி நடந்தான்.

முதலில் பேரல பெத்தம்மாவின் குடிசைக்குச் சென்முன். காட்டில் வாழும் அந்தக் கிழவிக்குக் கொஞ்சம் பணம் கொடுத்து "பாட்டி! நான் கொஞ்சம் வேலையாகப் போகிறேன். ஆகையால் என் மனைவியையும், என் மாடுகளையும் நீ பத்திரமாகப் பார்த்துக்கொள்" என்று சொல்லிவிட்டு, தனியாகவே முதல் மனைவியைக் காணச் சென்முன்.

இந்தப் பையனுடைய வீரத்தையும், திருமணத்தையும் பற்றி முன்னுலேயே அவர்களுக்குத் தெரியும். ஆகையால் இந்தப் பையனைக் கண்டதும், "எல்லாம் எங்களுக்குத் தெரியும். மிகவும் சந்தோஷமடைந்தோம். ஆனுல் நீ ஏன் உன் புதிய மனைவியை அழைத்து வரவில்லை. நாங்கள் பார்க்கக்கூடாதா?" என்று முதல் மனைவியும், முதல் மாமனுரும் கேட்டார்கள்.

"நீங்கள் பார்க்கக்கூடாது என்ற எண்ணமில்லை. ஆனுல், இரண்டு மனைவியரும் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக்கொண்டால் என்ன செய்வது என்பதற்காகத்தான் அவளைக் காட்டிலேயே விட்டுவிட்டு வந்தேன்" என்முன் பையன்.

"ஐயோ பாவம்! காட்டிலா? என்ன அநீதி! சீதையை இராமர் காட்டில் விட்டுவிட்டு மானைத் தேடிச் சென்றதைப் போல் நீர், இந்த மானைத்தேடி வந்தீரோ. வேண்டாம்! வேண்டாம். உடனே நீர் போய், அவளையும், ஆடுமாடுகளையும் அழைத்துக்கொண்டு வரவேண்டும். நான் அவளை அன்பாகப் பார்த்துக்கொள்ளுவேன். எல்லோரும் சேர்ந்து சந்தோஷமாக வாழலாம்" என்முள் முதல் மனைவி.

இதைக் கேட்டதும் பையனுக்குச் சொல்ல வேண்டுமா? சந்தோஷத்தால் ஆகாயத்திற்கும் பூமிக்கும் குதித்தான். ஓரே ஓட்டமாகப் பறந்தான் காட்டைநோக்கி. பெத்தம்மா விடம் எல்லாவற்றையும் கூறி ஆசி வாங்கினுன். பிறகு தன் மனைவியுடன் பெத்தபுலிபாருவிற்கு வந்தான். இரண்டு மனைவிகளுடன் இன்பமாகப் பையன் வாழ்ந்து வந்தான்.

நாட்கள், மாதங்கள், ஆண்டுகள் அகன்றன. ஒருநாள் திடீரென்று முதல் மனைவி, "ஐயா உங்கள் சொந்தக் கிராமத்திற்குப் போக, உமக்கு ஆசை இல்லையா?" என்று கேட்டாள். "ஆம்! இது நல்ல யோசனைதான். ஆனால், என் குலதேவதையிடம் யோசனை கேட்டுக் கொண்டுதான் நான் போகவேண்டும்" என்று கூறி நேராகக் காட்டுக்குச் சென்று "கரேலமயிசம்மா" வை நினைத்துக் காட்டில் பிரார்த்தனை செய்தான். உடனே, "கரேலமயிசம்மா" அவன்முன் தோன்றி, "மகனே! சரி நீ உன் மனைவிமார் களையும், ஆடுமாடுகளையும் அழைத்துக்கொண்டு உன் கிராமத்திற்குப் போகலாம். ஒன்றும் பயம் வேண்டாம்" என்றுள்.

"தாயே நான் என் ஊருக்குப் போகப் பயப்படவில்லை. ஆனால் இந்த வீட்டிலிருந்து என் கிராமத்திலிருக்கும் என்னுடைய தகப்பனுர் வீட்டுக்கு ஒரு சுரங்கவழி வேண்டும். ஏனென்றுல் என் மாமன்மார்கள் என் இரண்டு மனைவியரையும், பார்க்கக்கூடாது." என்று வேண்டினுன். அப்படியே 'கரேலமயிசம்மா' என்ற வனதேவதை செய்து கொடுத்தது.

பையன் பெத்தபுலிபாருவின் தன் மாமனுரிடம் விடை பெற்றுக்கொண்டு சுரங்க வழியாகப் பிரயாணம் செய்தான். அவ்வழி நேராக அவனுடைய தகப்பனுரின் வீட்டின் கொல்லைப்பக்கத்தில் கொண்டுபோய் விட்டது. அங்கே ஒரு குகையில் தன் மனைவிமார் இருவரையும் விட்டுவிட்டு,

அவன் மட்டும் தன் வீட்டுக்குள் நுழைந்தான். தன்னுடன் கொண்டுபோன ஆடுமாடுகளைத் தன் வீட்டு வாசலில் கட்டி வைத்தான்.

இந்தப் பையனுடைய மாமன்மார்களில் ஒருவனுக்கு ஒரு பெண் இருந்தாள். அந்த மாமன், இந்தப் பையனுடைய தகப்பனாரின் வீட்டின் அருகிலேயே குடியிருந்தான். இந்த மாமனுடைய பெண்ணுக்கு, இந்தப் பையன்மேல் ஆசை. என்றைக்காவது அத்தை மகன் வந்தால், நான் திருமணம் செய்துகொள்ளுவேன் என்று அடிக்கடி தன் பெற்றோரிடம் கூறுவதுண்டு. அன்று பையனிடமிருந்து அநீதியாக அபகரித்த ஆடுமாடு எருமைகளையும், அவள் நினைவு வைத்திருந்தாள். அடிக்கடி அந்தக் கால்நடைகளின் எண்ணிக்கையைத் தன் பெற்றோரிடமும், சிற்றப்பா பெரியப்பாவிடமும் கூறி வந்தாள்.

ஒரு நாள் திடீரென்று தன்னுடைய அத்தை வீட்டு வாசலில் ஆடுமாடுகள் கட்டி இருப்பதை, அந்தப் பெண் பார்த்தாள். சரி பையன்தான் வந்திருக்கிறான் என்று நினைத்த அந்தப் பெண், உடனே குடிசைக்குள் போனாள். குடிசையில் யாருமில்லை. குடிசையில் இருக்கும் துணிமணிகளைக் கண்டதும், அந்தப் பையன்தான் வந்திருக்கிறான் என்று ஊகித்துக் கொண்டாள். பிறகு குடிசையை மெழுகிச் சுத்தம் செய்தாள். பிறகு ஒரு மூலையில் பையன் வருகைக்காகக் காத்திருந்தாள். அப்படியே அயர்ந்து தூங்கிவிட்டாள்.

பையன் காட்டிலிருந்து வேட்டையாடி பல மிருகங்களையும், விறகையும் தூக்கிக் கொண்டு வந்து இருளில் பொத்தென்று போட்டான். விறகு சுமைகளைக் கீழே போட்ட ஓசையைக் கேட்டதும், “ஐயோ அம்மா!” என்று கூச்சலிட்டாள், அந்தப் பெண். இருளில் குடிசைக்குள் கூச்சல் கேட்டதைக் கண்டு பையன் பயந்து போனான்.

“யாரம்மா நீ? இங்கே எப்பொழுது வந்தாய்? இந்த வீடு உன்னுடைய வீடா?” என்று கேட்டான்.

உடனே அந்தப் பெண், அந்தப் பையனை நன்ருகப் பார்த்தாள். “நான் உன் மாமன் மகள். நீ வந்திருக்கிருய் என்று தெரிந்து கொண்டேன். உன் வீட்டைச் சுத்தம் செய்தேன். அப்படியே தூங்கி விட்டேன்” என்று கூறிஞள்.

மாமன் மகள் என்று சொன்னதும் பையனுக்குக் கோபம் வந்தது. நன்ருகத் திட்டிஞன். பிறகு பெண் தன்னுடைய அன்பையும், தன் தியாகத்தையும், மற்ற செய்திகள் எல்லாவற்றையும் கூறிஞள். பையனுக்குக் கோபம் தணிந்து விட்டது. இருவரும் கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்தார்கள்.

“மாமா! நான் உங்களைத் திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்று காத்திருந்தேன். நம் “கரேலமயிசம்மா” வுக்குக் கூடப் பூசை வைத்தேன். அந்த வனதேவதை தான், உங்களை இங்கே கொண்டுவிட்டதோ என்னவோ தெரியாது. நான் உங்களைத் திருமணம் செய்துகொண்டால், உங்கள் அப்பன் சொத்தெல்லாம், என் தகப்பஞர் மூலம் வாங்கிவிடலாம்” என்று கூறிஞள்.

பிறகு அவளையும் திருமணம் செய்துகொள்ளச் சம்மதித்தான். அவள் உடனே தன் தகப்பஞரிடம் எல்லாச் செய்திகளையும் கூறிஞள். திருமணம் ஏற்பாடாகி விட்டது. பையனுடைய பழைய சொத்தெல்லாம் பெண் கொண்டுவந்து பையனுடைய வாசலில் கட்டிஞள். பையன் பெரிய விருந்து ஒன்று ஏற்பாடு செய்தான். அந்த விருந்தில் பழைய மனைவிகள் இருவரையும், மாமஞர்களையும் அழைத்து வந்து எல்லாச் செய்திகளையும் வந்திருந்த உறவினர்களுக்கு எடுத்துக் கூறிஞன்.

எல்லோரும் மிகவும் ஆச்சரியப்பட்டு, அவர்களை ஆசீர்வதித்தார்கள்.

பையன் அந்த மூன்று மனைவிகளுடன் நூற்றுக்கணக்கான பிள்ளைகளைப் பெற்றான். அந்த வம்சத்தில் வந்தவர்கள் தான் நாங்கள். எனவே இந்தக் கதை செஞ்சுக்கள் திருமணத்தின்போது எல்லோரும் கூடி இருக்கும் சமயம் பார்த்து எங்கள் பூசாரியால் எல்லோருக்கும் சொல்லப் படும்'' என்று அன்று என்னுடன் வந்த செஞ்சு கதையைக் கூறி முடித்தான். அவன் கதையைக் கூறி முடிப்பதற்கும் சூரியன் தலைக்குமேல் உச்சியில் வருவதற்கும் சரியாக இருந்தது.

''குகைக்குள் போன மிருகம் மற்றொரு வழியாக வெளியே போயிருக்கவேண்டும்'' என்று செஞ்சு கூறினான். பிறகு நானும் செஞ்சுவும் மரத்திலிருந்து கீழே குதித்து எங்கள் குடிசையை நோக்கி நடந்தோம்.

# 19. பிச்சைக்காரன் குடும்பம்

**கோ**த்தகிரிக்கும் கோடநாடு எஸ்டேட்டுக்கும் பஸ் போக்குவரத்து உண்டு. மக்கள் காலையில் கோடநாட்டுக்கு வேலைக்குச் சென்றால், மாலை கோத்தகிரிக்கு வந்து சேர்ந்து விடுவார்கள். அதைப்போலவே நானும் அன்று எங்கள் எஸ்டேட்டிலிருந்து என் இல்லம் வந்து சேர்ந்தேன்.

அன்று எங்கள் இல்லத்திற்கு எதிரில் யாரோ புதிதாகக் குடி புகுந்திருந்தார்கள்.

குடி வந்தவர்களின் இல்லத்தில் இரண்டு வாலிப மங்கையர்களும், ஒரு வாலிபனும் மூன்று குழந்தைகளும் இருந்தார்கள்.

அந்த வாலிபனும் அருகில் இருக்கும் ஓர் எஸ்டேட்டில் தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்கிறான்.

அவ்விரு மங்கையர்களில் இளையாள் மட்டும் காலையில் தால் காலையில் சென்றால் அவள் மாலையில்தான் வீடு திரும்புவாள்.

யார் இல்லத்திலோ, குழந்தை தூக்கும் பணியில் இருப்ப

பெரியவள் அதிகாரத்திலே இளையவளை வேலைக்கு அனுப்புகிறாள், அவனுக்கு இரண்டு மனைவியர்கள் போல்

இருக்கின்றன. அவனே கூலி வேலை செய்கிறான். அந்த லட்சணத்தில் மனைவிகள் இரண்டு என்று என் மனைவி என்னிடம் கூறினாள்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. இளையவள் வேலைக்குப் போகவில்லை. நானும் அன்று வந்த பத்திரிகைகளை வாசித்துக் கொண்டிருந்தேன்.

'இன்னுங்கோ செய்தி இன்று பத்திரிகையிலே' என்று அடுப்பங்கரையிலிருந்து கேட்டுக் கொண்டே வந்தாள் என் மனைவி.

'நல்ல செய்திதான். சென்னையிலே எலக்ஷனில் காங்கிரஸ்காரருக்கே ஓட்டுக் கிடைத்ததாம். மழையும் வருகிறதாம். சென்னைக்கு நேருவும் விஜயம் செய்து அவர் சொற்பொழிவைக் கேட்க அன்று அசாத்தியமான கூட்டமும் கூடினார்களாம். இன்னும் என்ன நல்ல செய்தி வேண்டி இருக்கு' என்று நான் கூறியதையும் கேளாமல் 'என்னமா செய்தி என்று தெருவைப் பார்த்து மற்றொரு கேள்வி கேட்டாள் என் மனைவி.

இதைக் கேட்டதும் நானும் என் பத்திரிகையை மடக்கி 'யார்?' என்று பார்த்தேன்.

வெளியில் எதிர் விட்டில் புதியதாகக் குடி வந்திருந்த மங்கையர்களில் இளையவள் நின்றிருந்தாள். அவளைக் கண்டதும் 'சரி பெரியவளுக்கும், இளையவளுக்கும் சண்டை போலிருக்கிறது. அந்த நியாயத்தைச் சொல்ல வந்தாள் போல் இருக்கிறது' என்று நினைத்தேன். ஆனால் அவள் கையில் ஒரு தபால் உறை இருந்தது. அதை என்னிடம் காண்பித்து 'அண்ணாச்சி! இதைக் கொஞ்சம் படிச்சிக் காட்றீங்களா?' வென்று அவள் கையில் இருந்த கடிதத்தை என்னிடம் காட்டினாள். அதை வாங்கி மேல் விலாசத்தை

வாசித்தேன். 'யார் பெயர் தேசம்மாள்' என்று கேட்டேன். 'நான்தான்' என்று தலையை அசைத்தாள். பிறகு கடிதத்தை வாசிக்கத் தொடங்கினேன்.

பல்லாவரம்
சென்னை.

அன்புள்ள மனைவி தேசம்மாளுக்கு நான் சுகம். பல ஆண்டுகளாக, நான் ஊருக்கு வராததால் நீயும் அண்ணாவும் என்னைச் சந்தேகிக்கலாம். சென்னையில் நான் இருப்பதால் என்மேல் நீங்களும் மற்றவர்களும் சந்தேகிப்பதில் குற்றம் ஒன்றும் இல்லை. நாளைக்கு உங்களுக்கு ரூபாய் இருபது மணியார்டர் அனுப்புகிறேன். மகனை நன்ருகப் படிக்க வைக்கவும். எனக்கு வேலை அதிகம். விடுமுறையும் கொடுக்க மறுக்கிருர்கள். உங்கள் சுகத்தைத் தெரிவிக்கவும். அண்ணியாரையும், அண்ணாவையும் நான் கேட்டதாகச் சொல்லவும்.

இங்ஙனம்,
வேலாயுதம்.

அக்கடிதத்தை வாசித்து முடித்ததும், உன்னுடைய கணவர் எங்கேயிருக்கிருர் என்று அவளைக் கேட்டேன்.

'அவர் சுமார் பத்து ஆண்டுகளுக்குமுன் எங்கள் மூத்தார் வேலைசெய்த எஸ்டேட்டில்தான் வேலை செய்தார். வருமானம் குறைவாகக் கிடைக்குது, என்று பட்டினம் போனவர்தான். பத்து வருஷமாக 'வருகிறேன்—வருகிறேன்' என்றும் 'வேலை அதிகம் அதிகம்' என்றும் கடிதம் வருகிறதே அல்லாமல் வந்தபாடில்லை. ஆனுல் பணம் மட்டும் தவருமல் ஒவ்வொரு மாதமும் பத்தோ, இருபதோ ஏதோ முடிந்ததை அனுப்புகிருர்.

அப்படியும் என் மூத்தார், ஒரு பயணம் சென்னைக்குப் போய்த்தான் வந்தாரு. இடமே தெரியாமல் திரும்பி வந்துட்டாரு. ஆனால் நாங்கள் கடிதம் எழுதினால் மட்டும் போய்ச் சேருகிறது. அதே விலாசத்தை வைத்துக் கொண்டுதான் சென்னையிலும் என் மூத்தார் போய்ப் பார்த்தார். அந்த விலாசத்திலே அவர் இல்லை என்றும் வேறு யாரோ இருப்பதாகவும் சொல்லிவிட்டார்கள். அவர் எங்களைவிட்டுப் போய்ச் சுமார் பத்து வருஷம் ஆகுது. என்னவோ என் குடியைக் கெடுக்க எவளோ என் வாழ்விலே குறுக்கே வந்தாள். அவர் எங்கேயிருந்தாலும் சுகமாக இருந்தால் போதும்.

அவர் எங்களைவிட்டுப் பிரிந்து பட்டணம் போகும் போது என் மகன் ஒரு மாதக் குழந்தை. எப்போ வரு வாரோ வரட்டும் என்று சொல்லி அதற்குமேல் ஒன்றும் சொல்ல முடியாதவளாய்த் தேம்பினாள்.

அவள் கண்ணீர் விடும்போது அதில் அவளுடைய ஓரகத்தியின் கொடுமைக்காகவும் கண்ணீர் கலந்து வந்த தாகத்தான் எனக்குத் தோன்றியது. பிறகு அக்கடிதத் திற்குப் பதில், இரண்டே வரியில் எழுதும்படி கூறியதுதான் எனக்கு வியப்பாகத் தோன்றிற்று.

'பெண்களுக்குக் கட்டாயக் கல்வி என்ற சட்டம் இருந் தால் போதாது. மூலை முடுக்கில் இருக்கும் எல்லாப் பெண்களுக்கும் எழுதப் படிக்கக் கற்பிப்பது மிகவும் முக்கியமான ஒரு சட்டமாக இருத்தல்வேண்டும். அவளுக்கே எழுதப்படிக்கத் தெரிந்திருந்தால் அவள் உள் கருத்தை யும் அன்பையும் கடிதத்தில் எழுதமுடியுமல்லவா?' என்று என் உள்ளத்திலே நினைத்தேன்.

கோத்தகிரி,
நீலகிரி ஜில்லா.

ஆசை அத்தானுக்குத் தங்கள் மனைவி தேசம்மாள் எழுதுவது: நாங்கள் சுகம். நீங்கள் ஏழைகளின்மேல்

கருணை வைத்து எங்களை வந்து பார்த்தால் பாருங்கள். உங்கள் மனம் இரங்கினால் அதுவே போதும். பணத்திற்கு மிக்க நன்றி. பதில்.

இப்படிக்கு,
மனைவி தேசம்மாள்
வணக்கம்.

இச் சம்பவங்களைக் கண்டதும் நாங்கள் முதலிலே நினைத்திருந்த சந்தேகம் ஒருவாறு விலகியது. 'பணம் மாத்திரம் அனுப்புகிறானே; ஏன் வரக்கூடாது' என்றாள் என் மனைவி.

'ஏதோ இவள் செய்த ஒரு புண்ணியந்தான்' என்றேன் நான்.

'உ-ம்! உள் மர்மம் யாருக்குத் தெரியும். சென்னைக்குச் சென்றவன் சுமார் பத்து ஆண்டுகளாக வேறு கல்யாணம் செய்யாமலா இருப்பான்.

'இவள் அவனையே நினைத்துக் கொண்டிருக்கிறாள். பாவம்! என்ன செய்வாள். இந்திய மங்கையர்களுக்கு இது சகஜம்தானே!' என்றாள் என் மனைவி.

பல ஆண்டுகள் உருண்டோடின. தேசம்மாளின் மகனும் பாடசாலைக் கல்வியை முடித்துவிட்டான். கோத்த கிரியிலேயே ஒரு தேயிலைக் கம்பெனியில் வேலையில் அமர்ந்தான். ஆனால் அவனுக்குத் தன் தகப்பனாரைப் பார்க்க வேண்டும் என்று ஆசை. அதே சிந்தனையாகப் பல மாதங்கள் வேலை செய்தான். சிந்தனைகள்தான் கண்ணனுக்கு இருந்ததே ஒழிய அவனுடைய லட்சியம் கைகூட பல மாதங்கள் சென்றன.

அன்று பல்லாவரத்திலே நல்ல மழை. எங்கே பார்த்தாலும் வீதியிலே ஒரே மண்ணும் சேறுமாக இருந்தது.

வேலவன் வெளி ஊரிலிருந்து வந்தவன். பல இடங்களைச் சுற்றிக் கடைசியில் பல்லாவரம் சென்றான்.

சென்னையில் சுற்றிப் பார்க்க வேண்டிய இடங்கள் இருந்தும், அவன் பல்லாவரத்திலே தன் ஜாகையை ஓர் ஓட்டலில் வைத்துக்கொண்டான். பல்லாவரத்தில் அன்று மாலை தெருக்களைச் சுற்றிப் பலரிடம் தங்க மாத்திரம் இரண்டு நாட்களுக்கு இடவசதி கேட்டான். பலர் மறுத்தனர். சிலர் இடமில்லையே என்றனர். கடைசியில் ஒரு வீடு. அந்த வீட்டில் ஓர் ஐயாவும், ஓர் அம்மாளும், சில குழந்தைகளும் இருந்தார்கள்.

வேலவன் தன் உள்ளத்தைச் சற்றுத் தைரியப்படுத்திக் கொண்டு மரியாதையுடன் அவர் வீட்டு வாயிலை அடைந்து, "சார்! இடம் ஏதாவது காலி இருக்குமா?" என்று கேட்டான்.

"நீ யாரப்பா? எந்த ஊர்? எங்கே வேலை பார்க்கிறாய்?" என்று கேட்டார் அவர்.

"நான் மைசூர். வேலை விஷயமாக வந்தேன். இன்னும் இரண்டு நாள் ஆகுமென்று சொல்லுகிறார்கள். அந்த இரண்டு நாட்களுக்கு வீணாக ஏன் ஓட்டலுக்குப் பணம் தரவேண்டும். யார் வீட்டிலாவது இரவு படுக்க கொஞ்சம் இடம் கொடுத்தால் போதும்" என்று மிகவும் பணிவாகக் கேட்டான்.

அந்த வீட்டில் இருக்கும் பெரியவர் சுந்தரம், அவர் வேலவன் தங்குவதற்கு வராண்டாவிலிருக்கும் சிறியதோர் அறையைக் கொடுத்தார்.

மறுநாள் மாலை சுந்தரமும் வேலவனும் தங்கள் தங்கள் ஊர் விஷயங்களையும், வேலை விஷயங்களையும் பற்றிப்

பேசிக்கொண்டிருந்தார்கள். இச்சம்பாஷணையில் வேலவனின் புத்தி நுட்பத்தையும் மரியாதையையும் கண்ட சுந்தரம் அவன்பால் அன்பு கொண்டார்.

இரண்டு நாட்களுக்கு இடமளித்தவர் ஒரு வாரம் வரையில் இருக்கும்படி வேலவனை வற்புறுத்தினர்.

வேலவன் அந்த இல்லத்திற்கு வந்த மூன்றும்நாள் மாலை சற்று வயதான ஒரு பிச்சைக்காரன் தங்கள் இல்லத்திற்குள் வருவதை வேலவன் கவனித்தான்.

சுந்தரமும்—வேலவனும் என்றும் போலவே அன்றும் பேசிக்கொண்டிருந்தார்கள். வந்த பிச்சைக்காரன் நேராக வராண்டாவின் மூலையில் திண்ணைக்கு அடியில் இருக்கும் இடத்தில் இருந்த ஒரு சிறிய மூட்டையை எடுத்துப் பிரித்து எதையோ பார்த்துக்கொண்டிருந்தான்.

வேலவன் அந்தப் பிச்சைக்காரனுக்கும் சுந்தரத்திற்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது என்று சிந்தித்தான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் அந்தப் பிச்சைக்காரன், ஒரு சிறிய பை நிறையச் சில்லறைகளைக் கொண்டுவந்து சுந்தரத்தினிடம் கொடுத்து, "சுவாமி! இதைத் தயவுசெய்து என் ஊருக்கு அனுப்பிவிடுங்கள்" என்று கூறினன்.

சுந்தரமும் "சரி அப்பா" என்று அதை வாங்கிக் கொண்டார்.

"என்ன சங்கதி, தினமும் வருகிற ஆள், ஐந்து நாட்களாகவே காணுமே" என்று பிச்சைக்காரனைப் பார்த்துக் கேட்டார் சுந்தரம்.

"என்ன சாமி செய்வது! தீபாவளி வருகிறது. அவர்களாவது புதிய துணி போட்டு சந்தோஷமாக

இருக்கட்டுமென்று நினைத்து, அதிகப் பணம் அனுப்ப வேண்டுமென்றுதான் போகாத இடமெல்லாம் போய் அலைந்து கொஞ்சம் அதிகமாகப் பணம் தேடினேன்" என்று பிச்சைக்காரன் கூறிப் பெருமூச்சு விட்டான்.

இவைகள் அனைத்தும் கேட்டுப் பக்கத்திலே உட்கார்ந் திருந்த வேலவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. எப்படிக் கேட்பது என்றும் அவன் உள்ளம் துடியாகத் துடித்துக் கொண்டிருந்தது. பிச்சைக்காரன் சற்றுத் தூரத்திலே போய் உட்கார்ந்துகொண்டு ஆழ்ந்த சிந்தனையுடன் இருப்ப தும்—இடையிடையே தன் கண்களைத் துடைத்துக் கொள்ளுவதுமாக இருந்தான். இதைச் சுந்தரமும் வேல வனும் கவனிக்காமலில்லை. "யார் இவர்?" என்று வேலவன் தன்னையும் மீறிச் சுந்தரத்தைக் கேட்டுவிட்டான்.

இது ஒரு பெரிய கதை என்று ஆரம்பித்தார்:—"இந்தப் பிச்சைக்கரார் பல ஆண்டுகளுக்கு முன்பு என்னுடைய கம்பெனியில் மின்சாரத் தொழில் செய்தவர். கல்வி இல்லா விட்டாலும் விடா முயற்சியும், ஊக்கமும் உள்ளவர். இவர் சென்னைக்கு வந்து சுமார் இரண்டு ஆண்டுகளுக்கெல்லாம் கூலி வேலையிலிருந்து மேஸ்திரியாக உயர்ந்தார்.

எலக்ட்ரிக் வேலையில் சீரியல்செட் மாட்டுவதிலும், சுவருக்குள் வயர் கொண்டு போவதிலும் மெயினில் வேலை செய்வதிலும் மிகவும் திறமை உள்ளவர்.

பாலத்தின் அடியிலும், பெரிய கட்டிடங்களின் உச்சியி லும் வேலை செய்வதாக இருந்தால் இவரைத்தான் கம்பெனி யிலும் நம்பி அனுப்புவார்கள்.

சுமார் ஐந்தாண்டுகள் நன்ருகக் கழிந்தன. ஏதோ ஒரு தீபாவளிக்காகத் தன்னுடைய ஊருக்குப் போகவும்

சித்தமாக இருந்தார். இன்னும் ஒரு வாரத்திலே ஊருக்குப் போகவேண்டியவனை விதி சுமார் பதினைந்தாண்டுகள் நிறுத்திவிட்டது. அன்று இவர் ஒரு பெரிய மாளிகை வீட்டில் மின்சார விளக்கு வேலை செய்துகொண்டிருந்தார். என்ன காரணமோ விளக்கு வெடித்தது. வெடித்த வேகத்திலே கண்ணாடித் துண்டுகள், இவர் இரு கண்களிலும் வந்து தைத்தன. உடனே அப்படியே கண் வைத்திய சாலைக்குக் கொண்டுபோகப்பட்டார். சில மாதங்கள் சிகிச்சை நடந்தன.

கம்பெனிச் செலவிலே பல டாக்டர்கள் இவனைக் கவனித்தார்கள். ஆனால் முடிவு கண் இரண்டும் தெரியாமல் போயின.

சுமார் பதினாறு ஆண்டுகளுக்கு முன் என் திருமணத்திற்கு என் இல்லம் நாடி வந்தவர் அன்றுமுதல் இன்றுவரை என் உள்ளத்திலேதான் இருக்கிறார். நானும் "போ" வென்று கூறவில்லை. இவரின் மனைவியும் ஒரு மகனும் கோத்தகிரியிலே இருக்கிறார்களாம். இவர் இங்கே பிரதி தினமும் பிச்சை எடுத்து அதைக் கொண்டுவந்து என்னிடம் கொடுப்பார். அந்தப் பணத்தை நான் சேர்த்து வைத்து ஒவ்வொரு மாதமும் இவருடைய மனைவிக்கு அனுப்புகிறேன்.

சென்ற பதினாறுண்டுகளாக இதே கஷ்டம்தான். இன்றும் இவருடைய வீட்டாருக்கு "இவர் குருடர்" என்று தெரியவே தெரியாது என்று சுந்தரம் சொல்லிக் கொண்டிருக்கும்போதே தன்னுடைய சரித்திரத்தைச் சொல்லுகிறார் என்று தெரிந்த பிச்சைக்காரர், "யாரிடம் சொல்லுகிறீர்? ஐயா யாரு?" என்று சுந்தரத்தைக் கேட்டார்.

"இவர் மைசூரிலிருந்து வேலை விஷயமாக வந்திருக்கிறார். இன்னும் இரண்டு மூன்று நாட்களில் ஊருக்குப்

போவார். உங்களை யார் என்று கேட்டார். விஷயத்தைச் சொன்னேன்'' என்றார் சுந்தரம்.

''என் கதையை என்னத்திற்குக் கேட்கவேண்டுங்கோ. இந்தப் பெரிய பட்டணத்திலேயே ''டிராமிலோ, பஸ்ஸிலோ'' சிக்கி என்றைக்காவது ஒரு நாள் மடிந்தால் போகிறது'' என்றார் பிச்சைக்காரர்.

''உங்களுடைய பெயர் என்ன?'' எந்த ஊர்? உறவினர்கள் உண்டா? என்று கேட்டான் வேலவன்.

''என்னுடைய பெயர் வேலாயுதம். என்னுடைய ஊர் கோத்தகிரி. நான் ஒரு எஸ்டேட்டில் தேயிலைத் தோட்டத்திலே வேலை செய்துகொண்டிருந்தேன். கூலிபோதாக் குறையால் சென்னையில் அதிகம் சம்பாதிக்கலாம் என்ற பேராசையால் வந்தேன். என் விதி என்னை நிராசையாக்கியது. என்னுடைய மனைவியின் பெயர் தேசம்மாள். எனக்குக் கண்ணன் என்று இருபது வயதுடைய ஒரு மகனும் உண்டு. ஆனால் சில ஆண்டுகளுக்கு முன் என்னுடைய அண்ணன் வந்தார். என்னைத் தெரிந்துகொள்ளாமலே இருந்துவிட நான் ஏற்பாடு செய்தேன். இந்த நிலையை அவர்களுக்கு ஏன் கொண்டுபோய்க் காட்ட வேண்டும். உலகிலிருப்பது கொஞ்ச நாள்; அந்தக் கொஞ்ச நாளாவது—என் மனைவி மக்கள் சுகமாகவும், சந்தோஷமாகவும் இருக்கட்டுமே—என்றுதான் நான் ஊருக்குப் போகாமல் இருக்கிறேன். என்னவோ என் மகன் கூட உன் வயது இருக்கலாம்'' என்று கூறினார். அதற்கு மேல் ஒன்றுமே கூறமுடியாமல் அவருக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது.

குழந்தையின் பாசம் முடவனுக்கும்—குருடனுக்கும் இல்லாமலா போகும்!

பிறகு அமைதி நிலவியது அங்கே. வேலவன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

வேலவனைப் பார்த்து, "விதி பார்த்தீரா, மனிதனை எந்தவகையில் பிடித்து வாட்டுகிறது?" என்றார் சுந்தரம்.

"என்ன பெரியவரே! என்னுடன் வருகிறீரா? நான் அன்பாகப் பார்த்துக்கொள்ளுகிறேன். நீர் பிச்சையே எடுக்கவேண்டாம். மாதந்தோறும் ரூபாய் பதினைந்து தருகிறேன். அதை உங்கள் மனைவிக்கு அனுப்பிவிடுங்கள். இது சத்தியம். அப்படி என்றால் உம்மைக் கவனிக்க முடியாவிட்டால் மறுபடியும் நீர் மைசூரிலிருந்து—சென்னைக்கே வந்துவிடலாம்" என்று மிகவும் உருக்கமாகவும் அன்பாகவும் எடுத்துக் கூறினான் வேலவன்.

இவைகளைக் கேட்ட சுந்தரமும், "வேலு! வேலவர் நல்லவரைப்போல் தோன்றுகிறார். மைசூரும் நல்ல ஊர் தான். அப்படிக் கஷ்டமாக உமக்கு அங்கு இருந்தால் எனக்குக் கடிதம் எழுதுங்கள். நான் கட்டாயம் பணம் அனுப்புகிறேன்" என்று தைரியம் கூறினார்.

பிச்சைக்காரனும் வேலவனும் ரயில் வண்டி ஏறித் தங்கள் ஊர்போய்ச் சேர்ந்தார்கள். ரயிலை விட்டு இறங்கியதும், "என்ன சார்! குளிர் அதிகமாக இருக்கிறதே. நீலகிரிபோல் அல்லவா குளிர் காற்று வீசுகிறது" என்று பிச்சைக்காரன் வேலவனைக் கேட்டான்.

"ஆம்! சென்னை, வெயிலுக்கு பெயர்போன இடமாச்சே. சென்னையைவிட மைசூர் சற்றுக் குளிராகத்தான் இருக்கும்" என்று சமாதானப்படுத்தினான் வேலவன். வேலவன் சென்னையை விட்டுச் சென்ற மூன்றும் நாள் சுந்தரத்திற்கு வேலவனிடமிருந்து கடிதம் வந்தது.

பிச்சைக்காரனின் செய்தியை அறிய சுந்தரம் கடிதத்தை ஆவலுடன் பிரித்தார்—

கோத்தகிரி போஸ்ட்,
நீலகிரி.

பேரன்பு கொண்ட சுந்தரம் அண்ணுவுக்கு வேலவனின் வணக்கம்.

தலைப்பைக் கண்டதும், உங்களுக்குப் புரியாது. என்னை முதலில் மன்னிக்கவும். நான் கோத்தகிரியிலிருந்துதான் வந்தேன். என் தகப்பனுரைக் காணவே இவ்விதம் கண்ணன் என்ற பெயருக்குப் பதிலாக "வேலவன்" என்றும் கோத்தகிரிக்குப் பதிலாக 'மைசூர்' என் ஊர் என்றும் பெரிய பொய் பேசினேன். அதைக் குறித்து மன்னிக்கவும்.

உங்களிடம் பிச்சைக்காரராக இருந்தவர் என் தகப்பனுர் தான். நான்தான் அவர் மகன் கண்ணன்.

உண்மையைக் கூறினுல் என்னுடைய பெரியப்பா சென்னை வந்து ஏமாந்து திரும்பிவிட்டாரே! அதே நிலை எனக்கும் ஏற்படும் என்ற அச்சத்தாலும், என் தகப்பனுரே என்னுடன் வர மறுத்தால் என்ன செய்வதென்றும் பயந்து இப்படிப் பெரிய குற்றம் செய்தேன். இதைக் குறித்து நீர் என்னை மன்னிக்க வேண்டும்.

தாங்கள் இவ்வளவு ஆண்டுகளாக என் தகப்பனுரை உபசரித்ததை நினைத்தால் அதற்கு ஈடு இவ்வுலகில் ஒன்றும் இல்லை.

என் அருமைத் தகப்பனுரும் எல்லா விஷயங்களையும் அறிந்து கொண்டார்.

இனி அவரைக் காப்பாற்றும் பொறுப்பு மகனுகிய என்னுடையது. அவர் என்றும்போலவே இன்றும் இன்பமாக இருக்கிறூர். "விதி" அவரைச் சிரிக்கவைத்து விட்டது—என்பது உண்மை.

சிரமத்திற்கு மன்னிக்கவும்.

இங்ஙனம்,
கண்ணன்.

கடிதத்தை வாசித்து முடித்ததும் சுந்தரத்தின் மனத்திலே சாந்தி நிலவியது.

# 20 இட்டலி இட்ட கண்ணீர்!

இவ்வாண்டுப் பிரயாணத்தின் முதல் 'டூரை' முடித்துக் கொண்டு தேவகோட்டையிலிருந்து திருச்சிக்கு வந்து சேர்ந்தேன்.

இரயில் நிலையத்திலிருந்து, என் சாமான்களை நானே தோளிலும், கையிலும் தூக்கிக்கொண்டு நடந்ததைச் சிலர் வேடிக்கையாகப் பார்த்தார்கள். யார் என்னைப் பார்த்து என்ன கூறிச் சிரித்தாலும், "கருமமே கண்ணாயினர்" என்று நான் நடக்கும் பழக்கமுடையவன். சிறிது தூரம் நடந்ததும் வலப்பக்கத்திலிருந்த ஓர் ஓட்டலைக் கண்டேன். "சரி! ஏதாவது சிற்றுண்டி சாப்பிடலாம்" என்று ஓட்டலின் உள்ளே நுழைந்தேன். என் சாமான்களுடன் நான் ஓட்டலுக்குச் சென்றாலும், அல்லது எங்கே சென்றாலும் எப்பொழுதும் என் சாமான்களை என் பார்வையில் வைத்துக் கொள்வதுண்டு. இவைகள் பிரயாணத்தின் மிக முக்கியமான ஒரு கட்டம். என் தோல்பையை மட்டும் நான் உட்காரும் இடத்தில் வைத்துவிட்டு கை கழுவுவதற்குக் குழாய் இருக்குமிடத்திற்குச் சென்றேன். அப்பொழுது அந்த ஓட்டலில் மேஜை துடைக்கும் ஒரு பையன், என் பையில் தொங்கிக்கொண்டிருந்த அடையாளக் கார்டைப் பார்த்துவிட்டு, (Visiting Card) "பிலோ இருதயநாத் பிலோ இருதயநாத்—யார்? அவர் யார்?" என்று வாயில் தானாகவே

பிதற்றியவாறே இங்குமங்கும் இருக்கும் மேஜைகளைத் துடைத்துக் கொண்டிருந்தான். அவன் வாயிலிருந்து ஓசை கேட்டதும் நான் திரும்பிப் பார்த்தேன். நான் அவனிடம், "தம்பி! என்ன சங்கதி—யார் பிலோ இருதயநாத் எங்கே?" என்று கேட்டேன்.

"அவர் யார் என்று தெரியவில்லை. அவருடைய பெயரை மட்டும் அவருடைய பையில் கண்டேன்" என்று கூறினான்.

'ஏன் அவரைக் காணவேண்டுமா? அந்தப் பையிலிருக்கும் 'கார்டை' வாசித்தாயா? உனக்குப் படிக்கத் தெரியுமா?' என்று கேட்டேன். ஏனென்றால் என்னுடைய கட்டுரைகள் எல்லாம் அவன் அடிக்கடி பல பத்திரிக்கையின் வாயிலாகப் படித்திருந்தால்தான் என் பெயரைக் கண்டதும் என்னைக் காணத் துடித்திருப்பான். மேலும், அந்தப் பையின் நபரைக் காணவேண்டும் என்ற அவனுடைய கண்கள் துடித்தன. 'ஆம்! எனக்குப் படிக்கத் தெரியும். நான் எட்டாம் வகுப்பு மாணவன். இவ்வாண்டுப் பரீட்சையிலும் தேறி விட்டேன். நான் பிலோ இருதயநாத்தின் பல கட்டுரைகளைப் படித்திருக்கிறேன். அவர் எழுதும் சில கட்டுரைகளை நான் வாசித்து விட்டு, அவைகள் உண்மைதானா என்று கண்டறிவதற்காகச் சில ஊர்களுக்கும் பிரயாணம் செய்திருக்கிறேன். அவர் எழுதும் கட்டுரைகளில் இருக்கும் விஷயங்கள் உண்மைதான் என்று தெரிந்த பின்புதான், நான் அவர் மேல் அன்பும் விசுவாசமும் கொண்டேன். நான் அவரைக் காண வேண்டும் என்றும் ஆசைப்பட்டேன்" என்று அவன் கூறினான்.

பிறகு நான் என்னுடைய மூட்டைகள் இருக்குமிடத்திற்கு வந்து உட்கார்ந்தேன். உடனே அவனுடைய முகம் மலர்ந்தது. எதையோ நீண்ட நாட்கள் காணாததைக்

கண்டவனுகி, நான் உட்கார்ந்திருக்கும் மேஜையைத் துடைப்பவன்போல் வந்து, ''நீங்கள் தானு அவர்?'' என்று கேட்டான்.

நான், ''ஆமாம்!'' என்று கூறினேன்.

தன்னுடைய ஒட்டல் முதலாளிக்குப் பயந்து, அவன் தூரத்தில் போய் என்னையே பார்த்துக்கொண்டு நின்ருன். அவனுடைய பார்வையில் நான் சிக்குண்டேன்.

''படிக்கும் மாணவனை இப்படி வாட்டுகிறதே'' என்று நினைத்தேன். என் மேஜையின் மேல் குனிந்து இட்டலி யைப் பிட்டேன். என் கண்ணீர் அதில் விழுந்தது. அது இட்டலியின் மேலிருக்கும் எண்ணெயில் நிற்க மன மில்லாமல் உருண்டோடி மறைந்தது. சிந்தனையுடனேயே சாப்பிட்டேன். பிறகு அவன் என் மேஜையைத் துடைப்பது போல் என் அருகில் வந்து, ''சாம்பார் வேண்டுமா?'' என்று கேட்டுக்கொண்டு நின்ருன்.

''நான் சில பத்திரிக்கைகளில் எழுதுகிறேனே. எல்லா பத்திரிக்கைகளையும் நீ எப்படி வாசிக்கிருய்?'' என்று அவனிடம் கேட்டேன்.

உங்களுடைய பெயர் எந்தெந்தப் பத்திரிக்கைகளில் இருக்கின்றனவோ? அவைகளை எல்லாம் நான் பழைய கடையிலிருந்து வாங்கி வாசிப்பதுண்டு'' என்று கூறினன்.

பிறகு நான் சிற்றுண்டி சாப்பிட்டு முடிந்ததும் ஒட்டல் முதலாளியிடம் அந்தப் பையனைக் காட்டி, ஐயா! அந்தப் பையனிடம் நான் சிறிது நேரம் பேசவேண்டும். தயவு செய்து அனுமதி கொடுக்க வேண்டும்'' என்று கேட்டேன்.

ஓ! அந்தப் பையன் உங்கள் ஊர்ப் பையனு? என்று கேட்டார் ஒட்டல் முதலாளி.

''இல்லே! இவன் படித்த பையன். எட்டாம் வகுப்புப் பரிட்சை முடிந்ததும், கோடை விடுமுறையில் சும்மா இருக்கக்கூடாது' என்று இங்கே வேலே செய்கிருனும், நான் பல பத்திரிக்கைகளில் எழுதும் கட்டுரைகளையெல்லாம் வாசித்திருக்கிருன். ஆகையால் அவனுக்கு அடுத்த மாதம் பள்ளிப் புத்தகங்கள் வாங்க ஏதாவது பணம் கொடுக்க விரும்புகிறேன் என்று கூறினேன்.

ஓட்டல் முதலாளியிடம் உத்தரவு பெற்றுப் பையனே வெளியில் அழைத்து வந்தேன். என் அருகில் வந்த பையன் மாலே மாலேயாகக் கண்ணீர்விட்டான். அவன் எதற்காக அழுதான் என்று தெரியவில்லே? ''ஏன் அழு கிருய்!'' என்று கேட்டேன்.

''என் உள்ளம் நீண்ட நாட்களாக உங்களேக் காணத் துடித்தது. இன்று இந்தக் கோலத்தில் கண்டேன். நீங்கள் பூனுவில் வாழும் மக்கள் தங்கள் ஓய்வு நேரத்தை வீணுக்கு வதில்லே என்று எழுதிய ஒரு கட்டுரையே என்னே ஓய்வு நேரத்தையும், விடுமுறை நாட்களேயும் இதைப்போல் உப யோகப்படுத்தும்படி தூண்டியது. உங்களேக் கண்டது முதல் எனக்குக் கண்களில் கண்ணீர் கலங்குகிறது என்று கூறினுன்.

பிறகு என்னுல் முடிந்த உதவியாக ஒரு சிறு தொகை யைக் கொடுத்து, ''இதற்கு அடுத்த மாதம் பள்ளிப் புத்த கங்கள் வாங்கிக்கொண்டு. நன்ருக வாசி. ஏன் கண்ணீர் விடுகிருய்?'' என்றேன்.

மனித இனம் எந்த வேலேயும் செய்யலாம். அது கேவலம் அன்று. முதலாளியிடம் சம்பளம் அதிகம் வேண்டும் என்று வாதாடிக் கேள். ஆனுல் அதே நேரத்தில் முதலாளி நன்ருக வாழவேண்டும்'' என்று ஆண்டவனே வணங்கு.

முதலாளிகள் வாழ்ந்தால்தான் நாம் வாழ முடியும். எது நியாயம் என்று ஆண்டவனுக்குப் பொதுவாக உன் உள்ளம் சொல்லுகிறதோ அதைச் செய்ய விரும்பு. "வயதில் பெரியவர்களை அறிவாளிகளாக மதித்து, அவர்களுடைய யோசனையைக் கேட்டு நடந்தால், நாம் வாழ்க்கையில் வெற்றி பெறமுடியும்" என்று நம் நேரு கூறிச் சென்றார்.

ஓரிடத்தில் வேலைசெய்ய விருப்பமில்லை என்றால் நல்ல வனைப்போல் அந்த இடத்தில் வேலையை விட்டுவிட்டு மற்றோர் இடத்திற்கு வேலைக்குப் போ! யாரிடமும் வீண் வருத்தமோ விரோதமோ வைத்துக் கொள்ள வேண்டாம். நீ செய்யும் வேலைகள் சுத்தமாக உனக்கு இருந்தால் அது எல் லோருக்கும் சுத்தமாகப் படும். இதுதான் அன்று மேலை நாட்டில் ஆபிரகாம் லிங்கன் கூறியசெய்தி.

உன் வேலைகளைக் கண்டோ, உன்னைக் கண்டோ மற்ற வர்கள் பொறுமையாகப் பேசுவார்கள். தூற்றவும் செய் வார்கள். அவர்களைப் 'பக்தர்' என்றும், 'மேதாவிகள்' என்றும், 'அறிஞர்' என்றும் மக்கள் கூறுவார்கள். அப்படிப் பட்டவர்களைக் கண்டால் தலைவணங்கித் தூரத்தில்போய் விடு. அவர்கள் உன்னைக் கண்டு சிரிப்பார்கள். இவைகள் எல்லாம் நீ முன்னேற்றமடைவதற்கு வழிகாட்டிகள் என்று நீ கருத வேண்டும். இதுதான் உனக்குக் கொடுக்கும் 'செல்வம்' என்று கூறினேன்.

முதலாளியின் முகமும் பையனின் முகமும் மலர்ந்தன. பையன் எதையோ கண்டு வெற்றி அடைந்தவன் போல் கம்பீரமாக நடந்து உள்ளே சென்றான்.

# 21. அட வெளவாலே!

இன்று நூற்றுக் கணக்கான பத்திரிகைகளும் நூல் களும் மலிந்து கிடக்கின்றன. ஆனல் அவைகளில் சில நிமிஷத்தில் எறிந்து விடப்படுபவை. சில நாட் கணக்கில் வைக்கப்படுபவை சில ஆண்டுக் கணக்கில் வைக்கப்படு பவை. இன்னும் சில உலகம் இருக்கும் வரையில் வைக்கப் படுபவை.

ஆனல், பண்டைக்காலத்தில் கதைப் புத்தகங்கள் மிகச் சிலவே இருந்தன. பத்திரிகைகளே கிடையா. ஆனல் நல்ல புத்தி புகட்டும் பல கதைகள் ஒவ்வொன்றையும் தக்க காரணங்களுடன் நம் பாட்டிமார்கள் இரவில் தங்கள் பேரன் மார்களுக்கும் பேத்திமார்களுக்கும் கூறிவந்தார்கள். அங் ஙனம் அன்று கூறியபல கதைகள் இன்று சிறந்தவைகளாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. தென்னிந்தியாவில் உள்ள பூர்வீகக் குடிமக்களில் 'கசவர்' என்று ஒரு ஜாதியினர் இருக்கிருர்கள். இவர்களைப்பற்றி பலருக்கு அதிகமாகத் தெரியாது. இந்தியாவிலேயே, ஏன்? உலகிலேயே என்றும் கூறலாம். மிகவும் குறைந்த ஜனத்தொகையை உடைய இனமக்கள் இவர்கள். நாற்பதுகோடி மக்கள் வாழும் நமது இந்தியாவில் கசவர்களின் எண்ணிக்கை 423தான் என்ருல் நமக்கு ஆச்சரியமாக இருக்கிறதல்லவா?

இவர்கள் மலையடிவாரத்தில் சதுப்பு நிலங்களில் வாழு கிறார்கள். 'மலேரியா' என்ற கொடிய நோயின் உற்பத்தி ஸ்தானமான இந்தச் சதுப்பு நிலங்களை அடுத்து வாழும் கசவர்களின் பணி என்னவென்பதை அறிந்தால் நமக்கு இன்னும் வியப்பாக இருக்கும். யானைகளின் கழிவுப்பொருள் களைச் சேகரித்துச் சேமித்து வைப்பதுதான் இவர்களது வேலை. அந்தக் கழிவுப் பொருள்களுக்கு நல்ல கிராக்கி உண்டு. எனவே அடிக்கடி கழிவுப்பொருள்களை ஏற்றிச் செல்ல லாரிகள் இந்தப் பிராந்தியத்துக்கு, முக்கியமாக இந்தக் கசவர்களைத் தேடிச் செல்லும். யானைகள் இறந்து விட்டால் அச்செய்தியை காட்டிலாகா அதிகாரிகளிடம் தெரி விப்பதும்கூட இந்தக் கசவர்களின் கடமைதானும். இந்தக் கசவர்களைச் சந்தித்து அவர்களுடைய பழக்கவழக்கங்களை அறிந்து வரவேண்டுமென்ற ஆவல் ஏற்பட்டது எனக்கு. ஆனால் உதகையில் இவர்கள் எந்தப் பிராந்தியத்தில் வாழ் கிறார்கள் என்பது எனக்கு நிச்சயமாக ஒருவரும் கூறவில்லை. சில அதிகாரிகளும் சரியாகக் கூறவில்லை. சிலருக்குக் 'கசவர்' என்று ஓர் இனமக்கள் உலகில் வாழ்கிறார்களா? என்பதே சந்தேகமாக இருந்தது. எப்படியும் அவர்களது இருப் பிடத்தை அறிந்து, போய்ப் பார்த்துவிடுவது என்ற உறுதி யுடன் பலரிடம் விசாரித்து ஒருவாறாக அவர்கள் வாழும் மலைச்சாரல் பகுதியை நிச்சயப்படுத்திக்கொண்டேன்.

மறுநாளே யானைகளும், மலைப்பாம்புகளும் வாழும் பயங்கரமான காட்டுப் பிரதேசத்தில் வாழும் கசவர்களைக் கண்டு அளவளாவக் கிளம்பிவிட்டேன்.

மைசூரிலிருந்து சுமார் எழுபது மைல் தூரத்தில் வாழும் கசவர்களின் குடிசையில் சில நாட்கள் தங்கினேன். அந்தச் சமயத்தில் கசவர்களின் மூப்பன் கூறிய ஒரு கதையைக் கேட்டு ஆழ்ந்த சிந்தனையில் இருந்தேன். இக்கதையை இவர்கள் தலைமுறை தலைமுறையாகக் கூறுகிறார்களாம்.

''இக்காட்டில் காடர்களாக வாழும் இவர்களுக்கு இக் கதை எங்ஙனம் தெரிந்தது? காடர்களாக வாழும் இவர்கள் ஒரு காலத்தில் நல்ல நிலையில் ஊராளும் மன்னர்களின் பரம்பரையினராக இருந்திருக்க வேண்டும். அங்ஙனம் இல்லாவிட்டால் ''சான்றோர், 'குறவர்' தேயம் நன்றே'' என்ற பொன்மொழி அன்று பிறந்திருக்காது அல்லவா? மேலும் கொடுங்கோல் மன்னர்களுக்கு அஞ்சிக் கடும் புலி வாழும் காட்டில் அவர்களும் வாழ வந்திருக்கவேண்டும்'' என்ற சிந்தனையில் இருந்தேன்.

''என்ன ஆழ்ந்த சிந்தனையில் இருக்கிறீர்கள். நான் கூறிய கதையில் ஏதாகிலும் குற்றம் இருக்கிறதா? அல்லது இதே கதையைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அப்படிக் கேள்விப்பட்டாலும் இது எங்களுடைய பரம்பரையின் கதை என்பதில் ஐயமில்லை. இக்கதையை எங்கள் பாட்டனுருக்குப் பாட்டன் காலத்திலிருந்து வாழையடி வாழையாகத் தங்கள் குழந்தைகளுக்குச் சொல்லிக்கொண்டு வந்திருக்கின்றனர்'' என்று கசவன் மூப்பன் கூறினுன்; மூப்பன் கூறிய கதை :

''பல்லாண்டுகளுக்கு முன் பறவைகளுக்கும், விலங்கு களுக்கும் கடுமையான போர் இக்காட்டில் நடந்ததாம். அப்போரில் வௌவால்கள் நடுநிலைமை வகித்தனவாம். தங்களையும் தம் இருப்பிடத்தையும் பாதுகாத்துக்கொள்ள எண்ணிய வௌவால்கள் ஒரு யுக்தி செய்தன. ஒரு சார்பில் போர் வெகு மும்முரமாக நடந்தது. எங்கு பார்த்தாலும் குருதி வெள்ளம் ஓடியது. கண்ணுக்கு எட்டிய தூரமெல் லாம் தலைகள் உருளும் காட்சியாகவே இருந்தனவாம்.

காலையில் நடைபெற்ற போரில் பறவைகளுக்குத்தான் வெற்றி என்று தோன்றியதாம். உடனே வௌவால்கள், ''தாங்களும் பறவைகளின் இனத்தைச் சேர்ந்தவை'' என்று எண்ணிப் பறவைகளுக்காகப் பாடுபடுவதைப்போல் போர்

செய்யும் பறவைகளுக்கு ஊக்கமளித்துத் தாங்களும் சிறகடித்துக்கொண்டு சந்தோஷப்பட்டனவாம்.

போர்க்களத்தில் சிறிது நேரத்திற்குள் விலங்குகளுக்கு வெற்றி கிடைப்பதுபோல் காணப்பட்டது. ஆயிரக்கணக்கான பறவைகள் சிறகுகள் உடைந்து இந்த மலைச்சாரலில் மடிந்தனவாம். இக்காட்சியைக் கண்ட வௌவால்கள் உடனே தாங்களும் விலங்குகளுடன் கலந்துகொண்டு சந்தோஷப்பட்டனவாம்.

"நாங்களும் பூர்வீக ஜென்மத்தில் சுண்டெலியின் வம்சத்தைச் சேர்ந்தவர்கள். ஆனால் பாவம் செய்ததால் இன்று இங்ஙனம் கறுப்பாகப் படைத்தார் கடவுள்" என்று விலங்குகளுக்கும் நம்பிக்கை வரும்படி பேசினவாம். கடைசியில், "ஆம்" என்று விலங்குகளும் ஆமோதித்தனவாம். ஆனால் முடிவில் பறவைகளுக்கே வெற்றி ஏற்பட்டதாம்.

அப்பொழுது வௌவால் கூட்டம் தங்களுடைய உயிர்களைக் காப்பாற்றிக்கொள்ளத் தங்கள் தோழர்களுடன், சிக்காமல் ஓட்டம் பிடித்தனவாம். அன்றுமுதல் வௌவால்கள் மானத்திற்காக மற்றப் பறவைகள் இரை தேடும் பகல் காலங்களில் குகைகளிலும் மரப் பொந்துகளிலும் பதுங்கிக் கொண்டு; பகற் பறவைகள் மாலையில் தங்கள் கூடுகளை அடைந்ததும், தங்கள் இரை தேடித் தின்னக் கிளம்புகின்றன" என்று தனக்குத் தெரிந்த தமிழில் மூப்பன் கூறினான்.

உண்மையில் இக்கதை சரியோ, தப்போ தெரியாது. ஆனால் இக்கதை உண்மையாக இருந்திருக்கலாமென்று கூறுவதற்கு அன்றுமுதல் இன்றுவரையில் உலகில் வௌவாலைப் போலிருந்து காரியங்களைச் செய்யும் மானிடருக்கு "அட வௌவாலே" என்றும் சரியான வௌவால்

வேலை செய்கிறான்!'' என்றும் பழமொழிகள் கூறுவதை நாம் இன்றும் கேள்விப்படுகிறோம் அல்லவா?

இதைப் போலுள்ள கதைகள் நம் நாட்டில்தான் இருக்கின்றனவென்று நம்மை இழிவுப்படுத்திக் கூறுகிறார்கள் பலர். தற்காலத்திலே மலிந்து கிடக்கின்றன. ஆனால் மேல் நாடுகளிலும் கீழ்நாடுகளில் இதைவிட மோசமான கதைகள் வழங்குகின்றன.

''பிலிப்பைன் தீவுகளில் படகர் (நீலகிரி படகர் அல்ல.) என்ற ஒரு வகை ஆதிவாசிகள் வசிக்கிறார்கள். அவர்கள் தங்கள் சாவுக்கே ஒரு காரணம் கூறுகிறார்கள்.

''முன்னொரு காலத்தில் இவர்களில் சிலர் ஒரு பெரிய சுறுமீனைப் பிடித்தார்களாம். அதைப் பிணத்தைப்போல் வெள்ளைத் துணியில் மூடி, தூக்கிக் கொண்டுபோய், கடவுளின்முன் வைத்து 'பிணம்' என்று ஏமாற்றினார்களாம்.

கடவுள் கோபம் கொண்டு, ''இனிமேல் உங்கள் சமூகத்தில் சாவு உண்டாகக் கடவது'' என்று சாபம் கொடுத்தாராம். அதனால்தான் இப்பொழுது சாவு ஏற்படுகிறதாம்.

ஆஸ்திரேலியாவில் வசிக்கும் மலை ஜாதியார்கள் சாவு ஏற்படுவதற்கு மற்றொரு காரணம் கூறுகிறார்கள்.

ஒரு காலத்தில் அவர்களுடைய நாட்டில் பெரிய மரம் ஒன்று வளர்ந்திருந்ததாம். அதன் அருகில் யாரும் போக மாட்டார்களாம். அந்த மரத்தில் ஒரு வௌவால் வாழ்ந்ததாம். ஒரு நாள் ஒரு மலைஜாதிப் பெண் கோடாரியால் அந்த மரத்தை வெட்டினாளாம். உடனே மரத்திலிருந்து

வெளவால் பறந்தோடியதாம். அங்ஙனம் வெளவாலை பகலில் ஓட்டியதால்தான், அவர்களுடைய சமுதாயத்தில் சாவு வர ஆரம்பித்ததாம்.

இப்படிப் பல நாடுகளிலும் பல மூடநம்பிக்கை கொண்ட மக்கள் ஒரு காலத்தில் இருந்தார்கள். ஆனால் சில நாடுகளில் வழங்கப்படும் கதைகள், கட்டுரைகள் முதலியவைகளைக் கேட்கும்போது, நம் நாடு ஆயிரம் மடங்கு உயர்ந்த நிலையில் அன்றும் இன்றும் இருக்கிறது என்று கூறலாம்.

இதைப்போல் பல கதைகள் காடர்களிடம் காட்டில் மறைந்து இருக்கின்றன. அவைகளையும், அவர்களையும் புறக்கணித்தது போதும் என்றுதானோ என்னவோ இருபதாவது நூற்றாண்டில் மலைவாழ் மக்களுக்கு என்று சில தொகைகளை ஒதுக்கி வைத்திருக்கின்றனர் போலும்.

# 22. முசுப்பில் செல்வம்

பாம்பைப் போல் வளைந்து வளைந்து காடுகளின் மத்தியில் புகுந்து ரோட்டின்மேல் ஏறி ஓடுகிறது எங்கள் ஜீப் கார்.

ஆங்காங்கே 'புர்' என்ற இரைச்சலுடன் பாடிக் கொண்டு மேடேறும்போது, ஜீப் தவறினல் நாம் கீழே விழுவோமே என்ற அச்சம் ஒரு பக்கம்.

வழியில் நீரருவிகள் காணும் இடங்களிலெல்லாம் 'ஜீப்' தாகத்தைத் தீர்த்துக்கொண்டு ஓடும் காட்சியைக் காணும் போது, உள்ளத்திலே அச்சம் உண்டாயிற்று. ஏனென்ருல், நீரருவிகளின் அருகில் தாகத்தைத் தீர்த்துக் கொள்ள, விலங்குகளிருந்தால் என்ன செய்வது என்ற அச்சம் மற்றொரு பக்கம் வாட்டுகிறது.

தலை நிமிர்ந்து நிற்கும் மலை ஒன்றை ஒட்டினுற்போல் சுற்றிக்கொண்டு நிதானமாகத்தான் எங்கள் 'ஜீப்' ஓடியது. ஒருபுறத்தில் கரும் பாறைகளைக் கண்டால் காட்டு யானைகளின் முதுகுப்பாகமோவென்று நடுக்கம் உண் டாவது சர்வ சாதாரணமாக இருந்தது.

எங்களுக்குத் தைரியமும் உற்சாகமும் ஊட்டி அழைத்துச் சென்ருன் பில்லர் வகுப்பைச் சேர்ந்த ஒருவன்.

மாலை நேரத்தில் சாத்பூரா மலைச்சாரலில் வாழும் பில்லர்களுடைய குடிசைகளுக்குப்போய்ச் சேர்ந்தோம்.

சாத்பூரா மலைச் சாரலில், பில்லர்களுடன் ஐந்து நாட்கள் தங்கினோம். அவர்களுடைய பழக்க வழக்கங்கள் சிக்கனம், சீர்திருத்தம் முதலியவைகளைக் கண்டும் கேட்டும் ஆனந்தமடைந்தோம்.

அங்ஙனம் நிலவுக் காலங்களில் கேட்ட அவர்களுடைய குலக்கதைகளுள் ஒன்று இது.

'ஐந்து பில்லர்கள் கூடி ஒரு நாள் தேவலோகத்தில் பரமசிவனைக் காணச் சென்றார்கள். பார்வதி அவர்களைக் கண்டதும் தன் கணவனிடம், 'என்னுடைய ஐந்து சகோகரர் களும் தங்களிடம் என்னுடைய திருமணத்திற்காகச் சீர் வரிசை கேட்க வந்துள்ளார்கள்' என்று பணிவுடன் கூறினாள். பரமசிவனும் அவர்களை அன்பாக வரவேற்று விருந்தளித்தார்.

என்னிடம் என் எருதும், கையிலிருக்கும் 'கமண்டலமும் தவிர வேறொன்றுமில்லையே' என்று கூறினார். ஆனால் பரமசிவன் வந்தவர்களை வெறும் கையுடன் அனுப்ப மனம் இல்லாதவராய், அவர்கள் செல்லும் வழியில் வெள்ளி முக்காலியொன்று அவர்கள் கண்ணுக்குத் தோன்றும்படி செய்தார். ஆனால் அந்த முக்காலி, மகத்துவம் மிகுந்ததா கையால், அவர்கள் கண்ணால் அதைக் காண முடியாமல் போயிற்று. அவர்கள் முக்காலியைக் கொண்டு வந்திருந் தால், அவர், தம் சந்ததியார்கள் உயர்ந்தவர்களாக உலகிலே வாழ நேர்ந்திருக்கும். ஆனால் பார்வதி அவர் களை வெறுங் கையுடன் அனுப்பாமல், 'இந்த மாடுகளை ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வந்தால் அதன் முசுப்பின் செல்வத்தைப் பெறலாம்' என்று கூறி சில மாடுகளைக் கொடுத்து அனுப்பினாள்.

'முசுப்பில் செல்வம்' என்று கூறியதன் பொருளை நன்ருக உணராத பில்லர்கள் பிழையாகப் பொருள் செய்துகொண்டார்கள். தங்களுடைய இல்லத்திற்குச் சென்ருர்கள்.

இந்த ஐந்து சகோதரர்களில் ஒருவன், 'மாட்டைக் கொன்று அதன் முசுப்பிலிருக்கும் செல்வத்தைப் பங்கிட்டுக் கொள்ளலாம்' என்று கூறிஞன். ஆனல் அதற்கு மற்றவர் கள் சம்மதிக்கவில்லை.

'பொய்யுடை ஒருவன் சொல்
  வன்மையிஞல்
மெய் போலும்மே மெய்
  போலும்மே'

என்பதைப் போல் கடைசியில் அவனுடைய பேச்சுச் சாமர்த்தியத்தால் எல்லோரையும் ஒப்புக்கொள்ளும்படி செய்துவிட்டான்.

பிறகு அவர்கள் எருதைக் கொலை செய்து பார்த்ததில் ஒருவிதமான செல்வமும் இல்லை—என்று கண்டனர். உடனே பார்வதி அவர்கள் முன் தோன்றி, 'மாட்டை ஏரில் கட்டி, நிலத்தை நல்ல முறையில் உழுதால் அதன் மூலம் பூமாதேவி உங்கள் குலத்திற்குச் செல்வத்தைக் கொடுப்பாள்' என்னும் கருத்தில் கூறியதை—'அர்த்தத்தை அனர்த்தமாக்கி—எருதைக் கொலை செய்தீர்களே, இவ்வளவு மெளட்டீகமாக நீங்கள் அந்தச் சாதுவான பிராணியைக் கொலை செய்ததால், சகோதரியாகிய என் முகத்தை இனிக் காணமாட்டீர்கள்' என்று கூறி வெறுப்புடன் சென்ருள். அவ்விதமான தெய்வீக மாட்டைக் கொன்றதால், எங்கள் குடும்பத்தார்கள் அன்றும், இன்றும் என்றும் இன்பமாக வாழ்க்கையை நடத்த முடியவில்லை. எங்களை மற்ற அதிவாசிகளும் தங்களுடன் சேர்ப்பதில்லை. இந்தக்

காரணங்களால்தான் நாங்கள் மற்றவர்களைக் காட்டிலும் பரம ஏழைகளாக அன்றும் இன்றும் காட்டிலும் மலையிலும் மறைந்து வாழ்கிறோம்' என்று பில்லவ இனத்தைச் சேர்ந்த பெரியார் ரசமாகத் தங்கள் குலக் கதையைக் கூறினார்.

இதைப்போல் பல கதைகளைக் காட்டில் காடர்களிடம் பௌர்ணமியில் உட்கார்ந்து கேட்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்ததே என்ற சந்தோஷமும் ஆனால் எல்லாக் கதைகளையும் எழுதச் சரியான பக்கச் சான்றுகள் இன்னும் கிடைக்கவில்லையே என்ற வருத்தமும் என் உள்ளத்தில் அடிக்கடி தோன்றுவதுண்டு.

# 23. விதி விளையாடியது

"விளையாட்டில் சறுக்கிவிழுந்தால் இன்பம். ஆனால் வாழ்க்கையில் சறுக்கிவிழுந்தால் துன்பம்" என்று சொல்லு வார்கள். சுமார் பத்து பதினைந்து ஆண்டுகளுக்கு முன் என்னை ஒருவர் சென்னையில் ஒரு கோவிலில் சந்தித்தார். அவர் என்னிடம், "பசிக்கிறது" ஏதாவது வாங்கிக் கொடுத் தால் போதும். நான் பிச்சைக்காரன் அல்ல" என்று கூறினார்.

பிச்சைக்காரர்களைப் பற்றி ஆராய்ச்சி செய்யும் எனக்கு ஏதாவது செய்தி கிடைக்கும் என்று ஆவலோடு இருந் தேன். நான் பல ஊர்கள் சுற்றி அனுபவமுள்ளவனாதலால் அவர் பேசும் வார்த்தைகளைக் கொண்டு அவர் இந்தியா வைச் சேர்ந்தவர் அல்லர்! என்று தெரிந்துகொண்டேன். ஆகையால் நான் அவரை அழைத்துக்கொண்டு போய் ஓட்டலில் சிற்றுண்டியும் காப்பியும் வாங்கிக்கொடுத்தேன்.

"தாங்கள் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர் அல்லர். மேலும் தாங்கள் இந்தியரே இல்லை என்று சந்தேகப்படு கிறேன். தங்கள் சொந்த ஊர் எது என்று தெரிந்து கொள்ளலாமா?" என்று கேட்டேன்.

"என் குறையைத் தாங்கள் கேட்டால் கண்ணீர் விடு வீர்கள். நான் பர்மாவில் சொந்தமாகக் கம்பெனி வைத்

திருந்தேன். நல்ல திரண்ட சொத்துடையவன். பர்மா சண்டைக்கு இரண்டு மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு என் மனைவியையும் என் ஒரே குழந்தையையும் என் நண்பர்களுடன் எங்கள் சொந்த 'நாடாகிய இந்தியாவுக்கு அனுப்பினேன். இந்தியாவுக்கு வந்தவர்கள், கொஞ்ச காலம் வரையில் கல்கத்தாவில் வாழ்ந்தார்கள். நான் பர்மாவிலிருந்து மாதாமாதம் கல்கத்தாவுக்குப் பணம் அனுப்பிக் கொண்டிருந்தேன். சிறிது காலத்திற்குப்பின் சீனர்களின் ஆதிக்கம் தொல்லையாக இருந்தது. ஆகையால் பணம் அனுப்பமுடியவில்லை. மேலும் என் சொத்துக்களை எல்லாம் சீனர்கள் அபகரித்துக் கொண்டதால் நான் என் குடும்பத்திற்கு உதவமுடியவில்லை. சீனர்கள் என்மேல் சந்தேகப்பட்டதால் என்னைக் கொல்லாமல் கொன்று கொண்டிருந்தார்கள். இந்த நிலையில் சுமார் 2 ஆண்டுகளுக்குப்பின் வியாதியால் படுக்கையில் படுத்துவிட்டேன். நான் வியாதியால் படுத்திருக்கும்பொழுது ஆண்டவனுடைய அருளால் சீன கம்யூனிஸ்ட்டுகளில் பல கொள்கைகளை நான் தெரிந்து கொள்ளமுடிந்தது!

வியாதிலிருந்து சுகமானதும் நான் நடக்கக்கூட சக்தி இல்லாமல் ஆஸ்பத்திரியிலிருந்து வெளியில் வந்தேன். அந்த நிலையைக் கண்டதும் என்மேல் பரிதாபப்பட்டு எனக்குத் தெரிந்த பலர் உதவி செய்தார்கள்.

நான் எப்படியோ நடந்தும் படகில் ஏறியும் தட்டுத் தடுமாறி இந்திய எல்லையை வந்து சேர்ந்தேன். இந்தியாவை அடைவதற்குள் ஆண்டுகள் பத்து ஓடிவிட்டன. என் மனைவி மக்களோடு கடிதப் போக்குவரத்தும் நின்றுவிட்டது. பத்தாண்டுகளுக்குப்பின் கல்கத்தாவுக்கு வந்து அவர்களைப் பற்றிக் கேட்டேன். அந்த விலாசத்தில் இருந்தவர்கள், "அவர்கள் தமிழர்களாக இருந்ததால், கல்கத்தாவிலிருந்து தமிழ்நாட்டுக்குப் போய் விட்டார்கள்"

என்று கூறினர்கள். நான் கடந்த இரண்டு ஆண்டு களாகப் பல கோவில்களிலும் பல இடங்களிலும் அலைந்து கொண்டிருக்கிறேன். கடைசியில் சென்னைக்கு வந்தேன். இங்கே எப்பகுதியில் நான் அவர்களைத் தேட முடியும்? தேடினேன். தேடிக்கொண்டேதான் இருக்கிறேன். நானும் என் மனைவி மக்களும் பிரிந்து சுமார் பதினைந் தாண்டுகள் ஆகின்றன. அவள் உயிருடன் இருக்கிருளோ? அல்லது?'' என்று கூறும்பொழுதே அவர் தேம்பித் தேம்பி அழுதார். அச் சோக சம்பவத்தைக் கேட்டதும் எனக்கு ''டக்''கென்று ஒரு யோசனை தோன்றியது. ஏனென்ருல் அவர் கிறிஸ்தவர்.

''நீங்கள் ஒன்று செய்யலாம். கிறிஸ்தவக் கோவில் திருவிழாக்களில் நீங்கள் கலந்துகொண்டால், ஒரு வேளை உங்கள் மனைவியையும் மக்களையும் சந்திக்கலாம்'' என்று கூறினேன். பிறகு நாங்கள் ஓட்டலிலிருந்து பிரிந்து விட்டோம்.

மாதங்கள் ஆண்டுகள் அகன்றன. சில மாதங்களுக்கு முன்ருல் அவரை நான் நாகையில், வேளாங்கண்ணி கோவிலில் சந்தித்தேன்.

''சில ஆண்டுகளுக்குமுன் நீங்கள் பர்மாவிலிருந்து வந்தவர் என்று என்னிடம் சொன்னதுண்டா?'' என்று கேட்டேன்.

''நீங்கள் பத்திரிகையில் கட்டுரை எழுத்தாளரா?'' என்று கேட்டார்.

''ஆமாம்!'' என்றேன்.

''உங்கள் பெயர் எனக்கு நினைவு இல்லை. ஆனுல் மதராசில் ஒரு ஓட்டலில் சாப்பிட்டோம் அல்லவா?'' என்று கூறினர்.

"ஆமாம்! என்று சொல்லி அன்று அவர் கூறிய செய்தி களைக் கூறி, உங்கள் மனைவி மக்களை இன்னும் கண்டுபிடிக்க வில்லையா?" என்று கேட்டேன்.

"ஆம்! சில ஆண்டுகளுக்கு முன்னால் கண்டேன். சந்தேகமாக இருந்ததால் நான் அவள் தங்கி இருக்கும் ரூமில் பிச்சைக்காரனைப்போல் சென்று, வாய் உளரியைப் போல், அ-ம்-மா! நா-ன் ப்பர்—மாவிலிருந்து வந்துள் ளேன்!" என்று சொன்னதும் உடனே என் மனைவியும் மற்ற குழந்தைகளும் ஓடி வந்தன. அதற்குப்பின் அவளுடைய புதிய கணவனும் வந்தார்.

"நீங்கள் பர்மாவிலிருந்து வந்தீர்களா?" என்று கேட்டாள்.

"ஆமாம்" என்று கூறினேன்.

"தாங்கள் பர்மாவில் எங்கே இருந்தீர்கள்? என்று கேட்டதும், நான் சற்று மாற்றிச் சுமார் பத்துப் பதினைந்து மைல் தூரத்திலிருக்கும் ஓர் கிராமத்தைச் சொல்லி, இவளுடைய கணவன் (என் கம்பெனியின் பெயர்) வைத்தி ருந்த கம்பெனியின் பெயரையும் சொல்லி, அதில் தான் வேலை செய்தேன் என்றும், என்னுடைய முதலாளி சுமார் பத்தாண்டுகளுக்கு முன்பே இறந்து விட்டார் என்றும், அவருடைய மனைவியையும், குழந்தைகளையும், இந்தியா வுக்கு அனுப்பிவிட்டார் என்றும் அவர்கள் உயிருடன் இருக் கிறார்களோ என்னவோ தெரியவில்லை என்றும் கூறினேன். இவைகளை நான் கூறியபொழுது அவளுக்குக் கண் கலங்கியது. எனக்குத் தாடியும் மீசையும் தலைமுடியும் அதிக மாக வளர்ந்திருந்தாலும் நான் வேண்டுமென்றே வாய் குளிரிக் குளிரிப் பேசுவதைக் கண்டதும் என்னை முற்றிலும் அடையாளம் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் நான் உண்மையைச் சொல்லி விடலாமா? வென்று நினைத்

தேன். ஆனால் பொறுமையை இழந்துவிட்டால் நமக்குப் போரில் தோல்விதான் ஏற்படும் என்று நினைத்துப் பேசாமல் இருந்தேன். கிறிஸ்தவச் சம்பிரதாயத்தில் விவாக விலக்கே கிடையாது. எனவே நான்தான் உன் கணவன் என்று சொல்ல விரும்பவில்லை. மேலும் இரண்டாவது கணவனுக்கு நான்கு குழந்தைகள் இருக்கிறார்கள். கணவன் இறந்த செய்தியைக் கேட்டுத்தான் மறுமணம் செய்து கொண்டாள் போலும்.

நான் இறந்தவனாகவே இருந்தால் புதிய சிக்கல்கள் ஒன்றும் உண்டாகாது, என்று தீவிரமாக யோசித்தேன். கடைசியாக அவள் கையால் போட்டதைச் சாப்பிட்டுவிட்டு, அவர்களிடமிருந்து விடைபெற்றேன். அதன்பிறகு நான் அந்தப் பக்கமே போகவில்லை.

அவர்கள் தம்பதிகளாக நீடூழி வாழவும், அவர்களுடைய குழந்தைகள் சுகமாக இருக்க நான் என் உயிர் இருக்கும்வரையில் ஆண்டவனிடம் வேண்டிக்கொண்டு வருகிறேன்.

# 24. பொன் மழையும்! தார் மழையும்!!

அடிக்கடி நான் கேரள நாட்டிலும், வயநாடு பகுதிகளிலும் சுற்றுப் பிரயாணம் செய்வதுண்டு. இப்படிச் சுற்றுப்பயணம் செய்யும்பொழுது, இந்திய மக்களுக்கு அப்பாற்பட்ட நிறத்தையும் உடற்கட்டையும் உடைய பணியரையும், மலையாளிகளையும் சந்திப்பதுண்டு. கேரளா மலையாளிகள் வெளுத்து அழகாக இருப்பதற்கும், பணியர்கள் ரோட்டுத் "தார்" போல் கருப்பாக இருப்பதற்கும் ஒரு கதையைச் சில பணியர்களும், பணியர்களை அதிகமாகத் தங்கள் பண்ணையில் வைத்துப் பணிபுரிய வைக்கும் சில வயநாடன் செட்டியார்களும், எரவாடன் செட்டியார்களும் கூறுகின்றனர்.

ஆனால் சாதாரணமாய் பணியர்கள் கப்பலில் வேலை செய்த அடிமைகளான ஆப்பிரிக்கர்கள். பல அடிமைகள் தாங்கள் வேலை செய்யும் கப்பல் கேரளாவை வந்து சேர்ந்ததும் தங்களுக்கிழைக்கப்படும் கொடுமைகளைத் தாங்காமல் அன்று கேரளாவில் இருக்கும் பல காடுகளுக்குள் ஓடிப்போய் மறைந்து கொண்டார்கள். சில ஆண்டுகளுக்குப்பின், அவர்கள் கேரள மக்களிடம் நன்றாக வேலை செய்ததால், அவர்களை மலையாள மொழியில் "பணியாள்" என்று

அழைத்தனர். அவர்களே நாளடைவில் ''பணியர்'' என்ற தோர் இனமக்களாக மாறிவிட்டனர். இதுதான் சரித்திரச் சான்று. ஆனால் பணியருக்கும் மலையாளிகளுக்கும் இணைப் பாக ஒரு கதையே கட்டிச் சொல்லப்படுகிறது. அது எவ்வளவு தூரம் ''உண்மை'' என்றும், 'பொய்' என்றும் கூறுவதற்கில்லை. அந்தக் கதைதான் இது:—

''மேற்குத் தொடர்ச்சி மலைப்பகுதியில் மழையும் அதிகம். குளம் குட்டைகளும் அதிகம். கிணறுகளும் அதிகம். தென்னைத் தோப்புகளும் அதிகம் என்பது எல்லோருக்கும் தெரியும்.

வெகு காலத்திற்குமுன் வயநாட்டிலிருக்கும் பண்ணைக் காரன் ஒருவன் இருந்தான். அவன் மிகவும் நல்லவன். அவன் பண்ணைக்காரனாக இருந்தாலும் தன்னிடம் வேலை செய்யும் கூலிக்காரர்களைத் தன்னைப் போலவே நேசித்து வந்தான். அவனுக்குத் திருமணமாகிச் சில ஆண்டுகளுக் கெல்லாம் அவன் மனைவி ஒரு பெண்ணைப் பெற்றுவிட்டு இறந்து போனாள். கைக்குழந்தையையும் வயல் வேலைகளை யும் கவனிக்க முடியாததால் அவன் மறுமணம்செய்து கொண்டான். மூத்த மனைவியின் மகளுக்கு மாற்றாந்தாய் இழைத்த கொடுமை தாங்க முடியாமல் வருந்தினான். இது இங்ஙனமிருக்க, இரண்டாவது மனைவிக்கும் ஒரு பெண் குழந்தை பிறந்தது. தன் மூத்த மகள் இளையவளின் மகளுக்கு வேலை செய்வதையும், வீட்டிற்கு வருபவரிடமெல் லாம் அவளை வேலைக்காரி என்று இளையாள் கூறுவதையும் மகளைக் கண்டு மனம் சகியாமல் நோய்வாய்ப்பட்டு பண்ணைக் காரன் இறந்துவிட்டான். இளையாள் அவன் இறந்தபின் ஊராருக்குப்பயந்து, மூத்தாள் மகளை வீட்டைவிட்டுத் துரத்தாமல் வீட்டிலேயே வைத்திருந்தாள். மூத்தாள் பெண்ணுக்கு வெள்ளாயி என்றும், இளையாள் பெண்ணுக்கு கறுப்பாயி என்றும் பெயர். வெள்ளாயி அழகிலும், நற்

குணத்திலும் சிறந்து வெள்ளை உள்ளம் படைத்தவளா யிருந்தாள்.

கருப்பாயி, பெயருக்குத் தகுந்தாற்போல் உள்ளமும் கறுப்பாகவே இருந்தாள். சாதாரணமாய்ப் பெண்களுக்கு வாயடக்கமும், இரக்க குணமும் மிக மிக அவசியமாக இருந்தாலும், தைரியமும் புத்திகூர்மையும் கூட இருக்க வேண்டும்.

வெள்ளாயி தன் மாற்ருந்தாய் தன்னைக் கொடுமையாக நடத்திஞலும், அவளிடம் மிக மரியாதையாகவே நடந்து வந்தாள். வீட்டு வேலைகள் செய்யும் நேரம் போக தன் ஓய்வு நேரங்களில் தன் தகப்பனுரிடம் கற்றுக் கொண்ட விவசாய வேலைகளைச் செய்து வந்தாள். தன்னுடைய வீட்டுத் தோட்டத்தில் அழகான பூக்களைப் பயிர் செய்திருந்தாள். அந்த வீட்டுத் தோட்டத்திற்குக் கிணற்றிலிருந்து தண்ணீர் ஊற்றுவதுண்டு. ஒருநாள் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைக்கும்போது, வாளி தவறிக் கேணியில் விழுந்து விட்டது. உடனே வெள்ளாயி அழுது கொண்டே தன் மாற்ருந்தாயினிடம் ஓடிஞள்.

விஷயத்தைக் கேட்டதும், மாற்ருந்தாய் இதுதான் நல்ல சமயமென்று, ''அதெல்லாம் எனக்குத் தெரியாது. கிணற்றில் குதித்து வாளியை எடுத்துக்கொண்டுவா?'' என்று கூறிஞள். மாற்ருந்தாய் கூறியதைக் கேட்ட வெள்ளாயி உடனே கிணற்றில் மூழ்கிஞள். வெள்ளாயிக்குக் கிணற்றில் குதித்தது தான் தெரியும். பிறகு அவள் அங்கிருந்து ஒரு சிங்காரத் தோட்டத்தை அடைந்தாள். அங்கே தேவிகள் பலர் வாழ்கின்ருர்களாம். எப்படி இங்கே வந்தோம் என்பதே தெரியாது அவளுக்கு. அது ஒரு அடர்ந்த காடுகளையுடைய மலைப் பகுதியாக இருந்தது. மலைக்காட்டை அவள் சுற்றிச் சுற்றி வந்தாள். அவளுக்கு ஒன்றும் தோன்றவில்லை. அப்படிச் சுற்றிக்கொண்டே வரும்பொழுது ஒரு பெரிய அடுப்பில்

பலவகைக் காட்டிறைச்சிகள் வெந்து கொண்டிருந்ததைக் கண்டாள். "நான் வெகுநேரமாக அடுப்பில் வெந்து கொண்டிருக்கிறேன். என்னைக் கீழே இறக்கி வை" என்று அடுப்பிலிருந்து ஒரு குரல் வந்தது. என்ன நடந்தாலும் சரி என்று அடுப்பின் மேலிருக்கும் யாத்திரத்தைக் கீழே இறக்கி வைத்தாள். மறுபடியும் நடந்துபோக ஆரம்பித்தாள். சிறிது தூரம் போனதும் மற்றொரு பக்கம் ஒரு மரத்திலிருந்து, "வெள்ளாயி! நான் தாங்க முடியாத பழங்களைத் தாங்கிக் கொண்டிருக்கிறேனே! நீயாவது என் அடிமரத்தைப் பிடித்து உலுக்கக் கூடாதா"? என்று ஒரு குரல் வந்தது. வெள்ளாயி சுற்று முற்றும் பார்த்தாள். அவள் கண்ணுக்கு ஒன்றும் தென்படவில்லை.

"சரி எப்படி இருந்தால் என்ன?" என்று நினைத்துக் கொண்டு அந்த மரத்தைப்பிடித்து ஒரு உலுக்கு உலுக்கினாள். மாமரத்திலிருந்த பழங்கள் எல்லாம் மழைத்தாரைகள் கொட்டுவதைப்போல் படபடவென்று தரையில் கொட்டின. பின் மலையையும், மலையில் இருக்கும் பழங்களையும், பூக்களையும், வனவிலங்குகளையும் பார்த்துக்கொண்டே வந்தாள். "என்ன ஆச்சரியம், மானைக் கண்டால் புலி ஒன்றும் செய்யவில்லை, பாம்புடன் கீரி விளையாடுகிறது. நாயுடன் பூனையும் பூனையுடன் எலியும் விளையாடுகின்றன. இந்த வியப்பான காட்சிகளைக் கண்டு, தன்னையே மறந்து நடந்து கொண்டிருந்தாள். கடைசியில் குறுக்கே ஒரு பாதை திடீரென்று தென்பட்டது. சரி, இந்தப் பாதை எங்கே போனாலும் அதிலேயே நாம் போவோம்" என்று அந்தப் பாதையில் நடக்க ஆரம்பித்தாள். அந்த வழி கடைசியில் ஒரு குடிசைக்குக் கொண்டுபோய் விட்டது. குடிசைக்குள் போனாள். குடிசைக்குள் பயங்கரத் தோற்றத்துடன் உட்கார்ந்திருந்தாள்—ஒரு கிழவி.

வெள்ளாயி அந்தக் கிழவியைப் பார்த்துகொண்டே இருந்தாள். உடனே கிழவி, "அம்மா! நான் ஒன்றும்

செய்யமாட்டேன் வா? பயம் வேண்டாம்'' என்று அழைத்தாள். ''என்னுடன் இந்தக் குடிசையில் சுகமாக வாழலாம். உனக்கு வேண்டியதை எல்லாம் கொடுப்பேன். ஆனால் நீ எனக்கு ஒரு வேலை செய்ய வேண்டும். நான் எப்பொழுதாவது களைப்படைந்தால் அப்பொழுது, நீ எனக்கு படுக்கை போட்டு, என்னை அதில் படுக்க வைக்க வேண்டும். பிறகு நான் தூங்கும்வரையில் விசிறவேண்டும். என்னால்தான் ஆற்றிலும் குளத்திலும் தண்ணீர் உண்டாகிறது. என்னை உலகில் வாழும் மக்கள் பூமாதேவி என்று கூறுவர்'' என்று கிழவி சொன்னாள்.

வெள்ளாயி கிழவி சொன்னதை எல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். அதன்படியே நடந்து கொண்டாள். மாற்றாந்தாயிடம் பட்ட கஷ்டங்களை விடக் கிழவியிடம் மிகவும் சந்தோஷமாகவும், பசி நேரத்திற்குச் சாப்பிட்டும் இருந்து வந்தாள்.

வெள்ளாயியின் நற்குணத்தைக் கண்ட கிழவி, அவளுக்கு நல்ல ஆடை ஆபரணங்களை எல்லாம் கொடுத்தாள். இப்படி நாட்கள் மாதங்கள் அகன்றன. வெள்ளாயிக்கு வீட்டின் நினைவு வந்துவிட்டது. ஒருநாள் அவள் கிழவியிடம், ''அம்மா! நான் வீட்டுக்குப் போக உத்தரவு கொடுக்கவேண்டும். எனக்கு இங்கே ஒன்றும் குறைவு இல்லை. சந்தோஷமாகத்தான் இருக்கிறேன். ஆனாலும் என் தங்கையைக் காண ஆசையாக இருக்கிறது'' என்றாள்.

கிழவி, ''அதற்கென்ன. நீ நல்லவள். என்னை நன்றாகக் கவனித்தாய். நீ பத்திரமாக வீட்டுக்குப் போவாய்'' என்று கூறி வெள்ளாயியின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டுபோய், ஒரு கதவைத் திறந்து, ''அம்மா! வெள்ளாயி ஒன்றும் பயப்பட வேண்டாம். உள்ளே போ'' என்று கூறினாள். வெள்ளாயி! உளளே நடந்து போய்க் கொண்டே இருந்தாள். அவள் மேல் பொன் மழை ''சல

சல்" வென்று பெய்தது. உடனே வெள்ளாயியின் உடல் முழுவதும் ஆங்காங்கே என்னென்ன நகைகள் வந்து நிரம்ப வேண்டுமோ அவைகள் எல்லாம், அளவாகவந்து நிரம்பின. மேலும், வெள்ளாயியின் அழகிய மேனி பொன்நிறமாக மாறிவிட்டது. வெள்ளாயி ஒன்றும் தோன்றாதவளாய் நின்றாள். அக்காட்சியினைக் கண்ட கிழவி, "அம்மா வெள்ளாயி! நீ இவ்வளவு காலம் பொறுமையாகவும், அமைதியாகவும், பொறாமை உள்ளமில்லாமலும், பிறருக்கு உதவி செய்யும் மனப்பான்மையுடனும் நடந்து கொண்டதால், நான் உனக்குக் கொடுக்கும் அன்பளிப்புகள். இவையாவும் உன்னுடையனவே. நீ இவைகளை எடுத்துக் கொண்டு போகலாம்" என்று கூறி அதுவரையில் அன்று கேணியில் விழுந்த தன்னுடைய வாளியையும் கொடுத்து ஆசி கூறி வெளியில் அனுப்பியவுடன் கிழவி அக்கதவை மூடிவிட்டாள்.

பிறகு பூமாதேவியின் உதவியால் வெள்ளாயி மேலே வந்து சேர்ந்தாள். கிணற்றைவிட்டு வெளிவந்ததும், உடனே தன்னுடைய வீட்டை அடைந்த செல்வத்தைக் கண்டுஎல்லோரும் பாராட்டினார்கள். ஆனால் மாற்றாந்தாய்க்கு மட்டும் பொறாமை அதிகமாகிவிட்டது. "தாய் தகப்பன் செய்யும் தருமம், பிள்ளைகளைக் காக்கும்" என்பது முதுமொழி. அப்படியே "அன்று அப்பா அம்மா செய்தபாவத்தால், இன்று அவர்களின் குழந்தைகள் கஷ்டப்படுகின்றனர்" என்றும் கூறுவதுண்டு. வெள்ளாயியின் செல்வத்தைக் கண்ட மாற்றாந்தாய் தன் பெண் கருப்பாயியையும் விளையாட்டுப் பொம்மைகளுடன் ணற்கிறின் அருகில் போய் உட்காரச் செய்தாள். கருப்பாயி சிறிது நேரத்திற்கெல்லாம் தன் தாயாரிடம் சொல்லிவிட்டுக் கிணற்றுக்குள் "தொப்" என்று குதித்தாள். வெள்ளாயி போலவே அவளும் சிங்காரத் தோட்டத்தை அடைந்தாள். வெள்ளாயிக்கு ஏற்பட்ட அனுபவங்களே கறுப்பாயிக்கும் ஏற்பட்டன. ஆனால்

கறுப்பாயி அங்கே உண்டான குரல்களுக்கெல்லாம், "நான் என்ன உன் வேலைக்காரியா? வெள்ளாயிதான் வீட்டிலே மாடுபோல் வேலை செய்வாள். ஆகையால் அவள் இங்கேயும் மாடாக உழைத்தாள்" என்று வழியில் எல்லாவற்றிற்கும் பதில் சொல்லிவிட்டுக் கடைசியில் கிழவி இருந்த குடிசையை அடைந்தாள். முன்னமே வெள்ளாயி யின் மூலம் கிழவியைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்ததால், கருப்பாயி கிழவியைக் கண்டதும் ஒன்றும் பயப்படவில்லை.

முதல் நாள் கிழவி சொல்வதை எல்லாம் கேட்டு அதன்படி செய்தாள். இரண்டாவது நாள் கிழவியைப் பற்றிக் கவலைப்படாமல் பொன் எங்கே? எப்பொழுது கிடைக்கும் என்ற சிந்தனையிலே இருந்தாளே ஒழியக் கிழவியைக் காக்கா பிடித்தால்தான் பொன் கிடைக்கும் என்பதை மறந்தே போனாள். இது அவளுக்கு மட்டுமன்று! இன்றும் பல நயவஞ்சகக்காரர்கள் இருக்கிறார்கள். மாமியார் இருக்கும்பொழுது அவளை அன்புடன் நடத்துவதில்லை. மாமியார் சாகச் சில தினங்கள் இருக்கின்றனவென்று திட்டமாகத் தெரிந்தபின், மாமியார் சொத்து கிடைக்கும் என்று கடைசிக் காலத்தில் காக்கா பிடிக்கும் நபர்களை இன்று, நகரங்களில் பல குடும்பங்களில் கண்கூடாகக் காண்கிறோம்—அல்லவா? அதைப்போலவே கருப்பாயி அன்று கிழவியிடம் சொத்துக் கிடைத்தால்போதும் என்று இருந்தாள். "நீ எனக்குச் சிறிதும் உபயோகமில்லை, ஆகையால் நீ வீட்டுக்குப் போகலாம்" என்று கிழவி கூறினாள்.

இச்சொற்களைக் கேட்டதும் கறுப்பாயிக்குச் சந்தோஷம் உண்டானது. ஏனென்றால், "நாம் வீட்டுக்குப் போகப் போகிறோம். பொன்னும் வெள்ளியும் கிடைக்கும்" என்று இருந்தாள். பிறகு கிழவி, "இதைப் போல் மமதை பிடித்த பெண்ணுக்கு நல்லபுத்தி கற்பிக்கவேண்டும்.

ஆண்களுக்கு மமதை இருந்தால் அது அதிகமாகத் தங்கள் வாழ்க்கையைப் பாதிக்காது. ஆனால் பெண்களுக்கு இருந் தால், வாழ்க்கையில் சமாதானமும் அமைதியுமிரா. மேலும் அவள் எல்லோருடைய வாயிலும் பழிக்கப்படுவாள். ஆனால், "யார் எப்படிப் பேசினால் எனக்கென்ன? என்னை ஒன்றும் அது பாதிக்காது? என்று ஆண்கள் சொல்லலாம்.

ஆனால் பெண்கள் கூறினால், அது நன்றாக இருக்காது மட்டுமன்று. அடிக்கடி அப்படிப்பட்ட பெண்களுடைய உள்ளம் அமைதியை இழந்து, வேதனையை நாடி வேக மாகச் செல்வதைக் காண்கிறோம். மேலும், அப்படிப்பட்ட பெண்கள் குடும்பத்தையும் சில இடங்களில் இழந்துவிடு கின்றனர். எனவே இவளால் மற்ற பெண்களுக்காவது புத்தி வரட்டுமே" என்று கறுப்பாயியை அழைத்துக் கொண்டு போனாள் கிழவி. குறித்த இடம் வந்ததும், பொன்மழைக்குப் பதிலாகத், "தார் மழை" பெய்தது. "நீ என்னிடம் நடந்துகொண்ட விதத்திற்கும் அன்புக்கும் உனக்குக் கிடைக்கும் வெகுமதி இதுதான் என்று கூறிக் கிழவி கருப்பாயியை அனுப்பிவிட்டாள். மிகவும் விசனத் துடன் கறுப்பாயி வீடுபோய்ச் சேர்ந்தாள். அவள் சாகும் வரையில் தார் அவள் உடல் முழுவதும் திட்டுத் திட்டாகப் படிந்து இருந்தது. வெள்ளாயியின் சந்ததியார் கள்தான் மலையாளிகள், வயநாடன் செட்டி முதலியவர் கள் என்றும், கருப்பாயியின் சந்ததியார்கள்தான், "பணியர் கள்" என்றும் வயநாடு மூப்பன் கூறி முடித்தான்." அது வரையில் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த நான், "கதையும் கற்பனையும் மிகவும் பிரமாதமாகத்தான் இருக் கின்றன" என்று கூறி மூப்பனிடம் விடைபெற்றேன்.

# 25. அமுத கலசம்

பால்ய நண்பர்களான பாலனும் நாதனும் அன்று இரவு வெகுநேரம்வரை பேசிக்கொண்டிருந்தார்கள். பேச்சு முடிந்து வீட்டுக்குப் புறப்பட்ட பாலன், "நாதன்! என் பையனை ஏதாவது ஒரு காலேஜில் சேர்க்க வேண்டும். ஒரே பிடிவாதமாய் பி. ஏ. பட்டம் பெற வேண்டுமென்று ஆசைப்படுகிறான். நான் எவ்வளவோ முயற்சி செய்தேன். ஆனால் பலன் கிடைக்கவில்லை. நீ யாரையாவது பார்த்து ஏதாவது ஏற்பாடு செய்ய முடியுமா?" என்று கேட்டார்.

"கலாசாலையில் சேர்ப்பதற்காக எடுத்துக் கொள்ளும் முயற்சியை, வேலை தேடும் விஷயமாக எடுத்துக் கொள்ளலாமே! உன் பையன் பி. ஏ. படித்துவிட்டு என்ன பிரமாதமாகப் புரட்டிவிடப் போகிறான்? கல்லூரியில் வாசிக்க வைப்பது நல்லதுதான். ஆனால், விரலுக்குத் தகுந்த மோதிரம்தானே செய்யவேண்டும்? உன்னால் நாலு வருஷம் கல்லூரிப் படிப்புக்குச் செலவு செய்ய முடியுமா?" என்று திருப்பிக் கேட்டார் நாதன்.

"என்ன செலவு ஆனாலும் சரி, படித்துப் பட்டம் பெற வேண்டுமென்று ஆசைப்படும்போது, நாம் அதைத் தடை செய்யக்கூடாது. பட்டம் பிற்கால வாழ்க்கைக்கு உதவியாக இருக்கலாம் அல்லவா?" என்றார் பாலன்.

"செலவு செய்யப் போகிறவன் நீ. நீயே அதைப் பற்றிக் கவலைப்படாதபோது, உன் பிள்ளை படித்துப் பட்டம் பெறுவதற்கு நான் ஏன் குறுக்கே நிற்க வேண்டும்? சரி, நாளைக் காலையில் வா. புரொபஸர் ராஜன் வீட்டுக்குப் போய்ப் பார்க்கலாம். அவர் எனக்குத் தெரிந்தவர்; நல்ல மனிதர். அவரால் செய்யக் கூடியதைச் செய்வார்" என்றார்.

மறுநாள் இருவரும் புரொபஸர் ராஜனுடைய பங்களாவுக்குப் புறப்பட்டனர்.

அவர்கள் அங்கே சென்ற சமயத்தில் ராஜன் தன் மனைவி லில்லியுடன் தாழ்வரையில் உட்கார்ந்து உல்லாச மாகப் பேசிக்கொண்டிருந்தார். தங்களுடைய பங்களா வுக்குள் இருவர் வருவதைக் கண்டதும், "மிஸ்டர் நாதனா? வாருங்கள், வாருங்கள்!" என்று இழுத்தார் ராஜன்.

"வாருங்கள்" என்று ராஜன் இழுத்ததைக் கண்டு நாதன் அவரது முகத்தை உற்றுப்பார்த்தார். அப்பொழுது ராஜனும் அவரது மனைவியும் ஏககாலத்தில் பாலனை ஒரு விதமாக வெறிக்கப் பார்த்துக்கொண்டிருந்தனர். அப்போது அந்தத் தம்பதிகளின் முகத்தில் பலவித உணர்ச்சிகள் தோன்றி மறைந்தன.

அவர்களைப் பார்த்த பாலன் திடுக்கிட்டுத் தலை குனிந்து கொண்டார்.

இந்தக் காட்சியைக் கண்ட நாதனுக்கு ஒன்றுமே புரியவில்லை. ஆனால் ராஜன் உடனே தன்னைச் சமாளித்துக் கொண்டு அவர்களை வரவேற்றார்.

அப்போது பாலனுடைய முகத்தில் ஈயாடவில்லை. அவருக்கு 'நாம் ஏன் இங்கு வந்தோம்?' என்றுகூட இருந்தது.

சுமார் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் லில்லி பி. ஏ. எல். டி. பட்டம் பெற்று ஒரு ஹைஸ்கூலில் ஆசிரியையாக வேலை பார்த்து வந்தாள். ஆனால் அந்தப் பணியில் அவளுக்குப் போதிய ஊதியம் கிடைக்காததால், ஆசிரியைத் தொழிலை ராஜிநாமா செய்துவிட்டு, ஒரு இன்ஷூரன்ஸ் கம்பெனியில் வேலைக்கு அமர்ந்தாள். அந்தக் கம்பெனியில், அவள் வேலைசெய்த பிரிவில் சுமார் இருபது குமாஸ்தாக்கள் வரை இருந்தார்கள். அவர்களில் சிலர் திருமணமாகாத வாலிபர்கள்.

லில்லியைப்போல் வேறு இரண்டு பெண்களும் அங்கு வேலைசெய்து வந்தார்கள், அவர்களில் லில்லியே மிகவும் அழகு வாய்ந்தவள்; உயர்ந்த படிப்புப் படித்தவள்.

எனவே, லில்லியின் நல்ல அபிப்பிராயத்தைப் பெறுவதற்காகக் கல்யாணமாகாத சில வாலிபர்கள் போட்டி போட்டுக்கொண்டு முயன்றதில் ஆச்சரியம் இல்லை. லில்லிக்கு அவள் வேலை சுலபமாக இருக்கும்பொருட்டு ஒவ்வொரு வாலிபரும் நான், நீ என்று அவளுக்கு உதவி செய்ய விரும்பினார்கள்.

அவர்களுடைய போட்டி லில்லிக்குப் பெரிதும் தர்ம சங்கடமாக இருந்தது. அவள் ஏழைக் குடும்பத்தில் அடக்க ஒடுக்கத்துடன் வளர்ந்தவள். ஆதலால், அவளுக்கு மற்றக் குமாஸ்தாக்களுடன் சரளமாகப் பழக முடியவில்லை. தவிர எல்லாருமே கல்மிஷமற்றவர்களாக இருப்பார்கள் என்று எண்ணிவிட முடியுமா?

ஆகையால், அவள் ஆபீசில் வேலை செய்யும் விஷயத்தில் ஒருவருடைய உதவியும் தனக்குத் தேவையில்லை என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டாள். ஆனால் நல்ல காத்திரமோ, தன்னைக் காட்டிலும் அதிகப் படிப்போ இராத அப்பாவியான ஒரு குமாஸ்தா மாத்திரம் அவளுக்கு ஏதாவது உதவி

செய்து வந்தார். அதை அவள் தடுக்கவில்லை. ஏதாவது சந்தேகம் ஏற்பட்டால் கேட்டுத் தெரிந்துகொள்வதற்கு அநுபவம் வாய்ந்த ஒரு குமாஸ்தாவின் உதவி எப்படியும் வேண்டியதுதானே?

தங்களைக் காட்டிலும் எந்த விதத்திலும் உயர்ந்த லில்லிமீது மற்ற இரண்டு பெண் குமாஸ்தாக்களும் பொருமை கொண்டனர். லில்லி தங்களிடம் கண்டிப்பாக நடந்துகொண்டதற்காக மற்ற குமாஸ்தாக்கள் அவள்மீது ஆத்திரம் கொண்டனர். எனவே, அவர்கள் எல்லாரும் சதி செய்து லில்லிக்கு விரோதமாக அபாண்டமான வதந்தி ஒன்றைக் கிளப்பிவிட்டனர். அந்த அப்பாவி குமாஸ்தா லில்லியின் காதலன் என்பதுதான் அந்த வதந்தி.

மேற்படி வதந்தி நாளுக்கு நாள் விசுவரூபம் எடுத்து லில்லியைத் திடுக்கிடச் செய்துவிட்டது. தன்னைப் பற்றி ஆபீசிலும் வெளியிலும் பலர் பலவிதமாகப் பேசியதை லில்லியே தன் காதால் கேட்க நேர்ந்தது.

இந்நிலையில் லில்லிக்கு மனவேதனை தாங்கமுடிய வில்லை. அதிக ஊதியத்துக்கு ஆசைப்பட்டுக்கொண்டு அமைதியான ஆசிரியைத் தொழிலை விட்டு வந்ததற்கு இத்தகைய தண்டனையா என்று ஏங்கினுள். மன அமைதி ஏற்படுவதற்காக அவள் ஒரு மாதம் லீவு எடுத்துக் கொண்டாள்.

ரஜாவிலிருந்து திரும்பிவந்த பின்னரும் பழைய தொல்லை ஒய்ந்தபாடில்லை. நாளுக்கு நாள் நிலைமை மோசமாகத் தொடங்கியது. அவள் அப்பாவிக் குமாஸ் தாவைக் காதலிக்கிருள் என்ற பேச்சே எங்கும் நிலவியது.

ஒரு நாள் அந்தக் குமாஸ்தா, லில்லியிடம், "நான் இனி ஆபீசில் உங்களுக்கு எவ்வித உதவியும் செய்ய

முடியாது என்று கூறுவதற்கு வருந்துகிறேன். தங்களுடன் நான் இனி பேசவும் மாட்டேன். என்றால் உத்தம குணம் படைத்த உங்களுக்குக் கெட்ட பெயர் எதற்காக?'' என்று துயரத்துடன் கூறினான்.

ஒருநாள் லில்லி ஆபீசுக்குச் சென்றபோது திடுக்கிடும் செய்தி அவளை வரவேற்றது. அவளையும் ஏழைக் குமாஸ்தாவையும் பற்றிய வதந்தி கம்பெனி மானேஜருக்கு எட்டி விடவே, அவர் மேற்படி குமாஸ்தாவின் நடத்தையைக் கண்டித்து அவனுக்கு நோட்டீஸ் கொடுத்துவிட்டார்.

இதைக் கேட்டதும் லில்லியின் கண்களில் நீர் ததும்பியது. நிரபராதியான குமாஸ்தாவுக்கு அவ்விதத் தண்டனையா? இது என்ன பாழும் உலகம்?

லில்லி கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். பல நாட்களாக அவள் மனத்தில் எங்கேயோ ஓரத்தில் மறைந்து கிடந்த எண்ணம் வலுவடைந்தது.

செல்வந்தனாகவும் பட்டம் பெற்றவனாகவும் இருந்து, அன்பில்லாவிட்டால் என்ன பலன்? படிப்பில் தன்னைக் காட்டிலும் குறைந்தவரைக் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது என்று மனிதன் இயற்றியுள்ள சட்டமோ ஆண்டவனின் சட்டமோ கூறவில்லை. சில அயோக்கியர் களின் கற்பனையிலிருந்து உதித்த வதந்தியை உண்மை யாக்கிவிட்டால்——? அவ்வாறு செய்வது தர்மத்துக்கு முரணல்ல.

தன்னுடைய முயற்சியால் அந்தக் குமாஸ்தா மேல் படிப்புப் படிப்பதற்கு ஏற்பாடு செய்துவிட்டால் போகிறது.

தன் அபிப்பிராயத்தை அந்த குமாஸ்தாவுக்குத் தெரி வித்தாள் லில்லி. இதைக் கேட்டதும் அவனுக்கு உலகமே

சுழல்வது போலிருந்தது. மரணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் ஒரு நோயாளிக்கு அமுத கலசம் கிடைத்தால் எப்படி இருக்குமோ, அப்படி அவன் உடலும் மனமும் பூரிப்படைந்தன.

இருவரும் ஏக காலத்தில் கம்பெனி வேலையை ராஜிநாமாச் செய்தனர். லில்லி ஒரு ஹைஸ்கூலில் வேலைக்கு அமர்ந்தார்.

அந்த ஏழைக் குமாஸ்தா எவ்வளவோ சொல்லியும் அவன் வேறு வேலை தேடுவதற்கு அவள் அனுமதிக்க வில்லை. அவனுடைய மேல் படிப்புக்கு அவளே உதவி செய்தாள். அதிர்ஷ்டவசமாக அவனும் சில வருஷங்களில் கல்லூரிப் படிப்பைப் பூர்த்திசெய்து பி. ஏ. பி. டி. பட்டம் பெற்றான்.

ஓர் இன்ஷூரன்ஸ் கம்பெனியில் பெரிய படிப்பில்லாத ஏழைக் குமாஸ்தாவாக இருந்த தன்னை உத்தாரணம் செய்து, தன் வாழ்க்கையையே மாற்ற வந்த ஒரு தேவதையைப் போல் லில்லி அவன் கண்ணுக்குக் காட்சியளித்தாள்.

அந்தப் பங்களாவின் வாசற் புறத்தில் இன்று புரொபஸர் ராஜன், பி. ஏ. பி. டி. என்று எழுதப்பட்டிருந்த பலகை தொங்கிக் கொண்டிருந்தது.

அந்தக் காலத்தில் ராஜனுக்கும் லில்லிக்கும் விரோதமாக வதந்தியைக் கிளப்பி விடுவதற்கு மூலகாரணமாக இருந்தவர்தான் பாலன். அந்தச் சம்பவங்களையெல்லாம் நினைத்துப் பார்த்தபோது பாலனுக்கு வெட்கம் தாங்க முடியவில்லை.

ஆனால், ராஜனும் லில்லியும் பாலனின் நிலையை நன்கு அறிந்து கொண்டனர். பாலன்மீது அவர்களுக்கு அக்

காலத்தில் மிகுந்த ஆத்திரம் ஏற்பட்டது உண்மையே. எனினும் பாலனின் விபரீதமான போக்கு அவர்களுக்கு இறுதியில் நன்மையாகவே முடிந்துவிட்டது அல்லவா?

எனவே, அவர்கள் புன்முறுவலுடன் இரண்டு நண்பர்களையும் வரவேற்றனர்.

"இவர் எனது நண்பன் பாலன்" என்று நாதன் தனது நண்பரை அறிமுகம் செய்து வைத்தபோது, "பாலன் அவர்களை எங்களுக்கு வெகு காலமாகத் தெரியுமே!" என்று மாத்திரம் சொன்னார் புரொபசர் ராஜன்.

தாங்கள் வந்த காரியத்தை நாதன் அவரிடம் தெரிவித்த போது, "நீங்கள் சிறிதும் கவலைப்பட வேண்டாம். இது என்ன பிரமாதம்? உங்கள் பையன் காலேஜில் சேர்ந்து விட்டதாகவே நினைத்துக்கொள்ளுங்கள். நாளைக்கே அவனை எங்கள் காலேஜுக்கு அழைத்து வாருங்கள்" என்றார் புரொபசர், பாலனைப் பார்த்து.

பாலனின் கண்களிலிருந்து நீர் வழிந்தது. எந்த ராஜனுக்கு ஒரு காலத்தில் அவர் இல்லாத ஒரு வதந்தியைக் கிளப்பிவிட்டுத் தீங்கிழைத்தாரோ, அதே ராஜன் அவருடைய தீச் செயலை மறந்து, உதவி செய்ய முன் வந்ததை நினைக்க நினைக்க அவர் மனத்தை என்னமோ செய்தது. ஒரு காலத்தில், தான் அவர்களுக்கு இழைத்த அநீதிக்காக அவர்களிடம் மன்னிப்புக் கோருவதுபோல் பாலனின் கண்கள் நீரை வடித்தன.

# 26. காட்டிலே மலர்ந்த காதல்

மைசூரிலிருந்து உதகைக்குப் போகும் வழியில் கூடலூரில் சில நாட்கள் தங்கினேன். அங்கே ஒரு நண்பர் மூலம் வயநாட்டில் வாழும் சில மலைவாசிகளைக் காணச் சென்றேன்.

அம்மலையில் நடந்த ஓர் சம்பவம் என் உள்ளத்தில் பசு மரத்து ஆணிபோல் பதிந்துவிட்டது. அது நடந்து ஓராண்டு காலமான பின் மறுபடியும் அந்த மலைக்குப் போயிருந்த சமயம் என் உள்ளத்தை உருக்கும் ஓர் செய்தியைக் கேட்டு திகைத்துப் போனேன்.

மலைவாசிகளிடம் தெய்வீகக் காதல் இருக்கிறது. அவர்கள் செய்வது சரியோ! தப்போ! அது எனக்குத் தெரியாது. நான் தங்கியிருந்த மலையில் வாழ்ந்த ஒரு மங்கையின் பெயர் பொன்னி என்பது. அவள் அந்தக் காட்டில் வாழும் ஒரு மூப்பனுடைய மனைவி. அவளுக்கு குழந்தைகள் இல்லை. ஆனால் அவள் தினம் தினம் அந்த மலையின் உச்சியில் இருக்கும் ஒரு குகையின் அருகில் போய் பேசுவதை முதல் முறை போனபோது கண்டேன்.

அவள் பேசுவதைக் கவனித்தால், யாரோ குகைக் குள்ளிருந்து பேசுவதைப் போலவும், அதற்கு அவள்

உருக்கமான குரலில் பதில் கூறுவதைப் போலவும் தோன்றும். இதைப்போல் ஓர் நாளைக்கு இரண்டு மூன்று முறையோ அல்லது ஐந்து முறையோ அவள் அந்தக் குகையின் அருகில் சென்று பேசுவதைக் கண்டேன். அவள் ஏன் இப்படிச் செய்கிறுள் என்பது யாருக்கும் தெரியவில்லை. அது ஓர் ரகசியமாகவேதான் இருந்தது. ஆனுல், அந்த ரகசியம் அவளுடைய கணவனுக்குத் தெரியுமோ! என்னவோ? ஆனுல் தெரியாதவன்போல்தான் என்னிடம் அவன் பேசினுன். அவளுடைய ரகசியத்தை எப்படிக் கண்டறிவது என்ற சிந்தனை எனக்கு உண்டாயிற்று. ஆனுல் அவள் பைத்தியம் அல்ல. என்பதை மட்டும் திட்டமாக முடிவு செய்தேன். பகலில் மட்டும்தான் அவள் குகையிடம்போய் பேசுவதில்லை. சில சமயங்களில் இரவிலும் குகையிடம் போய்ப் பேசுவதைக் கேள்விப்பட்டேன்.

ஒருநாள் மாலை சுமார் ஆறு மணிமுதல் அவள் காதில் விழும்படி, ''குகை கூப்பிடுகிறது'' என்று பல முறை சொல்ல ஒருவனை ஏற்பாடு செய்தேன். பிறகு அன்றிரவு அவள் எந்த நேரத்தில் குகைக்குப் போனுலும் உடனே ரகசியமாக என்னிடம் வந்து சொல்லச் சொன்னேன்.

எப்படியும் அவள் அன்றிரவு குகைக்குப் போவாள் என்பதை என் உள்ளம் கூறிக்கொண்டேயிருந்தது. நான் சாப்பிட்டுவிட்டுத் தயாராக டார்ச்சு விளக்குடன் இருந்தேன். சுமார் ஒன்பது—பத்து மணி இருக்கும்; நான் ஏற்பாடு செய்த ஆள் ஓடிவந்தான்.

''ஐயா! அவள் குகைக்குப் போகிறுள்'' என்று கூறினுன்.

உடனே நானும், வழிகாட்டியும் குகைக்குப் பின் பக்கமாக அக்குன்றின் மேல் சென்று குகைக்கு அருகில்

மற்றொரு பாறையின் மறைவில் நின்றுகொண்டோம். வழி காட்டியின் கையில், என் டார்ச்சு விளக்கைக் கொடுத்து, எனக்குப் பின் பக்கமாகப் பார்த்துக்கொண்டே இருக்கும் படி செய்தேன். ஏனென்றால் எனக்குப் பின்னால், இரவு காலத்தில் ஏதாவது மிருகம் வந்தால் என்ன செய்வது என்பதற்காக அப்படிச் செய்தேன்.

இரவில் சில சமயங்களில் பொன்னி அக்குகையை நாடிப்போகிறாள் என்றும், விலங்குகளால் அவளுக்கு யாதொரு ஆபத்தும் உண்டாகக் கூடாது என்பதற்காக மூப்பன் தலைவன் கொடிய விலங்குகள் குகையின் அருகி லும், அவர்கள் வாழும் பாடியின் அருகிலும் வராமல், 'எல்லைக் கட்டு' என்ற மந்திரத்தால் கட்டிவிட்டான் என்றும் அறிந்தேன். ஆகையால் எந்தக் கொடிய விலங்கு களும் அங்கு வருவதில்லை. இந்தச் செய்தியைக் கேள்விப் பட்டதும்தான் நானும் இரவில் குகைக்குப் போகலாம் என்று முடிவு செய்தேன்.

அன்றிரவு குகைக்கு அருகில் மறைந்து கொண்டிருந் தேன். சிறிது நேரத்திற்கெல்லாம் மெதுவாக ஓர் உருவம் நடந்து வந்தது. அது பொன்னிதான் என்று தெரிந்து கொண்டேன். அவ்வுருவம் குகையின் அருகில் வந்து, குகையை மூடி இருந்த பெரிய பாறையைத் தன் பலம் கொண்டு புரட்டிப் புரட்டிப் பார்த்தது. புரட்ட முடியவில்லை.

"புரட்ட முடியவில்லையே!" என்று தானே சொல்லிக் கொண்டாள் பொன்னி. மறுபடியும் புரட்டப் பார்த்து, "உள்ளிருந்து தள்ளு" என்றாள்.

அந்தச் சந்தர்ப்பத்தை நான் நழுவவிடாமல், "உம்— உம்" என்று யாரோ உள்ளிருந்து தள்ளுவதைப் போல் பாவனை காட்டி, 'உம்' என்றேன், ஆனால் நான் 'உம்' என்று ஓசை கொடுத்துவிட்டு உடனே நான்கு பக்கமும்

பார்த்துக்கொண்டேன். ஏனென்றால் அவளைத் தேடிக் கொண்டு, குகைக்குள்ளிருந்து யாராவது வந்தாலும் வரலாம். அல்லது அந்நியர்கள் யாராவது அவளை நாடி வந்தால் என்ன செய்வது? அல்லது அவளுடைய கணவனே தேடிக்கொண்டு வந்தால் என்ன செய்வது? அப்படி அவன், அவளைத் தேடிக்கொண்டு வந்தால் எங்களைப் பார்த்து ஏதாவது சந்தேகப்பட்டால் என்ன செய்வது? என்று பல சிந்தனைகள் வந்து அந்த இராக் காலத்தில் தனிமையில் நிற்கும் என் உள்ளத்தில் அச்சத்தை தோற்றுவித்தால் என் கை கால்கள், "டைப்" அடிக்காமலா இருக்கும்? ஆனால் தலைவனிடம் மட்டும் நான் விஷயத்தைச் சொல்லி வைத்திருந்தேன். ஆனால் மற்றவர்களுக்கு நான் தலைவனிடம் கூறிய செய்தி தெரியவேண்டும் அல்லவா?

நான் 'உம்' என்று குரல் கொடுத்ததும், 'உங்களால் கூட முடியலே' என்று கூறிக் குகையை மூடியிருக்கும் பாறையின்மேல் சாய்ந்தாள். என் குரலை மாற்றிக் கொண்டு, "பொன்னி! நீ ஏன் இப்படிக் கஷ்டப்படுகிறாய், இரவில் ஏன் வந்தாய் உம்" என்று பெருமூச்சு விட்டேன்.

"ஐயா! நான் உன்னை எப்படி மறப்பது? நான் தானே உன்னைக் குகைக்குள் போய் மறைந்துகொள் என்று கூறி னேன். குகையை இவ்வளவு பெரிய பாறையால் என் கணவர் மூடுவார் என்று தெரிந்திருந்தால் உன்னை ஓடிப் போக அல்லவா சொல்லி இருப்பேன். என்மேல் சந்தேகப் பட்டுத்தான், ஆட்களை அழைத்து வந்து, "ஒரு புலி இக் குகைக்குள் ஓடிப்போனது. ஆகையால் பெரிய பாறையை வைத்து மூடி விடுங்கள்" என்று கட்டளையிட்டார். நூறு ஆட்கள் புரட்டிய இந்தப் பாறையை நாம் இரண்டு பேர் புரட்டினால் நகருமா?" என்று கூறி அழுதாள்.

ஓர் அளவுக்கு நான் சில விஷயங்களைப் புரிந்துகொண்டு அவள் கணவனுக்குக் குகையின் ரகசியம் தெரியும் என்ற

முடிவுக்கு வந்தேன். பிறகு அங்கே நிற்பதால் இனி ஒன்றும் பிரயோசனம் இல்லை என்று நினைத்து உடனே நானும் வழிகாட்டியும் எங்கள் குடிசையை நோக்கி, மற்றொரு வழியாக நடந்தோம்.

''ஏம்பா! அந்தக் குகைக்கு அந்தப் பாறையை வைத்து மூடியவர்கள் யார்? ஏன் மூடினார்கள்? என்று வழிகாட்டி வாயில் ஏதாவது வருகிறதா?'' என்று கேட்டேன்.

''இல்ல ஐயாமாரு! பல மாதங்களுக்கு முன் ஒரு புலி அந்தக் குகைக்குள் ஓடிவந்து புகுந்துகொண்டதை நம்ப தலைவர் ஆளு பார்த்ததாம்! உடனே தண்டோரா போட்டு மூன்று ஊரையும் கூப்பிட்டு அந்தப் பாறையைப் புரட்டிக் கொண்டு வந்து குகையின் வழியை மூடிட்டாரு! அந்தப் புலி ஒரு தெய்வப் புலியாம். ஆகையால் அவருடைய மனைவிக்குப் பைத்தியம் பிடிச்சுப் போச்சு என்று ஊரில் பேசுகிறார்கள்'' என்று வழிகாட்டி சொல்லி முடித்தான். சரி, இனி எல்லா ரகசியமும் தலைவனிடம்தான் இருக்கிறது என்று நினைத்துக் கொண்டு நிம்மதியாக அன்றிரவு தூங்கினேன்.

மறுநாள் காலையில் எழுந்து தலைவனிடம், ''இன்று பல முக்கியமான செய்திகளைக் குறித்துத் தங்களிடம் நான் பேச வேண்டும். ஆகையால் தாங்கள் இன்று பணிக்குச் செல்ல வேண்டாம்'' என்று கேட்டுக்கொண்டேன். அவருடைய ஒப்புதல்மேல், அவரை அழைத்துக்கொண்டு அந்தக் குகைக்குச் சென்றேன். நான் அவரை அழைத்துச் செல்லும்பொழுதே அவர் நான் கேட்கப் போகும் செய்திகளை ஓர் அளவுக்குப் புரிந்து கொண்டார்.

''உங்கள் மனைவிக்கு பைத்தியமோ அல்லது பேயோ பிடிக்கவில்லை. மனைவியின் உள்ளத்தில் திடீரென்று ஏற்பட்ட ஓர் அதிர்ச்சிதான் இதற்குக் காரணம். நினைவு

இழந்த நிலை சில சமயங்களில் ஏற்படுவதற்கு என்ன காரணம் தெரியுமா? குகை என்ற வார்த்தையோ, அந்தக் குகையின் சம்பந்தப்பட்ட சொற்களோ பொன்னியின் காதில் பட்டாலும் குகை நினைவுகள் திடீரென்று உள்ளத்திலே உண்டாகும்பொழுது, தன்னுடைய சுய நினைவு பறிக்கப் படுவதுடன் நில்லாமல், அவளுக்குக் குகையினிடம் வர வேண்டும்—என்று ஓர் எண்ணம் உண்டாகிறது. அவளைச் சுகப்படுத்த வேண்டும் என்று நீங்கள் நினைத்தால் இந்தக் குகையின் வாயிலில் இவ்வளவு பெரிய பாறையை வைத்த தின் நோக்கத்தைத் தாங்கள் என்னிடம் மறைக்காமலும் குறைக்காமலும் கூறினால் நான் அதற்கு ஏதாவது பரிகாரம் இருந்தால் செய்கிறேன். எப்படியோ தங்களுடைய மனைவி சுகமானால் போதும். "பெண் பாவம் பொல்லாதது. அது நிழல்போல் பின் தொடர்ந்து வரும்" என்று பெரிய மகான்கள் எல்லோரும் கூறுகின்றனர்" என்று கூறினேன். பிறகு நாங்கள் இருவரும் மவுனமாகவே குகையின் வாயிலை அடைந்தோம். தலைவன் கண்கள் கலங்கின. அவர் கூறினார் :

"ஐயா! நாங்கள் காட்டில் வாழ்ந்தாலும் எங்களுக்கும் மனித உள்ளம் இருக்கிறது. காதல் இருக்கிறது. நான் தலைவனாக இருந்து என்ன சுகத்தைக் கண்டேன். என்னுடைய முதல் மனைவி மரணமடைந்த பின், நான் இவளைத் திருமணம் செய்துகொண்டேன். இவள் அடுத்த காட்டில் உள்ள ஒரு தலைவனுடைய பெண். இன்று எனக்குத் தலைவன் பதவியில் நல்ல செல்வாக்கு இருக்கிறது என்று ஏழைப் பெண்ணைத் திருமணம் செய்துகொண்டால் என் மதிப்பும் மரியாதையும் குறையும் என்று இறுமாப்புக் கொண்டு என்னைவிடச் செல்வத்தில் கொஞ்சம் உயர்ந்த இடமாகப் பார்த்து அடுத்த காட்டில் இருக்கும் தலைவனுடைய மகளைத் திருமணம் செய்துகொண்டேன். என்னுடைய காட்டில் எவ்வளவோ பேர் எனக்குப் பெண் கொடுப்பதற்கு முன் வந்தார்கள். ஆனால், "நான் தலைவன்" என்ற

இறுமாப்பு என் உள்ளத்தில் இருந்ததால் மற்ெருரு தலைவனுடைய குடும்பத்துப் பெண்ணையே நாடியது.

முதலில் நானும் ஏழையாக இருந்தேன். ஆகையால் ஏழைப் பெண்ணைத் திருமணம் செய்துகொண்டேன். அவளிடம் நான் இன்பமாகவும், கவலை என்பதே என்ன என்று தெரியாமலும் இருந்தேன். "நிழலின் அருமை நிழலில் இருப்பவர்களுக்குத் தெரியாது" முதல் மனைவி இறந்த பின்தான் கணவனுக்கு அவள் அருமை நன்ருக விளங்கும். என்னுடைய மனைவி இறந்துவிட்ட பின் அடுத்த ஆண்டு முதல் மனைவியின் எண்ணம் என்னைவிட்டு மறைய வேண்டும் என்று மறுமணம் செய்துகொண்டேன். இப்படிச் சொல்லிக்கொண்டே வந்தவர் திடீரென்று குழந்தைபோல் அழுதார். என்ன சொல்வது! என்ன செய்வது என்று ஒன்றும் தோன்ருதவனுய் கவலை தீர அழட்டும் என்று பேசாமல் விட்டுவிட்டேன். பிறகு அவரே சொல்லத் தொடங்கினர்.

ஒரு நாள் திடீரென்று இந்தக் குகைக்கு அருகில் ஆண் குரலோசை கேட்டது. மாலை இருள் சூழ்ந்திருந்தது. தூரத்திலிருந்து பார்த்ததால் ஒன்றும் காணப்படவில்லை. என்ன இருளில் பெண் குரலும் ஆண் குரலும் கேட்கின்றனவே என்று நான் குரல் கொடுத்துக்கொண்டே வந்தேன். இந்தக் குகையின் அருகில் என் மனைவி பொன்னிதான் இருந்தாள்.

"இங்கே ஓர் ஆண் குரல் கேட்டதே!" என்று பொன்னியைக் கேட்டேன். "நான்தான் இங்கே இருக்கிறேன். எந்த ஆண் குரலும் இல்லையே! நான்தான் பாடிக்கொண்டே "மலஜலம்" கழித்தேன்" என்று கொஞ்சம் தடுமாற்றத்துடன் கூறினுள். "எழுந்து குகையின் அருகில் நடக்கத் தொடங்கினேன். உடனே என்னைத் தடுத்து, என் வார்த்தையில் தங்களுக்கு நம்பிக்கை இல்லையா? இல்லை என்று கூறி

விட்டால்.... என்று நிறுத்தினாள். பொன்னி சொல்வது உண்மையாக இருந்தால் பிறகு என்ன செய்துகொள்வாளோ என்ற பயத்தால், நான் குகையிடம் போகவில்லை. ஆனால் நீ சொல்வதை நான் கேட்கிறேன். அதற்கு ஒன்றும் மறுக்கவில்லை. ஆனால் அந்தக் குகைக்குள் விலங்குகள் இருந்தால் அதற்கு மற்றொரு வழி உண்டு. அந்தப் பக்கத்தில் போகட்டும்'' என்று கூறினேன். நான் கூறியதின் பொருள் அவளுக்கு விளங்கவில்லை. பிறகு பொன்னியை முன்னால் நடக்கச் செய்து, நானும் பின்னால் நடந்து செல்லும் பொழுது பொன்னிக்குத் தெரியாமல் என் நூறு ஆட்களை விட்டு குகைக்குள் கொஞ்சம் பள்ளம் உட்புறமாக எடுக்கச் சொல்லி, பெரிய பாறையை உருட்டிக்கொண்டு வந்து குகைக்குள் தள்ளும்படி சொன்னேன். அந்த வேலை அப்பொழுதே நடந்துவிட்டது.

மறுநாள் காலையில் நான் வந்து பார்த்தேன். குகையின் வாயில் நான் எதிர் பார்த்ததைவிட மிகவும் பொருத்தமாக மூடப்பட்டது. ஒரு குழந்தைகூட குகைக்குள்ளிருந்தோ வெளியிலிருந்தோ போகவும் வரவும் முடியாத அளவுக்கு அது மூடப்பட்டது.

குகையை மூடியதிலிருந்து என்னிடம் பொன்னி சரியாகப் பேசுவதில்லை. ஆகையால் அவள் அதைப் பார்த்திருப்பாள் என்று நினைத்துக் கொண்டேன்.

நாளாக ஆக நாள்தோறும் குகையின் வாயில் அருகில் நின்று, 'சாப்பிட்டீர்களா? மற்றொரு பக்கம் வழி இல்லையா? ஏன் பேசவில்லை? என்மேல் கோபமா?'' என்று பல கேள்விகள் கேட்பதுண்டு. இவள் அக்குகையின் அருகில் போய்ப் பேசுவதைக் கேட்டபின்தான், பொன்னியிடம் பேசியது ஒரு ஆண் என்றும் சில வாரங்களுக்குப்பின், அடுத்த மலையிலிருந்து, ஒரு வாலிபனைத் தேடிக்கொண்டு சிலர் வந்ததால், அந்த வாலிபன்தான் குகைக்குள்

அன்று போனவன் என்றும் நான் தீர்மானித்த பிறகு திடுக்கிட்டேன். ஏனென்றால் இரண்டாம் திருமணமாகி சுமார் இரண்டு மூன்று ஆண்டுகளுக்குப்பின் மூன்றாவது மலையில் வாழும் ஒரு தலைவனுடைய மகன் என்னைத் தேடிக்கொண்டு வந்தான். என் வீட்டில் இரண்டு மூன்று நாட்கள் தங்கினான். பிறகு அவன் தன் மலைக்குப் போய்விட்டான். ஆனால் அவன் அன்றுமுதல் அடிக்கடி இந்த மலைக்கு வேட்டையாடுவதற்கு வந்து அந்தக் குகையில் இளைப்பாறுவதை வழக்கமாகக் கொண்டான். சில சமயங்களில் நான் பார்த்தால் அவனுடன் பேசுவேன். சில நாட்களுக்குப் பிறகு 'தலைவன் மகன்தான்' என்று என் உள்ளத்தில் நிச்சயமானதும் மிகவும் பயந்து போனேன். ஏனென்றால் மலைக்கு மலை ஊர் சண்டையில் வந்து முடிந்துவிடுமோ என்று நினைத்து குகையின் சங்கதிகள் யாருக்கும் தெரியாதபடி குகையைச் சுற்றிலும் சுமார் பத்து இருபது அடி தூரத்திற்கு வேலிகட்டி குகையில் ஒரு தெய்வம் சமாதி அடைந்துவிட்டது என்றும், அந்தத் தெய்வம்தான் என் மனைவியின் மேல் ஆசைப்பட்டது என்றும், ஆகையால் என் மனைவி பொன்னியை நான் சகோதரியாக மதித்து விட்டேன் என்றும் என் ஊரிலும் மற்ற ஊரிலும் பொய் வதந்தியைப் பரவச் செய்தேன். இந்தப் பொய் வதந்தி காட்டுத்தீபோல் பரவி விட்டது. ஒரு வாரத்திற்கெல்லாம் என்னுடன் வந்த ஆட்கள் அக்குகையைப் பார்த்து வணங்கி, கன்னத்தில் தங்கள் கையைத் தட்டிக்கொள்ள ஆரம்பித்தார்கள்.

அக்காட்சியைக் கண்டதும், 'இனி ஒன்றும் பயம் இல்லை' என்று நினைத்துக் கொண்டேன். ஆனால் பொன்னியின் பைத்தியமோ அதிகமானது. அவளுடைய நிலையைக் கண்டு நீங்கள் சொல்வதைப் போல், ''பெண் பாவம்'' என்று நினைத்து பாறையை நீக்கினாலோ ஊர் சண்டையில் வந்து முடிந்துவிடும். ஒரு உயிருக்காகப் போர்க்களத்தில் கவலைப் படமாட்டார்கள். ஆகையால் தலைவன் என்ற இடத்தில் இருப்பதால் இரண்டு உயிர் போனாலும் கவலை இல்லை.

ஊர் சண்டை ஆரம்பித்தால் பல உயிர்கள் மடியும் அல்லவா? என்று என் மனதில் சமாதானங்கொண்டேன்.

அன்றுமுதல் சுமார் இரண்டாண்டுகளாக என் மனைவி இப்படியேதான் இருக்கிருள். அவள்மேல் தெய்வம் இருப்ப தாக நினைத்த ஊர் மக்கள் அவள் மட்டும் வேலிக்குள் போவதைத் தடை செய்யவில்லை. இந்த ரகசியம் யாருக்குத் தெரியும்? இப்பொழுது சொல்லுங்கள் போர்க்களத்தின் தலைவனைப்போல் நீங்கள் நியாயம் சொல்லுங்கள். பாறையை எடுத்துவிட்டு மனித எலும்புகளைக் கண்டு ஊர்ச் சண்டையில் பலர் மரணமடைவதைப் பார்ப்பது நலமா? அல்லது இரு தனி நபர்கள் மரணமடைவதைப் பார்ப்பது நலமா? இப்பொழுது சொல்லுங்கள். உங்கள் யோசனையை நான் ஏற்றுக்கொள்கிறேன்" என்று கூறி முடித்தான் தலைவன் இந்த சோக சம்பவத்தைக் கேட்டபின் என் உள்ளமும் ஒரு போர்த் தலைவனுடையதாகவே மாறியது. இருவரும் மவுன மாகவே நடந்தோம். குகையைப் புகைப்படமும் எடுக்கக் கூடாது என்று ஊர் மக்கள் கூறினுர்கள்.

சமயம் பார்த்து பொன்னியை மட்டும், "கிளிக்" என்று புகைப்படம் எடுத்துக்கொண்டேன்.

ஆறு மாதங்களுக்குப்பின் மறுபடியும் அந்த மலைக்குச் சென்றேன். நான் கேள்விப்பட்டது இது.

"என்னைக் குகைக்கு அருகில் கொண்டுபோ!" என்று படுக்கையில் இருந்தவாறே கூறினுள் பொன்னி. குகைக்கு அருகில் சிறிய குடிசை கட்டப்பட்டது. பொன்னி அந்த குடிசையில் ஒரு வாரம் இருந்தாள். அவளுக்கு வேண்டிய ஆகாரங்கள் எல்லாம் வயதுக்கு வராத பெண்கள் மூலம் வேலியைத் தாண்டிக் கொண்டுபோய் கொடுத்தார்கள்!

ஒருநாள் காலையில் ஆகாரம் கொண்டுபோன பெண் "பொன்னியின் வாயிலும், மூக்கிலும் எலும்புகள் இருக்கின்

றன என்று வந்து சொன்னபின் எல்லோரும் பொன்னியின் சடலத்தை எடுத்து குகைக்குமேல் புதைத்து விட்டார்கள். அன்றுமுதல் இன்றுவரையில் அந்தக் குகையைக் கடந்து செல்லும் ஒவ்வொருவரும் குகைக்கு வணக்கம் செய்கின்றனர்" என்று கூறி குகையை வணங்கினுன் தலைவன்.

நானும் எழுதுவதற்கு ஒரு சம்பவம் கிடைத்ததே என்று உள்ளத்தில் நினைத்து புகழ்வதா? அல்லது அவர்கள் தெய்வீகக் காதலை நினைத்து புலம்புவதா! என்று தெரியாதவனய் குகைக்கு ஒரு வணக்கம் செய்துவிட்டுத் தலைவனிடம் விடை பெற்றேன்.

# 27. ஓடினாள்! ஓடினாள்!!

தோதுவர்கள் நீலகிரி மலையில் பரவியிருக்கிறார்கள். இவர்கள் இம்மலையைவிட்டு வேறு எங்கும் சென்றதில்லை. பழங்குடிகளைச் சேர்ந்த இவர்கள் எங்கிருந்து, எப்பொழுது எங்ஙனம் இம்மலைக்குக் குடிவந்தார்கள் என்று திட்டமாக இதுவரையில் யாராலும் கூறமுடியவில்லை.

இவர்கள் பெரும்பாலும், ஒருவிதக் கோரைப் புல்லாலான குடிசைகளிலேயே வசிக்கிறார்கள். இவர்கள் குடிசைகளை அமைத்து வாழுமிடங்கள் "மந்து" என்று அழைக்கப்படுகிறது. இவர்கள் காதல் திருமணங்கள் செய்து கொள்ளுகின்றனர். பருவமடைந்த மங்கையும் வாலிபனும் ஒருவருக்கும் சொல்லாமல் தனி மந்துக்கு ஓடிச் செல்லுகின்றனர்.

இவர்களின் மந்தில் சில நாட்கள் தங்கும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது. அப்பொழுது ஒரு பெரியவர் அங்கே மலையடிவாரத்திலுள்ள இரண்டு நடுக் கற்களைச் சுட்டிக் காட்டி, அவை காதலர்களின் வீரக்கல், வீர வணக்கத்திற்கு உரியவை என்று தெரிவித்தார்.

தமிழ்நாட்டில், பண்டைக்காலத்தில் இறந்த வீரர்களுக்கு வீரக்கல் நட்டார்கள். கற்புடைய மகளிருக்கு மகா சதிக் கல்லை நட்டு வணங்கினார்கள். அக்கல்லில் அவர்களது

பெயரையும் வீரச்செயலையும் குறித்தார்கள். பிறகு இறந்தவர்களின் உருவத்தையே அமைத்து வணங்கும் வீர வணக்க வழக்கமும் உண்டாயிற்று. கற்பரசியாகிய கண்ணகிக்குக் கல்லால் சிலை செய்யச் சேரன் செங்குட்டுவன் வஞ்சியிலிருந்து புறப்பட்டுத் தன் சேனைகளுடன் இமயம் செல்லும்போது நீலகிரியில் தன் பாடியுடன் தங்கினான் என்றும் பிறகு கண்ணகிக்காக எடுத்த கல்லைக் கங்கையில் நீராட்டித் தன் நாட்டில் சிலையைச் செய்து பிரதிஷ்டை செய்தான் என்றும் சிலப்பதிகாரம் கூறுகிறது. இதை ஊர்ஜிதம் செய்யும் வகையில் உள்ளது, நீலகிரியில் இருக்கும் தொண்ணூறு தோதுவ மந்துகளில் ஒன்றான, 'கண்ணகி மந்து. இதைச் சொன்ன பெரியவர் கூறிய பல கதைகளில் ரசமானதொன்றுதான் இது:

'என் மூதாதையரின் காலத்தில் இந்த மந்தில் ஒரு அழகிய பெண் இருந்தாள். அவளுக்கு மூன்று வயதான போதே திருமணம் செய்துவைக்க அவளுடைய பெற்றோர் நிச்சயம் செய்துவிட்டனர். அதற்காக ஆறு வயதுடைய ஓர் அழகான பையனைத் தேர்ந்தெடுத்து, இதே மந்தில் திருமணம் செய்து வைத்தார்கள். பையன் வீட்டாருக்கும், பெண் வீட்டாருக்கும் ஏராளமான, 'தொதுவக் காட்டு எருமைகள்' இருந்தபடியால் அவர்களை மற்றத் தொதுவர்கள் பெரிய பணக்காரர்கள் என்று கருதினார்கள். திருமணத்தில் வெகுமதியாகப் பெற்ற எருமைகளை அவரவர்கள் வைத்துக்கொண்டு ஜீவனம் செய்து வருங் காலத்தில் அந்த எருமைகளுக்குப் போதிய 'புல்' கிடைக்காமல் போய்விட்டது. எனவே, பெண் வீட்டார் தூரத்தில் இருக்கும் மற்றோர் இடத்திற்குப் போய்விட்டார்கள். அங்கே புதிய மந்தை ஏற்படுத்திக்கொண்டார்கள். புதிய இடத்தில் அந்த எருமைகள் வியாதியாலும், கொடிய மிருகங்களினாலும் பீடிக்கப்பட்டுப் பாதியாகக் குறைந்து விட்டன. இங்ஙனம் சில ஆண்டுகள் கழிந்தன.

பெண்ணுக்குச் சுமார் பதினன்கு வயது ஆயிற்று. அவள் மிகுந்த அழகுள்ள பெரிய மங்கையாகக் காணப் பட்டாள். அப்போது, அப்பெண் ஓர் அழகுள்ள வாலிபனைக் காதலிக்கிருள் என்று ஊரில் ஒரு வதந்தி உண்டாயிற்று. அப்படியே, இன்னெரு மந்திலும் ஒரு வாலிபன்மேல் பழி ஏற்பட்டது. இந்தக் காதல் வதந்தி காட்டுத் தீயைப் போலப் பரவியது. காதலர்கள் இருவரும் அதோ தெரி கிறதே மலை உச்சி அங்கேதான் சந்திக்கிருர்கள் என்றும் மந்திலுள்ளோர்கள் கூறினர்கள்.

ஏற்கனவே பிள்ளை வீட்டாரிடம் ஸ்திரீதனமாகப் பெற்றுக்கொண்ட எருமைகளில் சில இறந்து விட்டபடியால், பெண் வீட்டார் ஏழைகள் என்று கருதப்பட்டனர். அப்படி இருக்கையில் பெண் மற்ருெருவனைக் காதலிக்கிருள் என்று தெரிந்தால் பிள்ளை வீட்டார் தாங்கள் கொடுத்த எருமைகளைத் திருப்பிக் கொடுக்கும்படி கேட்பார்கள் அல்லவா? அவற்றைத் திருப்பிக் கொடுக்க இயலாத நிலையில் இருந்ததால் தங்கள் பெண்ணைப் புதிய காதலனிட மிருந்து பிரித்துவிட்டுப் பிறகு அவளைப் பிள்ளை வீட்டாரிடம் ஒப்பித்துவிடலாமென்று பெண் வீட்டார் யோசனை செய்தார்கள். ஆனல் பெண்ணுக்குத் தனக்கு முன்னதாகவே திருமணம் நடந்திருக்கிறது என்ற செய்தி தெரியாது.

பெண் வீட்டாருக்குப் பலர் பலவிதமாக யோசனை கூறினர்கள். அதன்படி பெண்ணும் பையனும் சந்திக்கும் நேரத்தைக் கண்டுபிடித்துப் பெண் வீட்டார் ஆட்களை ஏவி, ஒரே வழியாகக் காதலனைப் பழி தீர்த்துவிட்டார்கள். கல்வி அறிவு இல்லாத பண்டைக்காலம் அல்லவா அது? காதலன் பிணமானன். 'இரத்த வெள்ளத்திலே புரண்டு கிடக்கிருன் உன் காதலன்' என்ற செய்தி பெண்ணின் காதில் பட்டது. அந்தத் துக்கச் செய்தியைக் கேட்ட உத்தமி—அந்தத் 'தோதுவக் கண்ணகி' ஓ வென்று

அலறிக் கொண்டு ஓடினுள். காடும் செடியும், மேடும் பள்ளமும், கல்லும் கரடும், முள்ளும், முரடும் பாராமல் ஓடினுள். அதனுல் அவள் உடைகள் கிழிந்தன. முட்கள் பட்ட கால்களில் குருதி பெருகியது. காதலன் தலையிலும், தேகத்திலும் பல காயங்களைக் கண்டதும் கோவென்று கதறினுள். 'விண்ணே! என் மதி மாண்டது' என்று சொல்லிக்கொண்டே அப்பெண் அந்த இன்னற் காட்டிலே புரண்டு புரண்டு அழுது புலம்பினுள். அப்போது அவளுடைய பெற்ருேரும் கொலை செய்யப்பட்ட வாலிப னுடைய பெற்ருேரும் மலைச்சாரலுக்கு வந்து சேர்ந்தார் கள். பெண்ணின் தகப்பனும் பையனின் தகப்பனும் ஒருவரை ஒருவர் பார்த்ததும் பிரமித்துப் போய்விட்டார்கள். 'அன்று குழந்தைகளைக் கலியாணம் செய்து வைத்தோம். அவர்களே இன்று காதலர்களாக மாறி, மலைச் சாரலில் கிடக்கிருர்கள்' என்ருல் எப்படி இருக்கும்.

பண்டைக்காலத்தில் இம்மலையில் போக்குவரவு இல்லாததால் அடிக்கடி ஒருவரையொருவர் பார்க்க இயலா மல் போயிற்று. பெண்ணும் பையனும் சிறியவர்களாக இருந்ததால் சில சமயங்களில் பெரியவர்கள் சந்தித்தாலும், பையனும் பெண்ணும் சந்தித்து, 'நான்தான் உனக்குக் கணவன், நீதான் எனக்கு இல்லாள்' என்று கூறச் சந்தர்ப்பமே ஏற்படவில்லை.

'நம் கணவனே நமக்குக் காதலனுக வாய்த்தார்' என்று கேட்டதும் அவள், 'காதலா!' என்று ஏங்கிப் பல முறை தலையில் அடித்துக்கொண்டு, 'ஏ நீதியே! நீயுமா மாண்டுவிட்டாய்? சாவுதான் எங்கள் போன்ற அடிமைப் பெண்களுக்கு விடிவு நேரமா? எங்கள் சமூகத்தில் இருக் கும் கொடிய பழக்கவழக்கங்கள் எங்களுடன் மறைந்து மண்ணுகட்டும். எங்கள் இரத்தப்பலியே எங்கள் சமூகத் தைக் கசடறக் கல்வி கற்றுப் படிப்படியாக எல்லாத் துறையிலும் உயரச் செய்யட்டும்' என்று ஆவேசமாகக்

கூறி கையிலிருந்த மண்ணை வீசினுள். எல்லோரும் மயிர் சிலிர்க்கும்படியாகத் தலையிலும் வாயிலும் அடித்துக் கொண்டே வேகமாக ஓடினுள், ஓடினுள்! வாழ்க்கையின் இன்ப எல்லையைக் காணுவிட்டாலும், வாழ்வின் முடிவடையும், மலைஉச்சியின் ஓரத்தையும் கண்டவள்போல் அதோ தெரிகிறதே, அந்த மலைச் சிகரத்திலிருந்து அதன் அடிவாரத்தில் குதித்தாள். அவ்வளவுதான், அந்த பெண் சிற்பமும் மாண்டது!

அன்று திருமணக் கோலத்தைக் கண்டுகளித்த அக் கண்கள், இன்று மயானக் கோலத்தைக் கண்டு கலங்கின. அவர்களுக்காகத்தான் அந்த இரண்டு கற்களும் வீரக் கற்களாக நிற்கின்றன.

அன்று முதற்கொண்டு எங்கள் சமூகம் படிப்படியாகக் கல்வியிலும், தொழிலும், நாகரீகத்திலும் வளர்ந்து வருகின்றது. எல்லாம் எங்கள் குலக் கண்ணகியின் கருணையே' எனறு கண்கள் கலங்கக் கூறிமுடித்தார் பெரியவர்.

காடுகளில் காடர்களிடம் எவ்வளவோ கதைகளைக் கடந்த பதினைந்தாண்டுகளாகக் கேட்டிருக்கிறேன். ஆனுல் இந்தக் கதையைப்போல் சோகமான கதையை நான் இது வரையில் கேட்டதே இல்லை.

# 28. தாத்தா வினை பேரனுக்கு

கடந்த பல்லாண்டுகளாகக் காடுகளில் சுற்றியும் காடர் களைப்பற்றிய பல நுணுக்கமான செய்திகளை என்னுல் தெரிந்துகொள்ள முடியவில்லை.

பல சமயங்களில் இது "சாதாரண விஷயம்" என்று நினைத்துக் கேட்டால், அந்த விஷயங்களுக்கு அவர்கள் கொடுக்கும் விளக்கம் நமக்கே ஆச்சரியமாக இருக்கும். எல்லாக் காட்டுப் பிராந்தியத்திலும் வாழும் காடர்கள் காட்டில் பிரயாணம் செய்யும்பொழுது, காட்டையோ மலையையோ கடந்து செல்லும்பொழுதும் காட்டில் சத்தமாகப் போவார்கள். அல்லது சில சமயங்களில், "ஓஹா ஓஹா" என்றும் "டுயா—டுயோ" என்றும் கத்திக் கொண்டும் போவதுண்டு.

இதன் கருத்தை என்னுல் நீண்ட நாட்கள் வரை புரிந்து கொள்ள முடியவில்லை.

சில சமயங்களில், 'காட்டு விலங்குகள் இவர்களது கூக்குரலைக் கேட்டு ஓடி விடுவதற்காக இவர்கள் இப்படிக் கத்துகிருர்கள் போலும்' என்று நினைத்துக் கொண்டதும் உண்டு. மேலும் வேட்டைக்குப் போகும்பொழுது எல்லா காடர்களும் துப்பாக்கியையோ அல்லது வில்லையும் அம்பை யும் முதலில் வணங்கிப் பிறகு அவற்றைக் கையில் எடுத்துக்

கொண்டு கடவுளை வணங்கிச் செல்வர். பிறகு வேட்டைக்குப் போகும்பொழுது சகுனமும் பார்ப்பார்கள். என்ன சகுனம் தெரியுமா? "சில மிருகங்கள் கத்தக்கூடாது. சில பறவைகள் கத்தக்கூடாது. சில பறவைகள் குறிப்பிட்ட ஒரு திசையிலிருந்து மற்றொரு திசைக்குப் பறக்கக்கூடாது. குரங்குகள் சண்டையிடக்கூடாது. எருது முன்னால் வரக்கூடாது. இவைகள் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டே போகும்பொழுது, அங்கே விளையாடும் தங்கள் குழந்தைகளின் வாயிலிருந்து காட்டுமொழியில், "வேண்டாம் வேண்டாம்" என்ற வார்த்தைகள் வெளி வந்தால் அதை மிகவும் முக்கியமாகக் கவனிப்பார்கள். ஏனென்றால், அதனை அவர்கள் தங்களுடைய காட்டுக் குல தெய்வம் குழந்தைகள் வடிவமாக வந்து வேட்டைக்குப் போவதைத் தடை செய்கிறது' என்று கருதுகிறார்கள்.

பலவித சகுனங்கள் அவர்களுக்குத் தடை செய்தால் வேட்டைக்குப் போகாமல் வீடு திரும்பி விடுகின்றனர். இந்தச் சம்பவங்களை நேரில் கண்ட நான் சமீபத்தில் ஐதராபாத்திற்குச் சென்றபொழுது ஒரு நண்பரின் இல்லத்தில் இந்த விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். ஏனென்றால் அவர் ஒரு நல்ல சிக்காரி. இவைகளைக் கேட்டதும் அவர் சில மாதங்களுக்கு முன் தம்முடைய நண்பர் ஒருவருக்கு நடந்த ஒரு ரசமான சம்பவத்தைக் கூறினார்.

"இங்கு வாழும் சிக்காரிகள் பக்கத்திலிருக்கும் 'காசினு' மலைக் காடுகளுக்குத்தான் வேட்டைக்குப்போகும் பழக்கமுடையவர். இந்த மலையைச் சுற்றிலும் பல ஜமீன்தார்கள் பண்டைக்காலத்தில் வாழ்ந்தார்கள். மேலும் இந்தப் பக்கத்திலிருக்கும் ஜமீன்தார்கள், இந்தப் பக்கத்திலிருக்கும் மலையடிவாரத்திற்கு வேட்டைக்குச் சென்றால், மறுபக்கத்திலிருக்கும் சிக்காரிகளுடன் சில ஜமீன்தார்கள் மறு பக்கத்தில் சென்று வேட்டையாடுவதுமுண்டு.

ஒருநாள் ஒருவர் தம் துப்பாக்கியுடன் ஒரு மரத்தின் மேல் வெகுநேரம் உட்கார்ந்திருந்தார். மாலே சூரியன் மறையும்வரையில் ஒரு விலங்கும் அப்பக்கம் வராததைக் கண்ட அவர் வெறுப்புடன் மரத்தை விட்டுக் கீழே இறங்கும் சமயத்தில் அருகிலிருந்த ஒரு புதரில் கறுப்பாக ஏதோ போவது தெரிந்தது. அந்த மிருகம் குனிந்து குனிந்து போவதையும் கண்ட இவர் மரத்தின் மேல் இருந்தவாரே தம்முடைய துப்பாக்கியைத் தட்டிவிட்டார்.

''இன்று ஒரு புதிய மிருகத்தைச் சுட்டோம். நமக்கு அரசாங்கம் வெகுமதியும் கொடுக்கலாம் என்று வேகமாக மரத்திலிருந்து இறங்கி ஓடிவந்தார். அவர் வந்து பார்த்தபோது அங்கே ஒரு வாலிபன் குருதியில் படுத்திருந்தான். இன்னும் சில நிமிஷங்களில் அவன் உயிர் போய்விடும் என்பதைத் தெரிந்துகொண்டார் சுட்டவர். அவர் வாலிபனை அணைத்துக்கொண்டார்.

''என் உயிர் நண்பனுடைய மகனை நானே சுட்டு விட்டேன்'' என்று கதறினர்.

''அண்ணே! நீ ஒன்றும் வருத்தப்படாதே. என்னுடைய தாத்தா ஒரு ஜமீன்தார் என்பது உமக்குத் தெரியும். அவரும் வாலிபனுக இருக்கும்பொழுது, காட்டில் ஒருவனை மிருகம் என்று நினைத்துச் சுட்டுவிட்டார். அந்தப் பையனைப் பெற்ற தாய்க்கு எவ்வளவோ ஆறுதலும் பணமும் கொடுத்தும் அவளுடைய தாயுள்ளத்தில் துயரத்தைச் சாந்தப்படுத்த முடியவில்லையாம், மகனின் துயரத்தால் அந்தத் தாய் நோய்வாய்ப்பட்டு உயிர்போகும் சமயத்தில், தன் மகனைச்சுட்ட என் தாத்தாவை அழைத்தாளாம். என்னுடைய தாத்தாவும், ''ஐயோ பாவம் ஏதோ சொல்லப் போகிருள்'' என்று பணத்துடன் சென்ருர். ஆனல் அந்த மகனை இழந்த தாய் என் தாத்தாவைக் கண்டு, என் மகனைச்சுட்ட உன் குடும்பத்தில் உன்

மகனையோ, அல்லது உன் பேரனையோ யாராவது காட்டில் சுட்டுக் கொலை செய்வார்கள். என் மகன் துடி துடித்து மாண்டதைப்போல் உன் மகனோ, பேரனோ மாளுவான்'' என்று கூறியபின் நிம்மதியாக அவளுடைய தலை சாய்ந்த தாம். இதை அடிக்கடி என் தாத்தாவும், என் தகப்பனரும் கூறுவதுண்டு. அழுவதுண்டு. அன்று அவள் இட்ட சாபம், இவ்வளவு ஆண்டுகள் அகன்றும் மறையவில்லை. தாத்தாவின் வினை, பேரனுக்கு வந்தது. இன்றுதான், அன்று மகனைப் பலி கொடுத்த தாயின் உள்ளம் சாந்தி அடையும். ஆனால் என் தாயின் உள்ளமோ....! என்று கூறுவதற்குள் அவன் தலைசாய்ந்து விட்டது.

உயிர் பிரிந்த தன் நண்பனுடைய மகனைத் தோளில் தூக்கிக்கொண்டு ஆழ்ந்த சிந்தனையுடன் இருளில் நடந் தார் சுட்டவர்.

நேராக நண்பன் இல்லம் போவதா? அல்லது ஊர்க் காவல் நிலையம் போவதா? இவனுடைய தாய் என்ன சபிப்பாளோ அந்த சாபம் என் மகனுக்கோ பேரனுக்கோ நேர்வதைவிட அதற்கு நானே பலியாவது நலம் அல்லவா? என்று பலவாறு எண்ணிக்கொண்டு நேராகக் காவல் நிலையம் சென்றார்.

அதிகாரிகளிடம் எல்லாவற்றையும் கூறினர். பிறகு காவல் நிலையத்தாரிடமே குடிக்கச் சிறிது தண்ணீர் கேட்டா ராம். அந்தத் தண்ணீரைத் தான் சுட்ட பையன் வாயில் விட்டார். ஏனென்றால் அப்பையன் உயிர் விடும்போது காட்டில் தண்ணீர் கேட்டானும். ஆனால் தண்ணீர் உள்ளே போக தடுத்துவிட்டது. அக்காட்சியைக் கண்ட இவருக்கு, ''பாவியின் தண்ணீர் தனக்கு வேண்டாம்'' என்று அந்தப் பையன் கூறுவதைப்போல் இருந்ததாம். ஆகையால் மீதித் தண்ணீரை இவரே தம் வாயில் ஊற்றிக் கொண்டார். ஆனால் அந்தத் தண்ணீர் இவருடைய வாயிலும் போக

மறுத்துவிட்டது. ஏனென்றால், தன் நண்பன் மகனைச் சுட்ட பாவம், தன் குடும்பத்தைச் சேருவதைவிட தானே அதற்குப் பலியாவது நலம் என்ற துயரத்தால், அவர் அருந்திய தண்ணீர் உள்ளே போவதற்குள் அவருடைய தலையும் காவல் நிலையத்திலே சாய்ந்தது" என்று ஐதராபாத் நண்பர் கூறி முடித்தார்.

"இத்தகைய தொல்லைகளுக்கு அஞ்சித்தான் நான் துப்பாக்கி இல்லாமலே காடுகளில் பலருடன் கூடிக் கூக் குரலிட்டவாறு செல்கிறேன்" என்று நான் அந்த நண்பரிடம் கூறினேன்.

# 29. சொக்கண்ணு! சுக்கண்ணு!

நாம் உபயோகப்படுத்தும் உப்பைப் பற்றி எல்லா மதங்களிலும் வேதகாலம் முதல் பற்பல கதைகள் வழங்கி வருகின்றன. நாட்டுக்கு நாடு, ஊருக்கு ஊர், கிராமத் திற்குக் கிராமம், காட்டுக்குக் காடு உப்பைப்பற்றிப் பல கதைகள் மக்களால் இன்னும் எடுத்துக் கூறப்படுகின்றன.

நம் நாட்டில் உப்பைப்பற்றி வழங்கும் பல கதைகளை விட மேற்கு நாடுகளில் மிகவும் மட்டரகமான கதைகள் இன்றும் வழங்கி வருகின்றன.

செங்கல்பட்டு மாவட்டத்தில் வில்லியர்களின் ஜனத் தொகை அதிகம். அங்கே ஒரு நண்பருடைய தோட்டத்தில் வில்லியர்களின் குடும்பங்கள் சுமார் ஐம்பது வாழ்கின்றன. நண்பர் இல்லத்தில் தங்கிச் சில நாட்கள் அந்த வில்லியர் களின் வாழ்க்கைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்தேன்.

அந்த வில்லியரில் ஒருவன் பாலாற்றில் வலையின்றி பெரிய பெரிய நண்டுகளைப் பிடித்துக் கொண்டிருந்தான். அவனையே ஆச்சர்யத்துடன் பார்த்துக் கொண்ருந்தேன் நான். அதைக்கண்ட அவன், 'இதையே இப்படி ஆச்சர்ய

மாகப் பார்க்கிறீர்களே. இன்னும் எங்கள் குலத்தில் பாம்பைக் கையில் பிடிப்பதைக் கண்டால் எப்படிப் பார்ப்பீர்களோ. மேலும் இந்தத் தண்ணீர், கடல்நீர், சில கிணற்றுநீர், ஆற்றுநீர் எல்லாம் உப்பாக இருப்பதற்குக் காரணம் எங்கள் குலம்தான்' என்று ஒரு பெரிய சரித்திரப் பிரச்சனையைத் தூண்டினான்.

"என்னப்பா இது. கடல் நீர் உப்பாக இருப்பதற்கு உங்கள் வில்லியர்கள் எப்படிக் காரணமாயிருப்பார்கள்?" என்று அவன் வாயைக் கிளறி, அவன் கையில் நண்டு பிடிப்பதையும், 'கிளிக்' என்று புகைப்படம் பிடித்துக் கொண்டேன். புகைப்படம் பிடித்த 'குஷியில்' கதையைச் சொல்ல ஆரம்பித்தான். அது இது:

'பண்டைக் காலத்தில் உப்பு உண்டாவதற்கு முன் 'சொக்கண்ணு, சுக்கண்ணு' என்று இரண்டு வில்லிய சகோதரர்கள் இருந்தார்கள். இருவருக்கும் திருமணமாகி விட்டது. தம்பி—சுக்கண்ணு. மிகச் சோம்பேறி. எத்தகைய சோம்பேறி என்று கேட்கிறீர்களா? சோம்பேறியில் மூன்றும் ரகம்' என்றான்.

உடனே நான், 'என்னப்பா! சோம்பேறியில் முதல் ரகம், இரண்டாம் ரகம், மூன்றும் ரகம்' என்று வேறு இருக் கின்றனவா? என்று குறுக்கிட்டு அவன் வாயைக் கிளறினேன்.

வில்லி சொல்லத் தொடங்கினான். 'அடேடே இது வேறே தெரியாதா உங்களுக்கு! அதை முதலில் சொல்லு கிறேன். 'மூன்று சோம்பேறிகள் இணைபிரியாத நண்பர்கள். மூவரும் ஒருநாள் கடைக்குப் போனார்கள். 'என்னப்பா! இந்த வாழைப்பழம் விலை எவ்வளவு?' என்றான் முதல் சோம்பேறி.

மூன்று பைசா என்றான் கடைக்காரன்.

'சே! அதை உரித்துச் சாப்பிடவேண்டும்' என்று 'அது வேண்டாம்' என்று போய்விட்டான் முதல் சோம்பேறி. இதைப் பார்த்தான் இரண்டாவது சோம்பேறி. கடைக்காரனிடம் 'என்னப்பா! அதை உரித்துக் கொடுத் தால் எவ்வளவு காசு வேண்டும்?' என்று கேட்டான்.

'உரித்துக் கொடுத்தால் ஐந்து பைசா வேண்டும் என்று கூறினுன் கடைக்காரன்.

'சே, பிறகு வாயில் போடுவதற்கு ஓர் ஆள் தேட வேண்டும்' என்று கூறி அவனும் போய்விட்டான். இதைப் பார்த்தான் மூன்ருவது சோம்பேறி, கடைக்காரனிடம் 'என்னப்பா! நீயே உரித்து என் வாயில் போட என்ன விலே வேண்டும்?' என்று கேட்டான்.

'உன் வாயில் போட ஆறு பைசா வேண்டும்!' என்ருன் கடைக்காரன்.

'சரி வாழைப்பழத்தை உரித்து என் வாயில் போடு' என்று கூறிச் சாப்பிட்டான் மூன்ருவது சோம்பேறி.

இந்த மூன்ருவது சோம்பேறியைவிடப் பெரிய சோம்பேறி இந்தச் சுக்கண்ணு.

சொக்கண்ணுவுக்குக் குழந்தைகள் பிறந்தன. அவன் காலே முதல் மாலே வரையில் வயலில் கஷ்டப்பட்டு வேலே செய்வான். சுக்கண்ணுவும் அவன் மனேவியும் திருமண மானது முதல் சொக்கண்ணு வீட்டில் சாப்பிட்டு வந்தார்கள். சுக்கண்ணு ஒரு வேலேயும் செய்வதில்லே. சதா தூக்கம்தான். சொக்கண்ணு எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். அத் துடன் தன் வயலில், அவனே அழைத்துக்கொண்டுபோய் வேலே கொடுத்தான். ஆனுல் சுக்கண்ணு வயல் வேலேயில் ஒன்றுக்கு ஒன்று செய்து வைப்பான். ஏனென்ருல் அப்பொழுதுதான் வேலே கொடுக்க மாட்டான் அண்ணன்

என்பது அவன் எண்ணம். சொக்கண்ணுவுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்துவிட்டன.

வீட்டில் கஷ்டம். 'தம்பிக்கு போடுவதே தண்டச் சோறு. அத்துடன் அவன் மனைவிக்கும் வேறு போட வேண்டியுள்ளதே என்று சொக்கண்ணுவைத் திட்டிக் கொண்டிருந்தாள் அவன் மனைவி.

ஒரு நாள் சொக்கண்ணுவுக்குக் கோபம் வந்துவிட்டது. 'டேய் சோம்பேறி! உன் மனைவிக்கு சோறு வேண்டியதாக இருந்தால் நான் போடுகிறேன். நீ எங்கேயாவது குகைக் குள் நடந்து போனாலும் ஏதாவது புதையல் கிடைக்கும்' என்று கூறினான்.

மனிதனுடைய மனம் ஒரே விதமாக இராது. இப்படி அண்ணன் சொல்வது பரம்பரை வழக்கம்தான். ஆனால் அன்று சுக்கண்ணுவுக்கு ரோஷம் வந்துவிட்டது. 'சரி! நம்மை ஏதாவது ஒரு குகைக்குள் நடந்துபோய் மிருகத்தினிடம் சிக்கிச் சா' என்று கூறுவதற்கு பதில், 'புதையல் கிடைக்கும்' என்று மறைமுகமாகக் கூறுகிறான் போலும்' என்று நினைத்தான்.

மறு நாள் காலையில், அன்று புத்தர் எழுந்து போனதைப் போல் தூங்கும் தன் மனைவியை நன்றாகப் பார்த்து, 'பாவம் இவள் இன்றுமுதல் யாரிடமும் திட்டு வாங்காமல் வாழ்ந்தால் போதும்' என்று கூறி தங்கள் குலதெய்வத்தின் படத்தை எடுத்து அவள் பக்கத்தில் வைத்துவிட்டு, வெளியே நடந்தான்.

எங்கே போகிறோம்! எதற்காக நடக்கிறோம். இன்னும் எவ்வளவு தூரம் நடக்க வேண்டும்' என்று சிந்தனை செய்யாமல் நடந்தான். ஒரு குகை தெரியும் வரையில் நடந்தான்.

நாட்களும் பல அவனோடு நடந்து சென்றன. அவன் கடைசியில் ஒரு மலையின்மேல் நடந்து போனபொழுது ஒரு

குகை தெரிந்தது. முகமலர்ச்சியுடன் அந்தக் குகையை நோக்கி நடந்தான். குகைக்குள்ளும் நடந்தான். ஆனால் குகைக்குள் சிறிது தூரம் சென்றதும் மனிதர்களுடைய எலும்புகளும், பல விலங்குகளின் எலும்புகளும் அவனுடைய காலில் தட்டுப்பட்டன.

குகைக்குள் லேசாகச் சிறிது வெளிச்சமும் தெரிந்தது. ஆனால் ஒளி வரும் வழி தெரியவில்லை. ஆகையால் வழிமேல் விழி வைத்து நடந்தான். பிறகு மற்றொரு வழியின்மூலம் குகையிலிருந்து வெளியில் வந்தான். அங்கே மனிதர்களுடைய நடமாட்டமே தெரியவில்லை. மிருகங்களும் காணப்படவில்லை. ஆனால் பெரிய காடு ஒன்று இருந்தது. சிறிது தூரம் சென்றதும் ஏதோ ஒரு குலம் மனிதக் குரங்கைப்போல் நின்று கொண்டிருந்தது. அதை அவன் கவனித்தான். அதன் நெற்றியில் ஒரே கண் இருந்தது. கோரப்பற்கள் இருந்தன. சடை முடியுடன் இருந்த அது இவனைப் பார்த்தது; 'டேய்; இவனைப் பிடித்துக் கொதிக்கும் கொப்பரை எண்ணெயில் போடு' என்று தன்னுடைய சகாக்களிடம் கூறியது. அப்படித்தான் அந்தப் பூதங்கள் பல உயிர்களையும், பல மிருகங்களையும் கொதிக்கும் எண்ணெயில் போட்டுச் சாப்பிடுவது வழக்கமாம். அதற்குச் சுக்கண்ணு 'சபாஷ்! சபாஷ்! கொளுத்து கொளுத்து. எண்ணெய் நன்றாகக் கொதிக்கட்டும்!' என்றான். 'கொதிக்கும் எண்ணெயைக் கண்டும் இவன் பயப்படவில்லையே. இவனிடம் என்ன சக்தி இருக்கிறதோ?' என்று நினைத்த தலைமைப் பூதம், டேய்! நிறுத்து இவனை எண்ணெயில் போடாதே. அவனை தன்னுடைய ஊருக்குப் போகச் சொல்லு' என்று கூறியது. சுக்கண்ணு பார்த்தான்; இதுதான் சமயம் என்று கருதி, 'நான் போக மாட்டேன். என்னை ஏன் நீங்கள் தொட்டீர்கள். நீங்கள் தொட்டதால் என் உடம்பில் இப்பொழுது 'சோம்பேறி' என்ற தெய்வம் ஏறி விட்டது. ஆகையால் எனக்கு ஏதாவது அன்பளிப்புக் கொடுக்க வேண்டும் என்று அங்கேயே உட்கார்ந்து விட்டான்.

பார்த்தது தலைமைப் பூதம். பிறகு 'சரி' என்று ஓர் 'இயந்திரக் கல்' கொடுத்து அதனை வேலை தொடங்கச் செய்யும் ஆரம்ப மந்திரத்தையும், அது சுற்றும்பொழுது அதை நிறுத்தும் மந்திரத்தையும் சுக்கண்ணுவுக்குக் கற்பித்தது.

'சுக்கண்ணு! இதன் மூலம் என்ன பொருள் வேண்டுமோ அதைப் பெறலாம். எங்கே போகவேண்டுமோ அங்கெல்லாம் போகலாம்' என்று கூறியது.

சுக்கண்ணு அதை வாங்கிக் கொண்டதும் அதன்மேல் உட்கார்ந்து மந்திரத்தைச் சொல்லி, 'ஏய்! என்னைக் கொண்டுபோய் என் ஊரில் விடு' என்று கூறினான்.

உடனே இயந்திரம் சுக்கண்ணுவை அவனுடைய ஊரில் கொண்டு சென்றுவிட்டது. பிறகு சுக்கண்ணு, 'ஏய்! எனக்கு ஒரு பெரிய வீடு கட்டி, அதில் எனக்கு வேண்டிய சாமான்களைக் கொண்டுவந்து வைத்துவிடு. பிறகு அந்த வீட்டைச் சுற்றிலும் சுவர் ஒன்று எழுப்பவேண்டும், பிறகு என்னுடைய மனைவியைக் கொண்டுவந்து, என் எதிரில் நிறுத்தவேண்டும்' என்று கட்டளையிட்டான். அப்படியே எல்லாக் காரியங்களும் செய்து முடித்தது அந்த யந்திரம். கடைசியில் அவன் மனைவியும் எதிரில் நின்றாள்.

நீண்ட நாட்களாகத் தன் கணவனைக் காணாத மனைவி தன் கணவனுடைய செல்வத்தைக் கண்டதும் ஒன்றுமே தோன்றாதவளாய் அப்படியே அவனைக் கட்டி அணைத்துக் கொண்டாள். பிறகு சமையலறைக்குச் சென்றாள். அங்கே சமையல் செய்யப் பல வேலைக்காரர்கள் இருந்தார்கள். எஜமானியைக் கண்டதும், எல்லோரும் வணங்கினார்கள். ஒருத்தி சோபா கொண்டுவந்து போட்டாள். ஒருத்தி பலவித பலகாரங்களைக் கொண்டுவந்து வைத்தாள். இவைகளை எல்லாம் கண்ட சுக்கண்ணுவின் மனைவி என்ன சொல்வது, என்ன செய்வது என்று தெரியாமல் ''என்னை

என் கணவர் இங்கே கொண்டுவந்து வைத்தாரே! என் தாய்வீடு மிகப் பெரியது, அங்கே நூற்றுக்கணக்கான வேலைக்காரர்கள் இருந்தார்கள். என்னவோ கணவன் மீதுள்ள அன்பினால் இங்கே வாழ எனக்கு மிக்க சந்தோஷம் தான்" என்று டம்பமாகச் சொல்லிக் கொண்டாள். இப்படிச் சுக்கண்ணுவும் அவன் மனைவியும் வாழ்ந்து கொண்டிருந்தபொழுது ஒரு நாள் அந்த வழியாகச் சொக்கண்ணு சென்றான். தன்னுடைய தம்பி சுக்கண்ணுவுக்கு யோகமடித்தது' என்று கேள்விப்பட்டான். கடைசியில் தம்பி எல்லா செய்திகளையும் அண்ணனிடம் கூறினான்.

ஒருநாள் அண்ணன் வந்தான், "சுக்கா! சற்று நேரம் அந்த இயந்திரத்தை எனக்குக் கொடு. என் வயலில் வேலை செய்யும் கூலியாட்களுக்குக் கஞ்சி கொடுத்து விட்டு மறுபடியும் கொண்டுவந்து கொடுத்துவிடுகிறேன். இயந்திரத்தை வேலை செய்யச் சொல்லும் ஆரம்ப மந்திரம் மட்டும் சொன்னால்போதும், நிறுத்தும் மந்திரம்வேண்டாம்" என்று கூறி ஆரம்ப மந்திரத்தை மட்டும் கற்றுக் கொண்டு இயந்திரத்தை எடுத்துச் சென்றான் சொக்கண்ணு.

இயந்திரத்தை எடுத்துக்கொண்டு வயலுக்குச் சென்ற சொக்கண்ணு, தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி, "கூலியாட்களுக்கு கஞ்சியை ஊற்று" என்று கூறினான். இயந்திரம் மந்திரத்தின் சக்தியால் கஞ்சியைக் கொட்டுக் கொட்டென்று கொட்டியது. வயலில் கூலியாட்கள் எல்லோரும் நன்றாகக் கஞ்சி குடித்தார்கள். பிறகும் இயந்திரம் கஞ்சியைக் கொட்டிக் கொண்டே இருந்தது. அந்தக் கிராம மக்கள் எல்லோரும் கஞ்சி குடித்தார்கள். மேலும் இயந்திரம் கஞ்சியைக் கொட்டிக் கொண்டே இருந்தது. வயல் முழுவதும் கஞ்சி நிரம்ப ஆரம்பித்தது. பிறகு ஆறாக ஓடத் தொடங்கியது. மக்கள் எல்லோரும் கஞ்சியில் நடக்க ஆரம்பித்தார்கள்.

சொக்கண்ணு இயந்திரத்தை நிறுத்தும் மந்திரத்தை வேண்டாம் என்று சொன்னதன் பலன் இது.

கடைசியில், சொக்கண்ணு சுக்கண்ணுவிடம் ஓடினன். "டேய்! தம்பி கஞ்சி போதும் போதும், ஓடி வா! சுக்கண்ணு ஓடினன். மந்திரத்தைக் கூறி நில் என்ருன். உடனே இயந்திரம் நின்றது.

"அப்பா சுக்கா! இது எனக்கு வேண்டாம். நீயே இதைக் கையோடு கொண்டு போ. அதுவே எனக்குச் செய்யும் உதவி" என்று கூறினன் சொக்கண்ணு. சுக்கண்ணுவின் திறமையைக் கேள்விப்பட்டு, ஒருநாள் சுக்கண்ணுவின் மாமன் அவனைக் காணவந்தார்.

அவர் ஒரு கப்பல் மாலுமி, அவர், "நான் கப்பலில் வெளிநாடுகளுக்குப் போகிறேன். சில நாடுகளில் உப்பே கிடையாது. இந்த இயந்திரத்தால் அந்தந்த நாடுகளில் உப்பு வியாபாரம் செய்துவிட்டு, திரும்பவும் கொண்டு வந்து கொடுத்துவிடுகிறேன்" என்று கூறி, தொடங்கும் மந்திரத்தை மட்டும் கற்றுக்கொண்டு இயந்திரத்துடன் கப்பலில் பிரயாணமானுர். கப்பல் நடுக்கடலில் போன பொழுது, கப்பலிலிருந்த உப்புத் தீர்ந்துவிட்டது.

உடனே மாலுமி மந்திர இயந்திரத்தை எடுத்து தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி, "உப்பைக் கொட்டு" என்று கூறினர்.

அவ்வளவுதான், மூட்டை மூட்டையாக உப்புக் கொட்ட ஆரம்பித்தது. கப்பலே நிரம்பிவிட்டது. கப்பலில் இருந் தவர்கள் எல்லோரும் உப்பை வாரி வாரிக் கடலில் போட்டார்கள்.

'ஏ இயந்திரமே! போதும் உப்பு. நில்! நில். கப்பல் முழுகிவிடும் நிலையில் இருக்கிறது நில்' என்று கத்தினன் மாலுமி.

இயந்திரம் நின்ற பாடில்லே. சுக்கண்ணுவை எப்படிக் கூப்பிடுவது என்ன செய்வது என்று ஒன்றும்' தோன்ருத வனுய் மாலுமி நின்ருன். சற்று நேரத்தில் கப்பல் கடலில் முழுகும் நிலேயில் இருந்தது.

அந்த நிலேயைக் கண்ட மற்றவர்கள், உடனே இயரந்திரத்தை எடுத்துக் கடலில் போட்டார்கள். அன்று முதல் இன்றுவரையில் அந்த மந்திர இயந்திரம் கடலில் உப்பைக் கொட்டிக் கொண்டே இருக்கிறது. கடலின் மூலம் இன்று உலக மக்களுக்கு உப்பு கிடைக்கின்றது.

"அன்று எங்கள் வில்லியரின் மூதாதையர் செய்த ஒரு தர்மம் இன்றுவரையில் நிலேத்திருக்கின்றது. இல்லாவிட்டால் இன்று நமக்கு ஏதுங்க உப்பு! ஆகையால் தான் இன்று கடல் நீர் உப்பாக இருக்கிறது" என்று தன் குலத்தைப் பற்றிப் பெருமையாகச் சொல்லிக் கொண்டான் வில்லி.

இது உண்மையோ! பொய்யோ தெரியாது. அவன் கூறியதை நானும் உங்களுக்குக் கூறினேன். ஆனல் ஒன்று. வலேயின்றிக் கையால் நண்டுபிடிப்பதும், ஓடும் பாம்பைக் கையால் பிடிப்பதும், மோப்பம் இவர்களுக்கு குடும்பப் பழக்கம். அதை நானே நேரில் கண்டேன்.

# 30. கறுப்பக் கோனர்

விக்கிரமசிங்கபுரம், அம்பாசமுத்திரம், சேரன் மாதேவி முதலிய இடங்களிலிருக்கும் மலைகளில் சுற்றுப் பிரயாணம் முடிந்தது. மேற்கண்ட இடங்களில் சுமார் முப்பதாண்டுகளாகப் பல வெள்ளைக்காரர்களுடன் வேட்டைக்குப் பல காடுகளுக்குச் சென்று அனுபவம் அடைந்தவர். அவர் பெயர் திரு. ஞானப் பிரகாசம் என்பது. அவர் விக்கிரமசிங்கபுரத்தில் ஓர் ஆங்கிலேயருக்குச் 'சிக்காரி'யாக இருந்தபோது நடந்ததொரு ரசமான சம்பவம் இது. ''விக்கிரமசிங்கபுரத்தின் சுற்றுப்புறங்களில் பெரிய காடுகள் சமீப காலம்வரையில் இருந்தன. இந்தக் காடுகளில் சுற்றுப் புறங்களிலிருக்கும் ஏழை மக்கள் புகுந்து விறகு எடுப்ப துண்டு. காட்டு இலாகா அதிகாரிகள் எவ்வளவோ தடுத்தும், பயமுறுத்தியும் பார்த்தார்கள். கிராமவாசிகள் விறகு எடுப்பதை நிறுத்தவில்லை. சிலரைத் தண்டித்தும் பார்த்தார்கள். தண்டனைக்குப் பின்னும் பலர் வந்து விறகு எடுப்பதைக் கண்ட அதிகாரிக்கு என்ன செய்வதென்றே தெரியாமல் போனது. கடைசியில் ஒரு ''மனிதனைத் தின்னும் புலி'' அந்தக் காட்டில் வந்து வாழ ஆரம்பித்தது. விறகு எடுக்கச் சென்றவர்களை எல்லாம் அது கொலை செய்து வந்தது. அந்தப் புலி அந்தப் பக்கத்துக் காடுகளில் இருக்கிறது என்ற செய்தி பரவியது. ஆனால் அந்தக் காடுகளில் விறகு எடுக்கச் செல்வதை நிறுத்தவில்லை.

கடைசியில் கலெக்டரிடமும் புலியைப் பற்றித் தெரியப் படுத்தினர் அதிகாரி. காட்டில் வந்து விறகு எடுக்கும் ஏழை மக்களில் சுமார் இருபது பேர்களுக்கு மேல் தீர்த்து விட்டது புலி.

இவைகளைக் கேள்விப்பட்டதும் அந்தப் புலியை வேட்டையாடிக் கொல்லும்படி கலெக்டர் உத்தரவுபோட்டார். உடனே அந்தப் புலியைச் சுடப் பல சிக்காரிகள் அந்தப் பகுதிக் காடுகளுக்குப் படையெடுத்தனர். எத்தனையோ பேர் வந்தார்கள். யார் வந்தாலும் அந்தப் புலி காட்டை விட்டுப் போவதுமில்லை. ஏமாறும் மக்களைக் கண்டால் கொல்லாமலுமில்லை.

அந்தப் புலியை யார் வேட்டையாட வந்தாலும் சரி, விக்கிரமசிங்கபுரத்திலிருக்கும் கறுப்பக்கோனார் என்பவர் தான் வந்த சிக்காரியுடன் துப்பாக்கி சுமந்துபோவது வழக்கம். அப்படி யாரும் வேட்டைக்கு வரவில்லையென்றால் அண்ணன் வீட்டில் சாப்பிட்டுச் சாப்பிட்டுத் தூங்க வேண்டியதுதான் கறுப்பக்கோனரது வழக்கம். சில சமயங் களில் அண்ணியும் முகத்தை சுளித்துக் கொண்டுதான் சாப்பாடு போடுவாள். கடைசியில் இந்தியாவிலேயே புலி வேட்டையில் பெயரெடுத்த ஓர் ஆங்கிலேயருக்கு அழைப்பு அனுப்பப்பட்டது. அவரும் வந்தார். அவருடன் கறுப்பக் கோனரைத்தான் ஊர்ப்பஞ்சாயத்தார் அனுப்பினர்கள். ஏனென்றால் பலருடன் அந்தப் புலியை வேட்டையாடப் போனதால், கறுப்பக்கோனருக்கு நல்ல அநுபவமுண்டு அல்லவா? எவ்வளவோ துரைகளுடன் கறுப்பக்கோனர் வேட்டைக்குப் போனவர், பகலிலும் இரவிலும் காட்டில் நடந்து நல்ல பழக்கமுடையவர். ஆனல் இந்தத் துரையுடன் அன்று காட்டில் பிரயாணம் செய்தது, ஒரு புதிய மாதிரி யாக இருந்ததாம். புலி வேட்டைக்குச் சென்றதும் துரை ஒரு துப்பாக்கியைத்தான் வைத்துக்கொண்டார். கறுப்பக்கோனரிடம் ஒரு துப்பாக்கியைக் கொடுத்து விட்டார்.

சுமார் இருபது அடி போனதும் துரை ஐந்து நிமிஷங் கள், ''டக்'' என்று நின்று விடுவாராம். மறுபடியும் இருபதடி நடந்து போனதும் துரை மறுபடியும் ஐந்து நிமிஷங்கள் நின்று நான்கு பக்கங்களிலும் கவனிப்பாராம். ஏன் இப்படிக் கவனிக்கவேண்டும்?

மனிதனைத் தின்னும் புலி சாதாரணமாய் மனிதர்களைக் கண்டால், உடனே மேலே பாய்ந்துவிடாது. அந்த மனிதன் பின்னால் சுமார் மூன்று நான்கு மைல்கள் நடந்து போகும்.

''எத்தனை பேர் வந்திருக்கிறார்கள்? யார் யார் எங்கே இருக்கிறார்கள்? யார் யார் கையில் என்னென்ன இருக் கின்றன? கடைசியில் வரும் ஆள் எவ்வளவு தூரத்தில் வருகின்றான்? யாராவது தனியாகப் பின் தங்கிப்போகிறார் களா?'' என்பதையெல்லாம் கவனித்துத்தான் அது மனிதன்மேல் பாயும். எப்பொழுதும் மனிதனைத் தின்னும் புலி, மனிதர்கள் கும்பலாக இருந்தால் சமயம் வரும் வரை யில் காத்திருக்கும். ஆகையால் துரை காட்டில் நடந்து செல்லும்பொழுது திடீர் திடீரென்று பின்னால் திரும்பிப் பார்த்துகொண்டே போனார். மேலும் துப்பாக்கிகளைத் தயாராக வைத்துக் கொள்ளுங்கள். யார் கண்ணில் புலி பட்டாலும் உடனே என்னைக் கேட்காமலே சுடுங்கள்'' என்றும் கூறி இருந்தாராம். இந்த துரை செய்வதெல் லாம் கறுப்பக்கோனுருக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது. முதலில் சரியான இடம் பார்த்துக் கறுப்பக்கோனுரையும் கலந்து ஆலோசனை செய்து ஒரு மரத்தில் மூன்று பரண்களைக் கட்டினார்கள். முதலில் கட்டிய பரண்மேல் ஒருவரும் இருக்கமாட்டார்களாம். ஆனால் அந்தப் பரண்மேல் வெளிப்பக்கம் நீட்டினாற்போல் மூங்கில் ஈட்டிகளைக் கட்டி வைத்திருப்பார்கள். திடீரென்று புலி முதல்பரண்மேல் பாய்ந் தால், அந்த மூங்கில் ஈட்டிகளால் குத்தப்பட்டுப் புலி கீழே விழுந்துவிடும். அதற்கு மேலிருக்கும் இரண்டாவது பரண்மேல், துப்பாக்கியுடன் உட்கார்ந்திருப்பார்கள்.

அதற்கு மேல் மூன்ருவது பரண்மேல்தான் சாமான்கள், ஆகாரம், தண்ணீர், இரவில் குளிர் எடுத்தால் போர்த்திக் கொள்ளக் கறுப்புக் கம்பளி முதலியவைகளை வைத்துக் கொண்டு வேலைக்காரர்களும் துப்பாக்கி இல்லாத நண்பர் களும் இருப்பார்கள். இதுதான் எல்லாப் பரண்களுக்கும் உயரமானது. மேலே இருப்பவர்கள், கீழே இரண்டாவது பரணில் இருப்பவர்களுக்கு வேண்டிய சாமான்களை மேலிருந்து கயிற்றின் மூலம் அனுப்புவார்கள்.

இவ்வளவு முன்னேற்பாடுகளுடன் வந்த துரை, மூன்று நாட்கள் மரத்தின் மேல் இருந்தார். அவர்களுடன் கொண்டு செல்லப்பட்ட ஆடும் சிறிது தூரத்தில் தரையில் கட்டப்பட்டிருந்தது. அந்த ஆட்டுக்கு வேண்டிய புல்லும் தண்ணீரும் ஆட்டின் அருகில் வைக்கப்பட்டிருந்தன. நான்காம் நாள் மிகவும் ஏமாற்றத்துடன் மரத்தை விட்டு இறங்கினுர்கள். அவர்கள் திரும்பி வரும்பொழுது, "மனிதனைக் கொல்லும் புலி வந்து நம்மைப் பார்த்துவிட்டுப் போயிருக்கிறது" என்று புலியின் கால் சுவடுகளைக் கண்டு துரை கூறினுராம். புலி வேட்டைக்கு வந்த துரையும் திரும்பி ஊருக்குப் போய்விட்டார். இவைகளை எல்லாம் கேள்விப்பட்ட அந்த ஊர் கலெக்டர், "அந்த மனிதனைக் கொல்லும் புலியைச் சுடும் நபருக்கு நல்ல வெகுமதி கொடுக்கப்படும்" என்று தெரியப்படுத்தினுர்.

இதைக் கேள்விப்பட்டதும் நூற்றுக்கணக்கான சிக்காரிகள் வந்து அந்தக் காட்டில் குவிந்தார்கள். கடைசி யில் குறைந்தார்கள். இவைகளை எல்லாம் கறுப்பக்கோனுர் பார்த்தார்.

"நமக்கோ லைசன்ஸ் கிடையாது. நான் வேட்டைக்கு வரும் நபருடைய துப்பாக்கியைச் சுமந்துகொண்டு போவ துடன் சரி. இருந்தாலும் எப்படியும் இந்தப் புலியை சுட வேண்டும்" என்று முடிவு செய்தார். நேராகக் கலெக்டரிடம் போய் தன்னைப்பற்றிக் கூறிக்கொண்டார்.

"உனக்குச் லைசன்ஸ் இருக்கிறதா? என்று கேட்டார் கலெக்டர்.

இல்லை! ஆனால் அனுபவமுள்ளவன். அந்தப் புலியை எப்படிச் சுடவேண்டும் என்பதே தெரியாதவர்கள்தான் இதுவரையில் வந்திருக்கிறார்கள். நீங்கள் உத்தரவும் லைசன்ஸும் கொடுத்து உதவினால் நான் அந்தப் புலியைச் சுடுகிறேன்" என்று கறுப்பக்கோனார் கூறினார்.

சரி! என்று கலெக்டர் துப்பாக்கியையும், சில குண்டுகளையும் கொடுத்தார்.

கறுப்பக்கோனார் துப்பாக்கியுடன் காட்டுக்குள் பிரவேசித்தார். தான் கொண்டுபோன ஆட்டை எதிர் மரத்தில் கட்டி விட்டார். பிறகு எதிர் பக்கத்திலிருந்த நல்ல உயரமான மரத்தின் கிளையில் ஏறி, நன்றாக உட்கார்ந்துக்கொண்டு, தந்திரமாக மரத்தைவிட்டுக் கீழே இறங்கிப் போகலாமென்று நினைத்தாராம். திடீரென்று ஆடு எதையோ கண்டு மிரண்டு மிரண்டு கத்தியதாம். உடனே கறுப்பக்கோனார் தம் துப்பாக்கியை எடுத்துத் தயாராகப் பிடித்துக்கொண்டு இங்குமங்கும் பார்த்தபோது மரம்வெட்டி என்று ஏமாற்றமடைந்த புலி தன் எதிரில் நின்று உறுமிக்கொண்டிருந்ததைக் கண்டு விட்டார். மனிதனைக் தின்று ருசிகண்ட அந்தப் புலி, அந்த ஆட்டைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. சாதாரணமாய் காட்டில் ஒரு மனிதனைத் தின்று ருசிகண்ட புலி பிறகு மறுபடி எந்த விலங்கையும் சாப்பிடப் பிரியப்படாது. ஏனென்றால் எல்லா இறைச்சிகளையும்விட, மனிதனுடைய இறைச்சி மிகவும் ருசியுள்ளது.

ஆகையால் அன்று வந்த புலியும் மனிதனுடைய வாடையை அறிந்து இங்குமங்கும் மரத்தின் மேலும் பார்த்ததாம். உடனே கறுப்பக்கோனார் குறிபார்த்துத் தலையில் சுட்டார். புலி துடிதுடித்து கீழே சாய்ந்தது. "ஒருவராலும் சுடமுடியாத இந்தப் புலியைச் சுட்டுவிட்டோம்" என்ற

சந்தோஷத்தால், புலி முற்றிலும் இறந்துவிட்டதா? என்று கூட நிதானித்துப் பார்க்காமல், உடனே மரத்தைவிட்டுக் கீழே இறங்கிக்கொண்டிருந்தார். பாதி மரம் இறங்கும் பொழுது, ஏதோ ஓசை கேட்டதாம். உடனே கோனர் கீழே பார்த்தார். அப்பொழுது புலி தள்ளாடிக்கொண்டே அவர் இருக்கும் மரத்தடியில் வந்துவிட்டது. இதைக் கண்டதும் கறுப்பக்கோனர் மறுபடியும் மரத்தின்மேல் ஏறுவதற்குள் புலி தாவி அவருடைய தொடையின் சதையைப் பிடித்து இழுத்தது. தொடைச்சதை புலியின் வாயில் போய்விட்டது. ஆனால் புலி நன்றாகத் தாவிப்பிடிக்கவும் நிற்கவும் முடியாமல் சாய்ந்துவிட்டது. கறுப்பக்கோனர் மரத்தின்மேல் ஏறி மறுபடியும் புலியைச் சுட்டார். புலி முழுதும் மாண்டே போயிற்று.

ஆனால் கறுப்பக்கோனர் மரத்தின் மேலிருந்தவாறே துப்பாக்கியுடன் மயங்கிக் கீழே விழுந்தார். விழும்பொழுது துப்பாக்கியின் "குதிரை" தானாகத் தட்டப்பட்டு மூன்றாவது தடவையாக வெடித்தது.

"அன்று கறுப்பக்கோனர் மட்டும் தனியாகப் புலி வேட்டைக்குக் காட்டுக்குள் போயிருக்கிறார்" என்ற செய்தி காட்டுத் தீயைப்போல் பரவியது. அன்றிரவு சுமார் ஏழு எட்டு மணிக்குள் மூன்று குண்டுகளின் ஓசை தொடர்ந்து கேட்டதால் கிராமவாசிகளுக்குச் சந்தேகம் உண்டானது. ஆகையால் எல்லோரும் தீப்பந்தங்களைப் பிடித்துக்கொண்டு அடர்ந்த காட்டுக்குள், "ஓ! ஆ!" என்று கத்திக்கொண்டே நடக்க, நடக்க எங்கிருந்தோ ஆடு அலறும் சத்தத்தைக் கேட்டார்கள். உடனே கிராமவாசிகளுக்குச் சந்தேகம் அதிகமாகிவிட்டது. ஆட்டைப் புலி ஒன்றும் செய்யவில்லை போலும். ஆனால் கறுப்பக்கோனருக்கும் புலிக்கும்தான் சண்டை நடந்திருக்கும் என்று நினைத்துவிட்டார்கள். பிறகு அருகில் போனபொழுது கறுப்பக்கோனர் இரத்த வெள்ளத்தில் புலியின்மேல் விழுந்து கிடப்பது தெரிந்தது.

ஆனால், அவர் அருகில்போய்ப் பார்க்க ஒருவருக்கும் தைரியம் இல்லை.

கடைசியில் புலி மாண்டுவிட்டது என்று தெரிந்ததும் அருகில்போய்க் கறுப்பக்கோனாரைத் தூக்கினார்கள். கறுப்பக்கோனாருக்குக் கொஞ்சம் உயிர் இருந்தது. உடனே அவரைத் தூக்கிக்கொண்டு ஆஸ்பத்திரிக்கு ஓடினார்கள். அச்சமயத்தில் அந்த ஆஸ்பத்திரியில் ஒரு கெட்டிக்கார வைத்தியர் இருந்தார். "கறுப்பக்கோனாருக்குத் தொடையில் எலும்புதான் இருக்கிறது. தொடை இறைச்சி முழுவதையும் புலி எடுத்துவிட்டது. ஆகையால் கறுப்பக் கோனார் உயிர் பிழைக்கவேண்டுமானால், உடனே எனக்குச் சுமார் முப்பது உடும்புகள் வேண்டும். அவற்றின் சதைகளை வைத்துக் கட்டினால்தான் கறுப்பக்கோனார் பிழைக்க முடியும்!" என்று கூறினார்.

உடனே கிராமவாசிகள் நாலா பக்கங்களிலும் பறந்தார்கள். டாக்டருக்குத் தேவையான உடும்புகளைக்கொண்டு வந்து கொடுத்தார்கள். உடும்புகளின் இறைச்சியைக் கறுப்பக்கோனாரின் தொடையில் வைத்து டாக்டர் கட்டினார். சுமார் பத்துப் பதினைந்து நாட்கள் ஆனதும் கறுப்பக் கோனாரை ஒரு லாரியில் படுக்கவைத்து சுமார் இருபது ஊர்களில் சுற்றுப்பயணம் செய்தார்கள் கிராமவாசிகள்.

ஒவ்வொரு வீட்டாரும் தந்த அன்பளிப்புகள் கறுப்பக் கோனார் படுத்துப் பயணம் செய்த லாரியை நிறைத்து விட்டன, மூன்று மாதங்கள் படுக்கையில் இருந்தார் கறுப்பக்கோனார்.

"என்னுடைய புதிய தொடை மற்றதைக் காட்டிலும் பலமானதாகி விட்டது" என்று அவரே என்னிடம் கூறுவார். அவர் சுகமாகியபின் தம் வீட்டுக்குச் சென்றார்.

ஒரு நாள் கலெக்டரின் கார் அவருடைய வீட்டுக்கு வந்து நின்றது. "கோனாரே! நீர் வீரர், உமக்கு நான் ஐந்து ஏக்கர் நிலம் தருகிறேன் உமக்கு எங்கே வேண்டுமோ அங்கே தருகிறேன்" என்று கூறி அவர் கேட்ட இடத்திலேயே நிலம் கொடுத்தார். அன்றுமுதல் கோனார் தம் அண்ணனிடமும் அண்ணியாரிடமும் ஏச்சுக் கேட்காமல் தம் நிலத்தில் உழைத்துச் சாப்பிட்டுச் சுதந்திரமாக வாழ்ந்து வந்தார். எனக்குக் கறுப்பக்கோனார் மிகவும் நெருங்கிய நண்பர்" என்று கூறி முடித்தார் நண்பர் ஞானப்பிரகாசம்.

"ஒவ்வொருவரும் கறுப்பக்கோனாரைப் போல் பல வழிகளில் பிறருடைய உதவியை நாடாமல் சுதந்திரமாக வாழ்ந்தால் தற்காலத்தில் இருக்கும் நிலைமையில் எவ்வளவு நலம் பயக்கும்!" என்று கூறி விடை பெற்றேன்.

# 31. சோதனை மேல் சோதனை...!

நான் காட்டில் வாழும் காடர்கள் சொல்லும் பல பரம்பரைக் கதைகளைக் கேட்டிருக்கிறேன். சில கதைகள் சரித்திரத்தையே மிஞ்சும் அளவுக்கு இருப்பதுண்டு. சில கதைகள் சரித்திரத்துடன் தொடர்புள்ளதாகவும் இருப்பதுண்டு. சில கதைகள் கேட்கக் கேட்கச் சிந்தனைக்கு சுவாரஸ்யமாகவும், ஆச்சரியமாகவுமிருக்கும். அப்படிக் கேள்விப்பட்ட பல கதைகளில் இது, நான் மைசூரில் தங்கியிருந்தபோது கன்னடப் பெரியவர் ஒருவர் சொன்ன செய்தியாகும்:

"நாமோ மரங்கள், காடுகள், பரந்த வயல்கள், மலைகள், காட்டையடுத்து அமைந்த ஓடைகள், ஆறுகள் இவற்றோடு கொண்டிருந்த முக்கிய தொடர்பை இழந்துவிடுகிறோம். பெரிய நகரங்களில் அமைந்த சூழ்நிலை நம்மைத் திணற அடிப்பதால், அதிலிருந்து மீண்டு, ஓய்வு காண வேண்டி இயற்கையிடம் நாட்டம் கொள்கிறோம். இந்த அளவுக்குத் தற்கால மனிதனுடைய இயல்பான போக்கு நமக்குப் புரிகிறது. ஆனால் இன்று உங்களைக் காடு கவர்ந்துவிட்டது. மக்களும் காடுகளில் பிரயாணம் செய்தால் காடு அவர்களையும் கவர்ந்துவிடும். காட்டில் சந்தடியோ, கூச்சலோ, கும்பலோ அப்புறம் பிடிக்கவே பிடிக்காது. எனக்கு அப்படித்தான் ஆகிவிட்டது. மேலும், இன்று நான் வாழுமிடமும் அப்படித்தான் இருக்கிறது.

கடந்த ஆறுமாதங்களாக இந்தக் காட்டில் மொட்டையாய் நின்ற மரக்கிளைகளில் சிறிய இலைகள் துளிர் விடுகின்றன. பனி உருகி பசும் புல்லால் போர்த்தியது போன்ற காட்சியளித்துக் கொண்டிருக்கிறது அக்காடு. காடு முழுவதும் புத்துயிரும், புதிய களையும் பெற்று விளங்கின. காற்றிலே நல்ல நறுமண வாசனை எங்கும் பரவிக் கொண்டிருந்தது. அநேகவிதப் பறவைகள் மரங்களில் அமர்ந்து இனிய கீதம் எழுப்புகின்றன. எங்கும் வண்டுகளின் ரீங்காரம். பனி உருகி வரும் நீரோட்டக் கரைகளில் அமர்ந்திருக்கும் ஆயிரக்கணக்கான நீர்ப் பறவைகள், புழுக்களைத் தின்பதில் கவனத்தைச் செலுத்துகின்றன. ஆணும் பெண்ணுமான ஜோடி அன்னங்கள் விளையாடுகின்றன. ஆங்காங்கு மான் கூட்டங்கள் குதித்து விளையாடுகின்றன. ஆடுகள், மாடுகள் முதலிய விலங்குகள் ஒருபுறம் கவலையற்று மேய்ந்துகொண்டிருக்கின்றன. அவைகளை விழுங்குவதற்காகச் சமயத்தை எதிர்பார்த்து புலிகளும், ஓநாய்களும் மற்றொரு புறத்திலே பதுங்கியிருக்கின்றன. அதுவும் மத்தியான வேளை. நல்ல வெயில். தலை வெடிக்கும் அந்த வேளையில் விலங்குகளின் பின்னே ஓடி வருகிறது ஒரு கூட்டம்.

வேட்டையின் சிரமத்தின் அறிகுறியாக தலைவனுடைய முகத்தில் முத்துப் போன்ற வியர்வைத் துளிகள் தோன்றுமல்லை. ஆனால் சிரமங்கள் தீர்வதற்கு அக்காட்டில் வெகு நேரமாகாது. அது அப்படிப்பட்ட அடர்ந்தக் காடு. அடிவாரத்திலிருந்து உச்சி வரை, மலைகள் பசுமையால் அலங்கரித்து நிற்கின்றன. வானளாவி நிற்தும் நீண்ட மரங்கள் தனது அடர்ந்த கிளைகளாலும் கூர்மை பொருந்தி நெருக்கமாயுள்ள இலைகளாலும் சூரிய கிரணங்கள் பூமியில் படாதவாறு தடுத்து நிற்கின்றன. காட்டின் தரையில் நடு நடுவே புதர்களும், பலவித செடி கொடிகளும், முளைத்தும், படர்ந்தும் கிடக்கின்றன. இவ்வளவு இயற்கையான காட்சிகளைக் கண்டுகளிக்கவும், பல விலங்குகளையும், பறவைகளை

யும் வேட்டையாட பல இடங்களிலிருந்து அரசர்களும் பணக்காரர்களும், சிக்காரிகளும் அக்காட்டுக்கு வருவதுண்டு.

அப்படியாக ஒரு நாள் ஓர் அரசன் வடக்கே இருந்து வேட்டையாடிக்கொண்டு வந்தபொழுது, இக்காட்டின் எழில் மிக்க அழகைக் கண்டு ஆனந்தமடைந்தவனாய் இன்பத்தில் ஆழ்ந்து குதிரையைச் செலுத்திக்கொண்டு வரும்பொழுது ஒரு மரத்தின் உச்சியைக் கண்டவன் கண்டவாறே நின்றுவிட்டான். மரத்தின் உச்சியில் ஒரு பெண். சிறிய குச்சியால் அவளுடைய கூந்தலை வகுத்து சிவப்பு, வெள்ளை, நீலம், மஞ்சள் போன்ற பல நிறப் பூக்களை வரிசையாக அணிந்திருந்தாள். எந்தப் பூவுக்குப் பக்கத்தில், எப்பூவை வைத்தால் அழகு மிளிரும் என்பதைக் கூட, இந்தக் காட்டில் வாழும் இந்தப் பெண் தெரிந்து வைத்திருந்தாள். அவளுடைய கூந்தல் அவளுடைய முதுகுப் பக்கம் விரித்து படர்ந்து இருந்த காட்சி, அவளை, "ஒரு கானகத்து ராணியோ!" என்று நினைக்கும்படி தோன்றியது அந்த அரசனுக்கு. இவ்விதமான அலங்காரத்துடன் அந்த மரத்தின் உச்சியில் உட்கார்ந்துகொண்டு சட்டை பின்னுவதைக் கண்டான் அரசன். உடனே தன் பரிவாரங்களை மரத்தின் பக்கமாகப் போக செய்தான். உடனே சேவகர்கள், "நீ யார் அம்மா? மரத்தின் மேல் என்ன செய்கிறாய்? உன் ஊர் எது? நீ என்ன மொழிதான் பேசுகிறாய்?" என்று கேட்டார்கள். அவள் எதற்கும் வாயைத் திறக்கவே இல்லை. போர் வீரர்களோ விடுவதாக இல்லை. தொந்தரவு செய்துகொண்டே இருந்தார்கள். அவர்கள் போனால் போதும் என்று நினைத்து, தான் போட்டிருந்த நகைகளை எல்லாம் கழற்றி ஒவ்வொன்றாகக் கீழே போட்டாள். என்ன, பொருள்கள் போட்டாலும்தான் என்ன, அவர்கள் ஆபரணங்களுக்காகவா வந்தார்கள்.

ஆகையால் வீரர்களில் ஒருவன் துணிந்து மரத்தின் மேல் ஏறி, அவளைப் பத்திரமாக இறக்கி அரசன்

முன்னிலையில் நிற்க வைத்தான். அரசன் எவ்வளவோ கேட்டும், அவள் வாயைத் திறக்கவில்லை. கடைசியில் பெண் ஊமை போலும் என்று நினைத்துக் கொண்டாலும் அவளின் அழகில் ஆசை கொண்டான். ஆகையால் அரசன் தன்னுடைய உடையை அவளுக்குக் கொடுத்துத் தன் குதிரையின் மேல் ஏற்றிக் கொண்டு, அரண்மனைக்குக் கொண்டு வந்தான். அரசன் தன் உடையைக் கொடுத்தால், "அவள் மேல் காதல் கொண்டேன்" என்பது பொருள். அரண்மனையில் அவளுக்கு வேண்டிய நகைகள், ஆடைகள், பணிவிடை செய்ய தோழிப் பெண்கள் முதலியவைகளுக்கு உடனே ஏற்பாடுகள் செய்து முடிந்து தன் அருகில் அவள் எப்பொழுதும் இருக்கும்படி கட்டளையிட்டான். பிறகு அவள் பெயர் "நல்லி" என்று எழுதிக் காட்டினுள். ஊமையாக இருந்தாலும் சரி, அவளுடைய நற்குணங்களைக் கண்டு அவளைத் திருமணம் செய்துக் கொண்டான். அரசனுடயை தாயார் தன் மகன், "ஓர் ஊமையைத் திருமணம் செய்து கொண்டானே" என்று அடிக்கடி கூறுவதுண்டு. ஆகையால் அவள் எப்படியாவது நல்லியைக் கொலைக் குற்றத்திற்கு ஆளாக்கி அரசனாலேயே அவளைத் தீயில் எரித்துவிடும்படி சூழ்ச்சி செய்ய வேண்டும் என்று பல ஏற்பாடுகள் செய்தாள்.

பண்டைக்காலத்தில், கொலைக்குற்றம் செய்தால் தூணில் குற்றவாளிகளைக் கட்டிவிட்டு, அத்தூணைச் சுற்றிலும் விறகுகளை அடுக்கித் தீமூட்டிக் கொலைசெய்து விடுவார்கள். அக்குற்றத்திற்கு எப்படியாவது நல்லியைச் சிக்கவைக்க வேண்டும் என்று சதா சிந்தனையாகவே இருந்தாள் நல்லியின் மாமியார்.

சில மாதங்களுக்குப் பிறகு நல்லி ஓர் அழகான ஆண் குழந்தையை ஈன்றெடுத்தாள். உடனே மாமியார் பேரனைத் தன் மகனிடம் (அரசனிடம்) காண்பித்துவிட்டு, மறுபடியும் குழந்தையைத் தன் தாயிடம் சேர்த்துவிட்டாள். மறுநாள்

காலையில், தன் மகனிடம் (அரசன்) தாயார் ஓடிவந்து, 'மகனே! நல்லி தன் குழந்தையைக் கொன்று, தின்று விட்டாள்'' என்று தன் மகனிடம் அழுது புலம்பிக் கூறினாள். ஆனால் நல்லி ஒன்றையும் கவனிக்காமல், தன் தையல் வேலையிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தாள்.

தன் குழந்தை காணாமல்போனதை பற்றி அரசன் எவ்வளவோ விசாரித்தும் தகவல் ஒன்றும் கிடைக்க வில்லை. அதைப்பற்றித் தன் தாயிடம் கூறினபொழுது, ''எப்படி கிடைக்கும்? வயிற்றில்போன பொருள் மறுபடியும் வருவதை நீ கேள்விப்பட்டிருக்கிறாயா?'' என்று குத்திக் கொடுத்துக் கொண்டேயிருந்தாள். ஆனால் அரசனுக்கோ நல்லியின் மேல் எவ்விதமான சந்தேகமும் ஏற்படவில்லை.

மறுபடியும் சில மாதங்களுக்குப் பின் நல்லி இரண்டாவது குழந்தையை ஈன்றெடுத்தாள். அக்குழந் தைக்கும், முதல் குழந்தையின் கதியே கிடைத்தது. மூன்றாவது குழந்தைக்கும் அதே கதிதான். இக்குற்றத்தை அரசன் நம்பவில்லை. நல்லி மிகவும் பரிசுத்தமானவள். இதைப்போன்ற கொடிய செயலை அவள் ஒருபோதும் செய்ய மாட்டாள் என்று வாதாடினான். தன் தாயின் பேச்சையும், மக்கள் சபையின் முடிவையும் அரசனால் தாங்க முடியவில்லை. பொறுத்துப் பொறுத்துப் பார்த்தான். நல்லி பேசினால் தானே உண்மைகள் தெரியும். ஊமையிடம் அவன் என்ன செய்ய முடியும்?

நல்லியை விசாரிப்பதற்காக ஒரு குழுவை ஏற்படுத் தினான். அவர்கள் ஊமையிடம் என்ன செய்ய முடியும். எனவே நல்லியைப் பண்டைக் காலத்துக் கொலைக் குற்ற வாளிகளைப் போல் தீயில் எரித்துவிட வேண்டுமென்று முடிவு செய்து தீர்ப்புக் கொடுத்தார்கள். தீர்ப்பைக் கேட்ட தும், அரசன் மூர்ச்சையுற்று நல்லியின் மடியில் விழுந்தான். இக்காட்சிகளையும் அவர்கள் பேசுவதையும் நன்றாகக் கவனித்

துக் கொண்டிருந்த நல்லி "எதையும் தாங்கும் இதயம் வேண்டு"மென்று மௌனமாக இருந்தாள். தன் மடியின் மேல் அரசன் மயக்கமுற்று இருப்பதைக் கண்ட நல்லியின் கண்கள் கலங்கின. அவள் கண்ணீர் அரசனின் கன்னத்தில் விழுந்தது. உடனே அரசன் கண்ணைத் திறந்து நல்லியின் கண்களைத் துடைத்தான். அப்பொழுது "சோதனைமேல் சோதனை போதுமடா சாமி...." என்ற பாட்டு அரசன் காதுகளில் ஓலமிட்டது. மக்களின் தீர்ப்புக்கு எதிராக அரசன் ஒன்றும் செய்ய முடியாமல் மௌனமாய் இருந்தான்.

நல்லியைக் கொளுத்தவேண்டிய தினத்தன்றுதான், நல்லியின் ஆறு சட்டைகளும் பின்னி முடிந்தன. அன்றோடுதான் ஆறுவது ஆண்டின் கடைசி நாள். இன்னும் சில மணிநேரத்தில் தன் உயிரையே தியாகம் செய்யவேண்டிய கடைசிக் கட்டத்திலாவது பேசுவாள் என்று நினைத்தார்கள். ஊமையால் பேச முடியுமா?. என்ன விந்தை! கடைசி நேரம் வந்தது. நல்லியை ஒரு கம்பத்தில் சேர்த்துக் கட்டித் தீயும் வைத்து விட்டார்கள். அப்பொழுது தான் சட்டையின் கடைசி ஓரத்தைப் பின்னி முடித்து முடி போட்டாள். அப்பொழுது ஆகாயத்தில் ஆகாய விமானம் வருவதைப்போன்ற ஓசை கேட்டது. உடனே நல்லி ஆகாயத்தைப் பார்த்தாள். அதற்குள் தீயும் கட்டையில் பிடித்துக்கொண்டு சுடர்விட்டு எரிய ஆரம்பித்தது. அப்பொழுது ஆகாயத்தில் ஆறு அன்னப்பறவைகள் வேகமாகப் பறந்து வருவதைக் கண்டாள் நல்லி. தன் சகோதரர்கள் வருவதைக் கண்டதும் சந்தோஷப்பட்டாள். ஆறு அன்னப்பறவைகளும் அவள் அருகில் வந்தன. உடனே தன் கையிலிருந்த விசித்திர அங்கிகளை ஒவ்வொன்றாக, அவைகளின்மேல் எறிந்தாள். அந்த அங்கிகள், அந்த அன்னப்பறவைகளின்மேல் பட்டதும், அந்த அன்னங்கள் உருமாறி நல்லியின் அண்ணன்மார்கள் ஆறு பேரும் எதிரில் வந்து நின்று, உடனே தீயில்

பாய்ந்து தன் தங்கையைக் காப்பாற்றி முத்தமிட்டார்கள். இக்காட்சியைக் கண்டவர்கள் எல்லோரும் ஆச்சரிய மடைந்தார்கள். நல்லி தன் கணவனை அணைத்துக் கொண்டு, "இனி நான் உங்களுடனும் எல்லோருடனும் பேசுவேன்" என்று கூறி தேம்பித் தேம்பி அழுதாள்.

வெகுகாலத்திற்கு முன் உலகையே பதினெட்டு நாடுகளாகப் பிரித்து எல்லாவற்றையும் ஒரே அரசன் அரசாண்டு வந்தான். அந்த நாடுகள், "தமிழ்நாடு, சிங்களநாடு, சோனகநாடு, சாவகநாடு, சீனநாடு, துளுவ நாடு, குடகநாடு, கொண்கனநாடு, கன்னடநாடு, கொல்ல நாடு, தெலிங்கநாடு, கலிங்கநாடு, வங்கநாடு, கங்கநாடு, மகதநாடு, கடாரநாடு, கவுடர்நாடு, கடுங்குசலநாடு" என்று பெயர் பெற்றிருந்தன. இந்த நாடுகளில் ஒன்று தான் "கவுடர் நாடு" என்பது. இது வங்காளத்தில் ஒரு பகுதியைச் சேர்ந்ததாகும். பல்லாண்டுகளுக்கு முன், வங்காளத்திலிருந்து பகை அரசனுக்கும் பஞ்சத்தின் கொடுமைக்கும், இயற்கையின் கொடுமைக்கும் அஞ்சிப் பல குடும்பங்கள் மைசூருக்கு வந்தன. ஏற்கனவே மைசூரில் இருந்தவர்கள், கவுடர் நாட்டிலிருந்து வந்ததால் இவர் களைக் "கவுடர்கள்" என்று அழைத்தார்கள். இவர்கள் வேளாண்மைத் தொழிலிலும், மற்றத் தொழிலிலும் மிக்க திறமைசாலியாக இருந்தார்கள். அப்படி வெகுகாலத் திற்கு முன் மைசூருக்கு வந்தவர்கள், தங்களுக்குள் ஒரு அரசனை ஏற்படுத்திக்கொண்டு வாழ்ந்து வந்தார்கள். அரசனுக்குக் கீழ்ப்படிந்து இனக்கட்டுப்பாட்டுடன் வாழ்ந்து வந்தார்கள்.

அரசன் தன் மனைவியின் மரணத்தை மறப்பதற்காக வேட்டையாடுவதுண்டு. அரசன் ஒருநாள் தனியே ஒரு விலங்கை துரத்திக்கொண்டு காட்டுக்குள் வெகுதூரம் பிரயாணம் செய்துவிட்டான். தன்னுடன் வந்தவர்களைப்

பல மைல் தூரத்தில் விட்டுவிட்டான், கடைசியில் அடர்ந்த காட்டின் நடுவே திசைதப்பிப் போனதால் அக்காட்டைவிட்டு எப்படி வெளியில் வருவதென்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தான். எப்பக்கமும் போக முடியாமல் ஒற்றையடிப் பாதைகூடத் தெரியாமல் கஷ்டப்பட்டான். எங்கு பார்த்தாலும் அடர்ந்த புதர்களும் விலங்குகளின் நடமாட்டமும்தான் அவன் கண்களில் பட்டன. ஒரு பக்கம் பசி. மற்ருெரு பக்கம் திகில். குடி தண்ணீரும் எங்கே இருக்கிறது என்று தெரியாமல் முகம் வாடியது. சோர்வடைந்தவனுய் ஒரு பாறையின்மேல் உட்கார்ந்தான். அவன் உள்ளத்தில் பல சிந்தனைகள் ஓடின. "நம்முடைய முடிவு இவ்வளவுதான்" என்றும் நினைத்துவிட்டான்.

இப்படிச் சிந்தனையில் இருக்கும்பொழுது ஏதோ சத்தம் கேட்டுத் திருப்பிப் பார்த்தான். தலையும், உடலும் நடுங்கும் வயதுடைய ஒரு மூதாட்டி அவன் அருகில் வந்தாள். அவளைக் கண்டதும் அரசனுக்குக் கொஞ்சம் உயிர் வந்தது. "அம்மா! இக்காட்டினின்றும் வெளியே போக எனக்கு வழி தெரியவில்லை. தாங்கள் வழிகாட்டுவீர்களா?" என்று மிகவும் மனக்கவலையுடன் கேட்டான்.

அரசனுடைய மனக்கவலையையும் தாகத்தின் வேட்கையையும் ஒரு நொடிப்பொழுதில் தெரிந்துகொண்ட கிழவி, "அதற்கென்ன! அரசே அப்படியே உதவி செய்கிறேன். என் உதவியை நிராகரித்துக் கடைசியில் வழி தெரியாமல், இக்காட்டிலேயே மாண்டு போனவர்கள் எவ்வளவோ பேர்; ஆனுல் நீர் மட்டும் எனக்கு ஒரு காரியம் செய்ய வேண்டும். அதற்கு என்னிடம் சத்தியமும் செய்து தர வேண்டும். எனக்கு ஒரு மகள் இருக்கிருள். அவள் மிகவும் அழகுள்ளவள். அவளை நீர் திருமணம் செய்து கொள்ளவேண்டும். அந்த வாக்குறுதியை எனக்குக்

கொடுத்தால், நான் வழி காட்டுவேன்; இல்லாவிட்டால் நீர் இங்கேயே இருந்து, தாகத்தால் நாவறண்டு, மரணமடைய வேண்டியதுதான், அல்லது கொடிய விலங்குகளுக்கு இரையாக வேண்டியதுதான்" என்று கிழவி கூறினாள்.

அரசன் சிறிதுநேரம் சிந்தனை செய்தான். காரணம் காட்டில் மடிவதைவிட, முதலில் கிழவி சொல்வதை ஒப்புக்கொண்டு காட்டைவிட்டு வெளியில் போனபின் யோசனை செய்வோம் என்று மனத்தில் நினைத்துக் கொண்டு "சரி! அப்படியே ஆகட்டும்" என்று ஒப்புக் கொண்டான். பிறகு அந்தக் கிழவி, அரசனைத் தன் குடிசைக்கு அழைத்துக்கொண்டு போனாள்.

சாதாரணமாய்க் காடர்கள், காட்டு விறகுகளைத் தம் குடிசையின் நான்கு திக்குகளிலும் போட்டுத் தீ மூட்டுவார் கள். ஏனென்றால் காட்டு விலங்குகள் குடிசையின் அருகில் வராது. அதைப்போல் கிழவியின் மகளும் தீயில் குளிர் காய்ந்து கொண்டிருந்தாள்.

அரசனைக் கண்ட பெண், வெகுகாலமாக தன் கணவனுக்காகக் காத்திருந்த மனைவியைப்போல் வரவேற்று உபசரித்தாள். ஆனால் அரசன் அவளுடைய அழகில் திருப்தியடையவில்லை. அவளைத் திருமணம் செய்து கொள்ள விரும்பவில்லையாயினும், அரசன் தான் கொடுத்த வார்த்தையைத் தவறக்கூடாது என்று அவளை தன் குதிரை யின்மேல் ஏற்றி வைத்துக்கொண்டான். உடனே அந்தக் கிழவி குதிரையின் முன்னால் போக, கிழவியின் பின்னால் ஆழ்ந்த சிந்தனையுடன் அரசன் குதிரையை நடத்திச் சென்றான். கடைசியில் அரசன் அரண்மனை சென்றதும் சில நாட்களுக்குப் பின் மிகவும் ஆடம்பரத்துடன் கிழவி யின் மகளைத் திருமணம் செய்துகொண்டான். அவனுடைய குடிமக்கள் எல்லோரும், அரசன் மறுபடியும் திருமணம் செய்துகொண்டதில் மிகுந்த குதூகலமடைந்தார்கள்.

அந்த அரசனுக்கு முதல் மனைவியிடம் பிறந்த ஆறு குமாரர்களும் ஒரு மகளுமிருந்தனர். முதல் மனைவியின் குழந்தைகள் கண்ணீர்விடுமே என்பதற்காகத்தான் அரசன் எல்லா சுகதுக்கங்களையும் விட்டுவிட்டான். "குழந்தைகளின் இன்பமே தன் இன்பம்" என்று நினைத்துக்கொண்டிருந்தான். முதல் மனைவியின் நினைவையும், அன்பையும் மறப்பதற்காகவே அரசன் அடிக்கடி அடர்ந்த காடுகளுக்கு வேட்டைக்குப்போகும் பழக்கத்தை உண்டாக்கிக் கொண்டான். எதையோ நினைத்து, விலங்குகளை வேட்டையாடக் காட்டுக்குச் சென்றவன் கடைசியில் வேறொரு பெண்ணை வேட்டையாடிக்கொண்டு வந்தான்.

அரசன் மறுமணம் செய்துகொண்டபின் முதல் தாரத்துக் குழந்தைகளுக்கு ஒரு பெரிய காட்டில் ஒரு வீடு கட்டிக் கொடுத்து, ஒருவருக்கும் தெரியாமல் அவர்கள் அங்கேயே வாழும்படி ஏற்பாடு செய்தான். மேலும் அவ்வரசனைத் தவிர அக்குழந்தைகளைப் பார்ப்பதற்குச் செல்ல அரச சபையிலிருக்கும் முக்கியமானவர்களுக்கும் வழி தெரியாது. அரசனிடம் ஒரு நூலுருண்டை இருந்தது. அரசன் அதனைக் கீழே போட்டவுடன், அது தானே பிரிந்துகொண்டு அரசனுக்கு வழிகாட்டிக்கொண்டே அரசனை முதல் தாரத்து குழந்தைகள் இருக்கும் மாளிகைக்குக் கொண்டுபோய்விடும்.

குழந்தைப் பாசத்தால் அரசன் அடிக்கடி அரண்மனையை விட்டுவிட்டுக் குழந்தைகள் வாழும் காட்டுக்குச் செல்வதை இளைய அரசி கவனித்தாள். பொறுமை அவள் உள்ளத்தில் குடிபுகுந்தது. "இதென்ன அரசர் அரண்மனையில் இருப்பதில்லை. அடிக்கடி எங்கேயோ போகிறார். அவர் எங்கே போகிறார் என்பதைக் கண்டறிய வேண்டும்" என்று நினைத்தாள். எனவே அரசனுடைய ரகசிய சேவகனை அழைத்து அவனுக்கு வெகுமதிகள் கொடுத்து, "அரசன் அடிக்கடி எங்கே போகிறார்?" என்று கேட்டாள்.

அரசன்மேல் இராணியம்மா சந்தேகப்படுவதாக நினைத்த சேவகன், உண்மையைச் சொன்னான். அரசன் மேல் வீண் சந்தேகப்படமாட்டார்கள் என்ற நல்லெண்ணத் துடன், அரசன் போகும் இடத்தை உண்மையாகவே சொல்ல நினைத்து "அக்காட்டுக்குப் போக அரசனுக்கு வழி தெரியாது. ஆனால் அவரிடமிருக்கும் நூலுருண்டைதான் வழி காட்டுகிறது" என்று கூறிவிட்டான். வஞ்சக உள்ளம் படைத்த இளவரசி அந்த நூலுருண்டையை அபகரித்துக் கொண்டாள்.

முன்னதாகவே தன் தாயிடம் பலவிதமான மந்திரங்களை கற்றுக்கொண்டிருந்தவள் அவள். ஆகையால் உடனே ஆறு சட்டைகள் தைத்துக்கொண்டு, அவற்றில் மந்திர சக்தியை ஏற்றி, ஒருநாள் அரசன் வேட்டைக்குப் போயிருந்த சமயம் பார்த்து, அந்த நூலுருண்டையின் உதவியால் முதல் தாரத்துக் குழந்தைகள் வாழும் காட்டுக்குச்சென்று, குழந்தைகள் வாழும் மாளிகையை அடைந்தாள்.

அடர்ந்த காட்டில் சாதாரணமாக இருள் சூழ்ந்திருப்பது சகஜம் அல்லவா? ஆகையால் மங்கின இருளில் விளையாடிக் கொண்டிருந்த ஆறு பையன்களும் வெகு தூரத்தில் யாரோ வருவதைக் கண்டு, தங்கள் அருமைத் தகப்பனாரே வருகிறார் என்று நினைத்து, மிகுந்த ஆவலுடன் ஓடி வந்தார்கள். பிள்ளைகள் அருகில் வந்தவுடன் அவள் தான் கொண்டுவந்த சட்டைகளை ஆளுக்கு ஒன்றாக அணிவித்தாள். குழந்தை களுக்குப் புதிய சட்டைகள் என்றால் விருப்பம் அதிகமல்லவா? ஆகையால் மலர்ந்த முகத்துடன் அவள் கொடுத்த சட்டை களைக் குதூகலத்துடன் போட்டுக்கொண்டார்கள். இராணி தைத்த சட்டைகள், குழந்தைகளின் மேலே பட்டவுடனே, அந்த ஆறு பையன்களும் ஆறு அன்னப்பறவைகளாக மாறி, பேசும் நிலைமையும் இழந்து, அந்தக் காட்டின் நடுவே பறந்து ஓடினார்கள்.

இளைய இராணியோ தன்னுடைய மூத்தாள் குழந்தைகளை எல்லாம் ஓட்டி விட்டதாக நினைத்துக்கொண்டு, மிகவும் சந்தோஷமாய் வீடுபோய்ச் சேர்ந்தாள். எப்பொழுதும் போல் நூல் உருண்டையையும் வைத்துவிட்டாள். ஆனால் காட்டில் இருந்த ஒரே சகோதரி மட்டும், தன் அண்ணன்மார்களோடு வெளியே வராமல் இருந்ததால் இளவரசியால் (சின்னம்மா) அவள் ஓட்டப்படவில்லை. முதல் தாரத்திற்கு அப்படி ஒரு பெண் இருக்கிறாள் என்பதும் இராணிக்குத் தெரியாது. அப்பெண்ணுக்கு ''நல்லி'' என்று பெயர்.

மறுநாள் அரசன் வேட்டையாடி வெற்றியுடன் அரண்மனைக்கு வந்தான். வேட்டையிலிருந்து அரண்மனைக்கு வந்ததும் வழக்கம்போல், தன் குழந்தைகளைக் காணச் சென்றான். காட்டின் உள்ளே செல்லச் செல்ல அவன் உள்ளத்தில் ஒருவிதமான கவலையும் திகிலும் தோன்றின. என்றுமில்லாத ஒரு கலவரம் இன்று ஏன் நம்முள்ளத்தில் தோன்றுகிறது என்ற சிந்தனையோடு அரசன் காட்டில் தன் குழந்தைகள் வாழும் இல்லத்தை நோக்கி அதிக வேகமாகச் சென்றான். எப்பொழுதும் தந்தை வரும் வழியையே பார்த்துக்கொண்டிருக்கும் குழந்தைகள், அன்று எதிர் நோக்கி வரவில்லை. நல்லி மட்டும் ''அப்பா'' என்று அழுது கொண்டே ஓடி வந்தாள். ''எங்கே அம்மா மற்றவர்கள்?'' என்று அரசன் கேட்டான்.

''அப்பா! நேற்று அவர்கள் என்னைத் தனியே விட்டு விட்டு, எல்லோரும் ஒன்றாகப் பேசிக்கொண்டு வெளியே விளையாடச் சென்றார்கள். நான் பலகணி வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். சிறிது நேரத்திற்கெல்லாம், அந்த ஆறு பேரும் ஆறு அன்னப்பறவைகளாக உருமாறி ஆகாய மார்க்கமாய்ப் பறந்துபோனதைக் கண்டேன். இதோ கீழே உதிர்ந்திருக்கும் அவைகளின் இறகுகளைப் பாருங்கள். இதில் ஏதோ சூது இருக்கிறது'' என்று

சொன்னாள். ஆனால் தன் மாற்றாந்தாய் வந்து போனதையும் நல்லி சன்னல் மூலமாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால் அதை அப்பாவிடம் கூறினால் மேற்கொண்டு என்ன விபரீதம் நடைபெறுமோ என்று சிறுமி அதைச் சொல்லாமல் மறைத்து விட்டாள்.

மகள் கூறியதைக் கேட்ட அரசனுக்கு உண்டான துக்கத்திற்கு அளவே இல்லை. எல்லா இன்பங்களும் முதல் மனைவியோடு போய்விட்டன என்று நினைத்திருந்த அரசன் அந்தக் குழந்தைகளின் மூலம் அடைந்த கொஞ்ச இன்பத்தையும் அன்று இழந்துவிட்டான். மறுமணமே வேண்டாமென்று பிடிவாதமாக இருந்தான். அன்று காட்டில், 'காட்டில் மடிந்தாலும் மறுமணம் வேண்டாம்' என்று நினைத்திருப்பான். ஆனால் அவனுடைய மனக்கண் முன், தன் முதல் மனைவி, "என் குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று கூறி உயிர்விட்ட சம்பவம்தான் எதிரில் வந்து நின்றது. தன் குழந்தைகளுக்காகத் தன் உயிரை வைத்திருக்க வேண்டுமென்று நினைத்து அன்று காட்டில் வழிகாட்டிய கிழவிக்கு வாக்குக் கொடுத்தான். ஆனால் இன்றோ தன்னுடைய ஆறு பிள்ளைகளையும் காணாது புழுவாகத் துடித்தான். ஆயினும் அந்தத் தீயச் செயலைத், தன் இளைய மனைவி இராணி செய்திருப்பாள் என்று அவன் கனவிலும் நினைக்கவில்லை. கடைசியில் தன் ஒரே பெண்ணையும் யாராவது வந்து மோசம் செய்து விடுவார்களோ என்று எண்ணி அவளைத் தன்னுடன் அழைத்துப் போகவேண்டுமென்று நினைத்துத் தன்னுடன் வரச் சொன்னான்.

ஆனால், அவளோ தன் மாற்றாந்தாய்க்குப் பயந்து, "இன்றிரவு மாத்திரம் நான் இங்கேயே இருந்து அண்ணன்மார்கள் வருவார்களா? என்று பார்த்து விட்டு, நாளைக்குத் தங்களுடன் வருகிறேன்" என்று

கூறினாள். "மகளுடைய ஆசையை நாம் ஏன் கெடுக்க வேண்டும் என்ற எண்ணம் ஒரு பக்கமும் ஒருவேளை தங்கையைத் தேடிக்கொண்டு அண்ணன்மார்கள் வந்தாலும் வரலாம்; தன்னைப்போல் எங்காவது காட்டில் வழி தெரியாமல் சிக்கிக் கொண்டார்களோ என்னவோ" என்று எண்ணம் ஒரு பக்கமும் கொண்டு மகளைத் தனிமையில் விட்டுவிட்டு, "அம்மா மகளே! பத்திரமாக இரு. யார் வந்தாலும் கதவைத் திறக்க வேண்டாம். மரணமடைந்த உன் அருமைத் தாயை நினைத்துக்கொண்டு படுத்துக் கொள். நாளைக் காலையில் நான் வருகிறேன்" என்று கூறிச் சென்றான்.

நல்லிக்கோ அங்கே ஒரு நிமிஷம்கூட இருக்க மனமில்லை. ஏனென்றால் தனக்கும் ஏதாவது ஆபத்து வரலாம் என்றும், எப்படியாவது தன் அண்ணன்மார்களை கண்டுபிடிக்க வேண்டுமென்றும் எண்ணிக்கொண்டிருந் தாள். கொஞ்சம் கொஞ்சமாகக் காட்டில் சூரியன் மறைந்து, இருள் அணைய ஆரம்பித்தது. இருள் வரவர நல்லிக்கு அந்த வீட்டில் இருக்கப் பயம் ஒரு பக்கம். மற்றொரு பக்கம் தனக்கு என்ன ஆபத்து உண்டாகுமோவென்ற எண்ணம் ஒன்றுமே அவளுடைய சிந்தனைக்கு ஓடவில்லை. கடைசியில் முதலில் வீட்டைவிட்டுப் போய்விடுவோம் என்ற எண்ணத் தில் மாலை மங்கின இருளில் காட்டில் நுழைந்து எங்கும் நிற்காமல் நடந்துகொண்டே இருந்தாள்.

அடர்ந்த காட்டில் எங்கு பார்த்தாலும் விலங்குகளின் குரலோசையும் வண்டுகளின் ரீங்காரமும் தவிர, அவளுடைய அண்ணன்மார்களின் குரலோசையைக் காணோம். காட்டில் சில இடங்களில் மரத்தில் மோதிக் கொண்டாள். சில சமயங்களில் ஏதோ ஒன்று முன்னால் வருவதைப்போல் ஓர் உணர்ச்சி உண்டானதும், தன் தாயை நினைத்துக் கண்கலங்கி மரத்தின் மறைவில் ஒளிந்து

கொள்வாள். இப்படி எத்தனையோ இடையூறுகளில் சிக்குண்டு 'கருமமே கண்ணாயினார்' என்ற முதுமொழிக்கு ஒப்ப மறுநாள் மாலை வரையில் ஓயாமல் நடந்துகொண்டே இருந்தாள். கடைசியில் கண்களும் உடலும் சோர்வடைந்தன. "என்ன செய்கிறோம். எங்கே போகிறோம்" என்ற எண்ணமே இல்லாதவளாய் ஒரு பாறையின் அருகில் போனாள். அது இடிந்ததோர் பழைய குடிசை என்று தெரிந்துகொண்டாள். அதன் உள்ளே நுழைந்தாள். குடிசையில் ஒருவருமில்லை. ஆனால் ஆறு கட்டில்கள் போடப்பட்டிருந்தன. நல்லி அவைகளில் எதிலும் படுக்கப் பயந்தாள். அந்தக் கட்டில் தன்னை அப்படியே தூக்கிக் கொண்டு போய்விட்டால் என்ன செய்வது என்ற எண்ணத்தால், தன் மேலிருக்கும் துணியை தரையில்போட்டு, அதன்மேல் படுத்துக்கொண்டாள். இரவு அவளுடைய கை கால்களில் எல்லாம் ஒரே வலி. யாரிடம் தன் குறைகளைச் சொல்ல முடியும்? காட்டில் தனிமையில் வாழும்பொழுது, ஏதாவது ஓர் அபாயம் உண்டானால், செடி கொடிகளிடம் தான் நம்முடைய குறைகளைச் சொல்ல வேண்டும். தண்ணீரைக் குடித்துவிட்டு, தன் களைப்பின் வேகத்தால் அப்படியே தரையில் படுத்துத் தூங்கிவிட்டாள்.

விடியற்காலையில் திடீரென்று ஏதோ ஓசை கேட்டது. நல்லி பயத்தால் நடுநடுங்கி விட்டாள். தனக்கு ஏதோ பெரிய ஆபத்து வருகிறது என்று கருதி ஓடிச்சென்று மூலையிலிருக்கும் ஒரு மறைவான இடத்தில் ஒளிந்து கொண்டாள். போர்க்களத்திலிருந்து போர்வீரர்கள் வெற்றி முரசடித்துக்கொண்டு தம் நாட்டை நோக்கி வருவதுபோல் இருந்தது. "பட பட" என்று கேட்ட ஓசையின் சத்தம் தன் குடிசையின் அருகில் வந்து, தன் குடிசையின் பலகணியின் வழியாக நுழைவதைப் போலிருந்தது. உள்ளே நுழைந்தவை ஆறு அன்னப்பறவைகள். அவைகள் தங்கள் இறக்கைகளைப் படபடவென்று அடித்துக்

கொண்டுவந்து, தம்முடைய மந்திரப் போர்வையாக இருந்த இறகுகளை நீக்கிவிட்டு ஆறு அரசகுமாரர்களாக நின்றன.

தன்னுடைய அண்ணன்மார்களைக் கண்டதும், உடனே நல்லி "அண்ணு"வென்று ஓடிவந்து அண்ணன்மார்களை அணைத்துக்கொண்டாள். எதிர்பாராத இந்தச் சந்திப்பு அண்ணன்மார்களுக்கு அதிர்ச்சியை உண்டாக்கியது. புலம்புவதா? சிரிப்பதா? என்று தோன்ருதவர்களாய்த் திகைத்து நின்றுவிட்டார்கள். தங்களுடைய செய்திகளை ஒருவருக்கொருவர் தெரியப்படுத்திக் கொண்டார்கள். ஆனுல் அதிக நேரம் அவர்களால் பேசிக்கொண்டிருக்க முடியவில்லை.

ஆகையால் அவர்கள், "நல்லி நீ இங்கே இருக்கக் கூடாது. இது காட்டில் வாழும் ஆதிவாசிகளின் குடிசை. அவர்கள் உன்னை கண்டால், அவர்களுடைய காட்டு தேவதைக்கு 'நரபலி' கொடுத்துவிடுவார்கள். ஆகையால் நீ உடனே இவ்விடத்தைவிட்டுப் போய்விடவேண்டும்" என்று சொன்னுர்கள். இவ்வார்த்தைகளைக் கேட்டு நல்லி "ஓ"வென்று அழுதுகொண்டே "அண்ணு! எனக்கு ஓர் ஆபத்து என்று தெரிந்தால் சமயத்தில் நீங்கள் எல்லோரும் வந்து காப்பாற்றமாட்டீர்களா?" என்று கேட்டாள்.

"நல்லி அது முடியாத காரியம். ஏனென்ருல், நாங்கள் நாள்தோறும் மாலையில் சுமார் பத்து நிமிடங்கள் தான் அன்னப்போர்வையை எடுத்துவிட்டு, உண்மையான மனித ரூபத்தோடு இருப்போம். பிறகு மறுபடியும் அன்னப்பறவைகளாக மாறிவிடுவோம். அப்படியிருக்க எங்களால் என்ன செய்யமுடியும். மேலும் பகல் நேரங்களில் நாங்கள் அதிகமாக வெளியில் வரமாட்டோம்.

மனிதர்கள் கண்களுக்கு எட்டாத தூரத்தில் நாங்கள் மலை யின் உச்சியில் குகையில் வாழ்கிறோம். ஏனென்றால், சிலர் எங்களுடைய இரகசியம் தெரியாமல் அம்பால் வேட்டையாடி விடுவார்கள் அல்லவா?" என்று வருத்தத்துடன் கூறினார் கள். "அண்ணா! உங்களுக்கு இந்தச் சாபத்தைகொடுத்த வர்கள் யார்? இது எப்பொழுது, என்ன விரதமிருந்தால் நீங்கும்" என்று கேட்டாள்.

"நல்லி! இது நீங்குவது கஷ்டம். உன்னால் அதைச் செய்யமுடியாது. எதற்கும் சொல்லுகிறேன். எதற்காக நாங்கள் உன் ஆசையைக் கெடுக்கவேண்டும். ஆறு ஆண்டுகள் ஒருவரோடும் பேசாமலும், சிரிக்காமலும், ஒரு வேளை உணவோடு வாழவேண்டும். மேலும் எங்களுக் காகக் காட்டு நாரில் விசித்திரமான ஆறு சட்டைகள் (பனியன்) தைக்கவேண்டும். அந்தச் சட்டைகளைத் தைத்துக் கொண்டிருக்கும்பொழுது யாரிடமாவது ஒரு வார்த்தை பேசினால், உடனே நீ கஷ்டப்பட்டுக் கடைப் பிடித்த விரதமெல்லாம் வீணாகிவிடும். மறுபடியும் முதலிலிருந்து சட்டைகள், தைக்க வேண்டும். விரதமும் இருக்கவேண்டும்" என்று சொல்லி முடித்துவிட்டு, "நேர மாகிவிட்டது" என்று கூறிவிட்டு, அன்னமாக மாறிப் பறந்து போய்விட்டார்கள். சகோதரர்கள் பறந்து போகும் காட்சியைப் பார்த்துக்கொண்டே தேம்பித் தேம்பி அழுதாள் நல்லி.

"என் உயிர்போனாலும் போகட்டும். அவர்களைச் சாபத்திலிருந்து விடுதலை செய்வதுதான் என் 'கடமை' அதுதான் என் குடும்பத்தைக் காக்கும் 'கட்டுப்பாடு' என்று சபதம் பூண்டாள்." உடனே தன் சகோதரர்கள்கூறியதைப் போல், அன்றிரவை அந்த குடிசையில் தங்காமல் ஒரு பெரிய மரத்தின்மேல் ஏறிக் கழித்தாள்.

மறுநாள் காலையில் எழுந்து, காட்டில் கிடைத்த பழம் காட்டுக் கிழங்குகளைத் தின்றுவிட்டு, காட்டில் பல இடங் களில் திரிந்து ஆறு சட்டைகள் தைப்பதற்கு வேண்டிய காட்டு நார்கள் முதலியவைகளை எல்லாம் சேகரித்துக் கொண்டு, காட்டில் நல்லதோர் இடத்தில் தங்கி, சட்டை கள் பின்ன ஆரம்பித்தாள். யாரிடமும் பேசக்கூடாது என்றும் சிரிக்கக்கூடாது என்றும் சொல்லியதைத் திடமாக தன் மனதில் வைத்துக்கொண்டு, தன் தாயை நினைத்துக் கொண்டே தன் நோன்பைத் தொடங்கினுள். இரவும் பகலும் மரத்தின் உச்சியில் உட்கார்ந்து, பனியனைப் பின்ன ஆரப்பித்தாள். ஏனென்ருல் தரையில் இருந்தால் யாராவது தன்னிடம் பேசுவார்கள் என்றும், ஏதாவது விலங்குகள் வந்தால், தனக்கே தெரியாமல், ''ஐயோ அம்மா!'' என்று அலறி வாய்விட்டுக் குரல் கொடுக்க நேரிடும் என்றும், எவ்விதமான இடையூறும் தன் நோன் புக்கு வரக்கூடாது என்றும் கருதி அவள் மரத்தின் மேலேயே யாருக்கும் தெரியாமல் வாழ்ந்தாள் நல்லி.

நாட்கள், மாதங்கள், ஆண்டுகள் வேகமாக உருண் டோடின. 'கருமமே கண்ணுயினுர்' என்பதைப்போல் இரவும் பகலுமாக தன் அண்ணன்மார்களுக்காக ஒரே கவலையாகப் பனியனை அன்றுமுதல் பின்ன ஆரம்பித்தாள். அன்று நல்லிக்குக் கொலைக்குற்றம் சுமத்தி, தீ மூட்டும் பொழுதுதான் கடைசி சட்டையை பின்னி முடிபோட்டாள். தன்னுடைய நோன்பின் கடைசி நாளும் முடிவடைகிறது. அன்றுதான் எல்லோரிடமும் நல்லி பேசினுள்.

''உங்கள் தாய்தான் என் குழந்தைகளை உயிருடன் மறைத்து வைத்திருக்கிருர்கள். என்மேல் வீண்பழி சுமத்தி, என்னைக் கொலை செய்யவேண்டும் என்பது உங்கள் தாயின் ஆசை; காரணம் நான் ''ஊமைப் பெண்'' என்ற

ஓரே காரணம்தான்" என்று கூறி தேம்பித் தேம்பி அழுதாள்.
பிறகு எல்லோரும் அரண்மனைக்குச் சென்றார்கள்.

அதற்குள் இச்செய்திகளைக் கேள்விப்பட்ட அரசனின்
தாயார், மூன்று குழந்தைகளையும் வாசலில் நிற்க வைத்துக்
கொண்டு, அவர்களை வரவேற்கும்படி குழந்தைகளின்
மூலமே ஏற்பாடுகள் செய்தாள். "உங்களைப் பெற்ற
தாயாக இருப்பதால், தாயை ஒன்றும் செய்ய வேண்டாம்"
என்று காட்டிலேயே தன் கணவனிடம் உறுதிமொழி
வாங்கிக் கொண்டாள் நல்லி.

பிறகு அரசனைப் பின் தொடர்ந்து எல்லோருடனும்
புதிய ஆறு சகோதரர்களுடனும் ஊருக்குள் தன்
மாளிகையை நோக்கி வந்த சிறிது நேரத்திற்கெல்லாம்
"அரசன் வாழ்க! தலைவி வாழ்க!! குழந்தைகள் வாழ்க!!!"
என்று ஊர் மக்களின் கூக்குரல் கேட்டது.

"சில நூற்றாண்டுகள் எங்கள் பரம்பரை மக்கள் நிம்மதி
யாக மைசூரில் வாழ்ந்து வந்தார்கள். பிறகு மைசூரிலும்
பல அன்னியர்களின் படையெடுப்பிற்குப் பயந்து, எங்கள்
குடும்பங்களில் பல்லாயிரக்கணக்கான மக்கள், சிதறுண்டு
பல ஊர்களுக்கும், பல மலைகளுக்கும் 'கொடுங்கோல்
மன்னன் வாழும் நாட்டில், கடும் புலி வாழும் காடு
நன்றே' என்று நினைத்துப் போய்விட்டார்கள். இக்கதையின்
நினைவாகவே இந்தியாவில் பல இடங்களில், பெரிய பெரிய
பாறைகளில் ஒரு பெண்ணும், அப்பெண்ணைக் காப்பாற்று
வதைப்போல் ஆறோ, ஏழோ சகோதரர்களும் அம்புடனும்
சில இடங்களில் இருப்பதைப் போன்ற பல பாறைச்
சிற்பங்களைக் கண்டிருப்பீர்கள்" என்று மைசூரிலிருந்த
ஒரு பெரியவர் எடுத்துக் கூறினார்.

என்னையே மறந்து கதையைக் கேட்டுக்கொண்டிருந்த நான் நம் இந்தியாவில் மலைகளிலும் காடுகளிலும் நீங்கள் சொன்னதைப்போல் பல பாறைச் சிற்பங்களைக் கண்டிருக்கிறேன். ஆனால் இன்று அந்தந்த ஊர்களில் பற்பல கதைகளை அந்தந்தச் சிற்பங்களுக்கு அந்தந்த ஊர்மக்கள் கூறுகின்றனர். இந்தியாவில் கோடிக்கணக்கான நாடோடிக் கதைகள் இருக்கின்றன. அவை ஒவ்வொன்றும் ஏதோ ஒரு சரித்திரத்தை அடிப்படையாக வைத்தே உண்டானவைகள் என்று சரித்திர அறிஞர்கள் இன்று முடிவு செய்கின்றனர்.

